உ

கடவுள் துணை.

—*—

# கைவல்ய நவநீதம்

## மூலமும்-உரையும்.



இஃது,

நாராயணதேசிகர் மாணாக்கராகிய

தாண்டவராயசுவாமிகளால்

செய்யப்பட்டமூலமும்,

அதற்கிணங்கத்

திருத்துருத்தி-கரபாத்திரசுவாமிகள்பரம்பரைக்குரிய

நாகப்பட்டணம்

அருணாசலசுவாமிகள்மாணாக்கராகிய

பிறைசை

அருணாசலசுவாமிகளால்

செய்த உரைக்கிணங்க

க-வே-ஆறுமுகமுதலியாரால்

பரிசோதித்து,

அ-வீராசாமிநாயுடு அவர்களால்

தமது

சற்குணநிதியச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

பிரஜோற்பத்தி௵-தை௴

உ

## விளம்பரம்.

இதனால் சகலருக்குந் தெரிவிப்பதுயாதெனில் சென்னபட்டணம் பீங்கான்கடைக்கடுத்த பாபங்ரேட்டில் ௬௪ - வது நெம்பருடைய புத்தகஷாப்பிலும், கும்பகோணம் பெரியகடைத்தெருவிலிருக்கும் உப்புக்கடை நாராயணசாமிநாயக்கரிடத்திலும், மதுரை புதுமண்டபத்தில் புத்தகவியாபாரஞ்செய்யும் சண்முகபிள்ளையிடத்திலும், திரிசிரபுரம் தேரடிக்கடைத்தெருவிலிருக்கும் தி. சபாபதிபிள்ளையிடத்திலும், பாலக்காட்டில் ஷாப்புக்கடைவைத்திருக்கும் அப்பாவுபிள்ளையிடத்திலும், பலவித தமிழ்கிரந்தங்களும், அகஸ்தியர்முதலிய பெரியோர்கள் திருவாய்மலர்ந்தருளிய வைத்தியசாஸ்திரங்களும் - ஆழ்வாராதிகள் அருளிச்செய்த [illegible] வையப்பிரபந்தங்களும், கம்பராமாயணவசனமும் [illegible] சில ஜோதிஷசாஸ்திரங்களும், வேண்டியவர்கள் விலைக்[illegible]ப்பெற்றுக்கொள்ளலாம்.

இப்போது [illegible] நூதனமாய்ச்சிட்டிருக்கும்

புத்தகங்கள்.

மரணகண்டியென் [illegible]ம்-ஜோதிஷசாஸ்திரம்.

நவக்கிரகசிந்தாமணி [illegible]யென்னும்-ஜாதகசூடாமணி.

அச்சிட[illegible]கங்கள்.

| | |
|---|---|
| ஸ்ரீராமர்ம்காவிந்தம் | |
| மார்க்கண்டன்சரித்திர அம்மானை | |
| தேரையர்பெருநூல்காவியம் | [illegible] |
| தன்வந்திரிதைலம் | [illegible] |
| கணிதாமிர்தமென்னும்-ஜோதிஷசாஸ்திரம். | |
| அஸ்வனிதேவர்வைத்தியம் | [illegible] |
| தேரையர்கரசலை | [illegible] |
| சாவித்திரிநாடகம் | |

இங்ஙனம்.

அ - விராசாமிநாயுடு.

உ

ஓம்.

சிவமயம்.

# கைவல்யநவநீதம்

மூலமும்-உரையும்.

முதலாவது

## தத்துவவிளக்கப்படலம்.

### பாயிரம்.

அவதாரிகை

வடநூலாராய்ச்சியில் வல்லமையுள்ள விந்நூலாசிரியர் தாமடைந்த சுவானுபூதிப் பிரத்தியக்ஷத்தை யுலகஞ் சுலுவிலடைந் தானந்தாதீதமாகும்பொருட்டருளினாற் சொல்லப்புகுந்தவிந்நூ லினிதுமுடிய வதனந்தரங்கமான பிரஞ்ஞானம் பிரமமென்னு மிருக்குவேத மகாவாக்கியார்த்தமாக விளங்கு மத்துவித ஸ்வரூபத்தை விலட்சணமாகவுஞ் சலட்சணமாகவுங் குறிப்பான் றொடங்கி இச்செய்யுளிற் சமாதியின்கண் ணிதயமான விலட்சணமாகிய கூடஸ்த பிரமத்தைத் துதிக்கின்றார்.

பொன்னிலமாதராசை பொருந்தினர்பொருந்தாருள்ளந்
தன்னிலந்தரத்திற்சிவ சாட்சிமாத்திரமாய்நிற்கு
மெந்நிலங்களினுமிக்க வெழுநிலமவற்றின்மேலா
தன்னிலமருவுமேக நாயகன்பதங்கள்போற்றி.

(இதனதுபதப்பொருள்.)

பொன்-பொன்னினிடத்தும்—நிலம்-மண்ணினிடத்தும்—மாதர்-மடவாரிடத்தும்—ஆசைபொருந்தினர்-ஆசையுள்ள வஞ்ஞானிகளும்—பொருந்தார்-நிராசையுள்ள ஞானிகளுமாகிய விவர்களது உள்ளந்தன்னில்—இதயாம்பரத்தில்-அந்தரத்தின்—நான்குபூதங்களினும் நிறைந்திருக்கின்ற வாகாயத்தைப்போல—சிவசாட்சி மாத்திரமாய்-கூடஸ்தசைதன்னியமாத்திரமாக—நிற்கும்-நிறைந்திருக்கின்ற—எந்நிலங்களினும்-எவ்விதமான நிலைகளினும்—மிக்க-மேலாய—எழுநிலமவற்றில்-ஞானபூமிகளேழனுள்—மேலா தன்னிலமருவும்-முடிவாகிய துரியபூமியிற் பொருந்திய—ஏகநாயகன் ஒன்றாகிய-பிரமசைதன்னியத்தின்-பதங்கள்போற்றி-திருவடிகளை வணங்குவாம்—என்றவாறு.

### பதசாரம்.

சகலசமயங்களுக்கு மேலான்து ஞானபூமியென்பார், எந்நிலங்களினுமிக்க வெழுநிலமெனவும், அவைகளின்முடிவானது துரியபூமியென்பார், நன்னிலமெனவும், அதனிடமாகவிளங்குகின்றது துரியாதீதமென்பார் ஏகநாயகனெனவும், அஃதே துரியஸ்வரூபமாய்ச் சொரூபமுதல் ஸ்தம்பபரியந்தஞ் சர்வவியாபகமாய் வியாபித்துவிளங்குவதென்பார் (பொன்னிலமாதராசை பொருந்தினர்பொருந்தாருள்ளந், தன்னிலந்தரத்திற்சீவ சாட்சியாத்திரமாய்நிற்கு) மெனவும் யாவர்க்குஞ் சைதன்னியத்தின்றற்பிரகாசமான கூடஸ்தபிரமமேயிடமென்பார், பதங்களெனவும், அவைகளினயிக்கியமே யத்துவிதமென்பார்-போற்றியெனவுங்கூறினர், பொன்னிலமாதவென்பது, இச்சைமையவிளைப்பதற்குக் காரணமான வீடணாத்திரியமெனக்கொள்க புத்திரேடணையென்பதை யவனுரிமையிற்பெறுவதாகிய வாசின்மேல்வைத்துக்கூறினர்.

### இதன்றாற்பரியம்.

அகோசரமான நிரதிசயானந்தவஸ்து கோசரிக்குமிடத்துப்பூரணந்தமாகப் பிரவேசித்து நித்தியானந்த சாக்ஷாத்காரமாகச் சடித்து அதிலதீதமாக விளங்குவதைப் பிரமமாகவு மஃதேவிடயசம்பந்தங்களிற் றுக்கற்றிருந்ததைப் பிரத்யேகாத்மஸ்வரூபமாகவுந் துதித்ததாம்.

(அ-கை.) இச்செய்யுளின் முற்கூறிய சுபம் சைதன்னியமாகத் துதிக்கின்றார்.

ஈன்றளித்தழிக்குஞ்செய்கைக் கேதுவாமயனுய்மாலா
யான்றவீசனுமாய்த்தானே யனந்தமூர்த்தியுமாய்நிற்கும்
மூன்றமுத்தனுமாயின்பப் புணரியாதவனுய்நாளுந்
தோன்றியவிமலபோத சொரூபத்தைப்பணிகின்றேனே.

இ-ள். ஈன்று-சிருட்டித்து, அளித்து இரக்ஷித்து, அழிக்கும் சங்கரிக்கும், செய்கைக்கேதுவாம் இம்முத்தொழிற்கு மேதுவாகிய, அயனுய்-பிரமனுகியும், மாலாய்-விஷ்ணுவாகியும், ஆன்றவீசனுமாய்-மாட்சிமைகள்ளவுருத்திரனுகியும், அனந்தமூர்த்தியுமாய்-இன்னுமனேகவடிவங்களாயும், நிற்கும்-இருக்கின்ற மூன்றமுத்தனுமாய்- பூரணமானமுத்தனுகியும், இன்பப்புணரியாதவனுய்- ஆனந்தசமுத்திரத்திலுதிக்கு சூரியனுகியும், நாளுந்தோன்றிய-சதோதயமாகிய, விமலபோத- சுத்தசைதன்யமான, சொரூபத்தைப் பணிகின்றேன் - பிரமஸ்வரூபத்தைவணங்குகின்றேன்-எ-று.

[ப-ம்] தனது ஸ்புரணமெல்லாந் தனதுவடிவமாக விளக்குமென்பார் (அயனுய்மாலாயான்றவீசனுமாய்த்தானே யனந்தமூர்த்தியுமா

ய்) நிற்குமெனவும், பேரின்பவிளக்கமேசைதன்யமென்பார்- இன்பப்புணரியாதவனெனவும், உற்பத்தித் திதிலயங்களின் றிவிளங்கின சுத்தசைதன்னியமென்பார் (நாளுந்தோன்றிய விமலபோத சொரூப மெனவுங்கூறினர்) இ-ம். சர்வம்பிரமமயமென் னுமுபதேசவாக்கியப் படிக்கு ஸ்வரூபசாக்ஷாத்காரமான சுத்தசைதன்னியத்தைத் துதிசெய்ததாம்.

(அ-கை.) முற்கூறியவாத்மஸ்வரூபமே படிவமானவருளிறையைபதிதமாகவுஞ் சாக்ஷாத்காரமாகவுந் துதிக்கத்தொடங்கி யிக்கவியிலத்தமாகத் துதிக்கின்றார்.

எவருடையருளால்யானேயெங்குமாம்பிரமனென்பாற்
கவருடைப்புவனமெல்லாங்கற்பிதமென்றறிந்து
சுவருடைவெளிபோல்யானேசொரூபசுபாவமானேன்
அவருடைப்பதுமபாதமனுதினம்பணிகின்றேனே,

இ-ள். எவருடையருளால்- யாருடையகிருபையினுல், யானே- நானே, எங்குமாம்பிரமம்-எவ்விடத்திலுநிறைந்திருக்கின்ற பிரமஸ்வரூபமும், என்பால்- என்னிடத்தில், கவருடைப்புவனமெல்லாம்- தோற்றிவிரிந்திருக்கின்ற வுலகமுழுவதும், கற்பிதமென்றறிந்து - பொய்யென்றறிந்து, சுவரிடைவெளிபோய் - சுவரிடத்திருக்குங்ககனம்போல், யானே-நானே, சொரூபசுபாவமும்- பிரமசுபாவமும், ஆனேன்- ஆயினேன், அவருடை-அவரது, பதுமபாதம்- கமலமலர்போன்றதிருவடிகளை, அனுதினம்- எப்போதும், பணிகின்றேன்- வணங்குகின்றேன், எ-று. [ப-ம்] சர்வம்பிரமமென்பார்- எங்குமாம்பிரமமெனவும், சர்வமுமில்லையென்பார் கவருடைப் புவனமெல்லாங்கற்பிதமெனவும், யாவுந்தன்மயமாகவிளங்குவனவென்பார்- சொரூபசுபாவமானேனெனவுங்கூறினர். இ-ம். சர்வமாய்ச்சர்வமிலதாயிருக்கின்ற தன்னைத் தன்னிடத்துந் தானுயிருந்துவிளங்கிய குருதரிசத்தை வணங்கினதாம்.

(அ-கை) இச்செய்யுளிற் சற்குரு சொரூபத்தைச் சாக்ஷாத்காரமாகத் துதிக்கின்றார்.

என்னுடைமனதுபுத்தியிந்தியசரீரமெல்லா
மென்னுடையறிவினலேயிரவிமுன்னிமமேயாக்கி
யென்னுடைநீயுநானுமேகமென்றயிக்கியஞ்செய்ய
வென்னுடைகுருவாய்த்தோன்றுமீசனையிறைஞ்சினேனே.

இ-ள். என்னுடைய என்னுடைய, மனதுபுத்தி- மனப்புத்திகளாகியவந்தக்கரணமும், இந்தியம்- ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும், சரீரம்- தூலதேகமுமாகிய, எல்லாம்- இவைகளனைத்தும்- என்னுடையறிவினுல்- எனதாத்மஞானத்தினுல், இரவி முன்னிமமேயாக்கி- சூரியனைக்கண்டபனியைப்போலச்செய்து, என்னுடை- எனது சுபாவமானதும், நீயும்

நீயென்னுங்கூடஸ்தனும், நானும்- நானென்னும்பிரமமும், ஏகமென்றும்-ஒன்றேயென, ஐக்கியஞ்செய்ய-அத்துவிதமாக்க, என்னுடைகுருவாய்-என்தாசாரியராக, தோன்றுமீசனை- உதயமான வருளிறையை, இறைஞ்சினேன் வணங்கினேன்-எ-று. [ப-ம்] தனது பிரியத்தடிப்பே குருஸ்வருபமென்பர் என்னுடைகுருவெனவும், தன்னையிரட்சிக்குநிமித்தமுதயமானதருளிறையென்பார் ஈசனெனவுங்கூறினர். இ-ம். மனமுதலியதத்துவங்களனைத்தையுஞ் சமாதிஞானத்தினாற்கரைத்துத்தனிலுதயமாகுமானந்தம இப வஸ்துவிலிருந்தேயஃதென்று மத்துவிதஸ்வருபத்தைத் தரிசிப்பிக்கும்பொருட்டுப் பூரணமேயோருருவாகவெழுந்தருளிய வாசாரியனாவணங்கினதாம்.

(அ-கை.) தனதாசிரியனைவணங்கியவராருளினூற்கூறப்புகுந்தவிந்நூன்முகத்திற்கூறப்படும்விடயமு மிதனாலுண்டாகும் பயனுமிந்நூற்கு மிதிற்கூறப்படுவதாகியவிடயத்திற்குமுள்ளசம்பந்தமு மிதுகேட்டற்குரியவதிகாரியுமாகிய வனுபந்தசதுட்டயமிந்நூற்கருமாணுக்கணுணரும்பொருட்டுணாக்கவேண்டுதலினவற்றுளதிகாரியும்விடயமுமிச்செய்யுளிற்கூறுகின்றார். (ச)

அந்தமுநடுவுமின்றியாதியுமின்றிவான்போற்
சந்ததமொளிருஞானசற்குருபாதம்போற்றி
பந்தமும்விடுங்காட்டிப்பரந்தநூல்பார்க்கமாட்டா
மைந்தருமுணருமாறுவஸ்துதத்துவஞ்சொல்வேனே.

இ-ள். அந்தமுநடுவுமின்றி- யாதியுமின்றி ஆதிமத்யாந்தரகிதமாய், வான்போல-ஆகாயத்தைப்போல, சந்ததமொளிரும்-சதோதயமாய்விளங்குகின்ற ஞானசற்குருபாதம்போற்றி-ஞானாசாரியரதுபாதத்தைவணங்கி, பந்தமும்விடுங்காட்ட- பெத்தமுமுத்தியுமாகிய விவைகளின்ஸ்வருபத்தைத்தெரிவிக்கும்பொருட்டு பரந்த-விரிந்திருக்கின்ற, நூல்-வேதாந்தசாத்திரங்களை, பார்க்கமாட்டாமைந்தரும்- ஆராய்ந்தறியச்சத்தியில்லாதசிடரும், உணருமாறு- எளிதினுணரும்படி, வஸ்துதத்துவஞ்சொல்வேன் பரவஸ்துவினுண்மையைச்சொல்வேன்-எ-று-

மைந்தரென்பததிகாரியெனவும் வஸ்துதத்துவமென்பது-விடயமெனவுங்கொள்க. பரந்தநூல்பார்க்கமாட்டாமைந்தருமென்னுமும்மையாற்பார்ப்பவர்களென்பதுமாயிற்று [ப-ம்.] காலமுமவியவைநசிக்கினுந் தானசியாதிருத்தலின் அந்தமின்றெனவும், இடையின்றிதானே பூரணமாகவிளங்குதலின் நடுவின்றெனவும், எப்போதுந்தானுதயமாய்ப்பிரகாசித்தலின் ஆதியுமின்றியெனவும், இங்ஙனஞ்சதோதயமாக விளங்கியசச்சிதானந்தமான சுத்தசைதன்னியமே குருசொரூபமாதலால் சந்ததமொளிருஞானசற்குருவெனவும், தானதன்மயமாய்



திற்றலின்-பாதம்போற்றியெனவும் கல்வியல்லலெனக்கண்டவிதின் சாரமானதன்னை விசாவித்தறிந்துகொள்ள விருப்பமுற்றவர்க ளெளிதினுணரும்படியுணர்த்துதலின்- பரந்தநூல்பார்க்கமாட்டாமைந்தருமுணருமாறுவஸ்துதத்துவஞ்சொல்வேனெனவுங்கூறினர். (ரு)

(அ-கை-) இச்செய்யுளிற்சம்பந்தமும் பிரயோசனமுங் கூறுகின்றார்.

படர்ந்தவேதாந்தமென்னும்பாற்கடன்மொண்டுமுன்னூற்
குடங்களினிறைத்துவைத்தார்குரவர்களெல்லாங்காய்ச்சக்
கடைந்தெடுத்தளித்தேனிந்தக்கைவல்யநவநீதத்தை
யடைந்தவர்விடயமண்டின்றலைவரோபசியிலாரே.

இ-ள். படர்ந்த- விரிந்திருக்கின்ற, வேதாந்தமென்னும்- உபநிடதமென்னும், பாற்கடன்மொண்டு-க்ஷீரசமுத்திரத்தின் மொண்டு, முன்னூற்குடங்களில்-மூன்னூறாகியகடங்களில், குரவர்கள்- ஆசிரியர்கள், நிறைத்துவைத்தார்-பூரித்துவைத்தார்கள், எல்லாங்காய்ச்சி- அவைகளனைத்தையுங்காய்ச்சி, கடைந்து- கடைதல்செய்து, இந்தக்கைவல்யநவநீதத்தை, எடுத்தளித்தேன்-எடுத்துக்கொடுத்தேன், அடைந்தவர்- இதைப்புசித்தவர்கள் பசியிலார்-நித்தியதிருத்தியடைந்தவர்களாதலால், விடயமண்டின்று-விடயானந்தமென்னுமலமேப்புசித்து, அலைவரோ- பவத்திற்சுழல்வார்களோசுழலார்-எ-று.

கைவல்யநவநீதமென்பதுசம்பந்தமும், அடைந்தவர் பசியிலாரென்பது-பிரயோசனமுமாமெனக்கொள்க.

[ப-ம்.] வேதமுடிவானமகாவாக்கியமோர்மொழியாயினுமஃது சிட்டனுக்குப் போதமாகும்பொருட்டேண்டான சத்தவேதாந்தசாத்திரங்களுக்களவின்மையால்படர்ந்த வேதாந்தமென்னும் பாற்கடலெனவும் அவைகளிற்றங்களுக் கனுபவமாகும் பொருட்டாசிரியரெடுத்தறிவித்தவாக்கியங்களையெடுத்துக்கோடலை மொண்டெனவும்தாம் பெற்றபேறுலகம் பெறும்படிபாவினமாகிய நூல்களிலவ்வாக்கியங்களையமைத்தலை-முன்னூற்குடங்களினிறைத்துவைத்தார்குரவர்களெனவும் அப்பலசாத்திரங்களிலுள்ளவாக்கியங்களைச்சேகரித்தலை எல்லாமெனவும். அவ்வாக்கியங்களின் பூருவபட்சத்தை நீக்கி விசாரத்தாற் சித்தாந்தப்படுத்துதலை-காய்ச்சியெனவும், அச்சித்தாந்தத்தைக்குருவுபதேசத்தாற் சமாதியிலனுபவமாகவாராய்தலை-கடைந்தெனவும். அஃதிலுதயமானநிருவாணசுகத்தையெடுத்தோர் நூலாகத்தந்ததை - எடுத்தளித்தேனிந்தக்கைவல்யநவநீதத்தையெனவும், இதைப்பெற்றனுபவித்துத்திருத்தியடைதலை, அடைந்தவர் பசியிலாரெனவும், இவ்வாறுடையார் விடயவிச்சையினாற் சநநமரணத்திற் சுழலாரென்பதை- விடயமண்டின்ற

லைவரோவெனவுங் கூறினர். [இ-ம்] பிரமமென்னுங்காமதேனுவிற் சு ரந்தசுருதிகளென்னும்பாலை விசாரமென்னுமக்கினியாற் பூருவபக்ஷமென்னுநீர்சுண்டக்சித்தாந்தமென்னுமதாமிக்காய்ச்சி விருத்திஞான மென்னும்பினாகுத்திஉபதேசமென்னுமத்திட்டு- அனுபவவாராய்ச்சியென்னுங்கடைதலைச்செய்ததி லெழாநின்றகைவல்யமென்னு நவநீதத்தை- அனுபவித்தலைப்படைந்து நித்தியதிருத்தியான பசியிலார் விடயாநந்தமானமண்ணை புசியார்களெனக்கூறினதாம்.

(அ-கை.) உபாசனமூர்த்தியைவணக்கி யிந்நூலின் படலவகைகூறு கின்றார்

முத்தனைவேங்கடேசமுகுந்தனையெனையாட்கொண்ட
சத்தனைவணங்கிச்சொல்லுங்கைவல்யநவநீதத்தை
தத்துவவிளக்கமென்றுஞ்சந்தேகந்தெளிதலென்றும்
வைத்திருபடலமாகவகுத்துரைசெய்கின்றேனே. (௬)

இ-ள். முத்தனை-பாசங்களை நீக்கிநிற்பவனை, வேங்கடேசமுகுந்தனை- வேங்கடாசலபதியாகிய திருமாலை, எனையாட்கொண்டசத்தனை-என்னை யடிமைகொண்டயிறைவனை, வணங்கி பணிந்து, சொல்லுங்கைவல்யநவ நீதத்தை- உரைக்குங்கைவல்யநவநீதமென்னு ஞானசாத்திரத்தை, தத்துவவிளக்கமென்றும்- தத்துவவிளக்கமெனவும், சந்தேகந்தெளிதலென்றும்-சந்தேகந்தெளிதலெனவும், வைத்து- நாமந்தரித்து, இருபடல மாகவகுத்து-இரண்டுபடலமாகப்பிரித்து; உரைசெய்கின்றேன்- சொல் லுகின்றேன்-எ-று

(இ-ள்.) வெளிப்படை (பாயிரமுற்றியது.) (௭)

(அ-கை) முற்கூறியபடலங்களுள் தத்துவவிளக்கமென்னும்படல த்திற்றத்துவத்தைவிளக்குப்பொருட்டுமுதற்கண் அதுகேட்குமதிகாரிக்குரியசாதனசதுட்டயவிலக்கணங்கூறுகின்றார்.

நித்தியவநித்தியங்கணிண்ணயந்தெரிவிவேக
மத்தியவிகபரங்கள்வருபோகங்களினிராசை
சத்தியமூனாக்கவேண்டுஞ்சமாதியென்றறுகூட்ட
முத்தியைவிரும்புமிச்சைமொழிவர்சாதனமிந்நான்கே.

இ-ள். நித்தியவநித்தியங்கள்-நித்தியாநித்தியவஸ்துக்களின், நிண்ணயந்தெரிவிவேகம்- நிச்சயந்தெரிகின்றவிவேகமும், மத்திய- இடையிலுள்ள, இகபரங்கள்- இகலோகபரலோகங்களில், வருபோகங்களின்- உண்டாகின்றசெல்வங்களில், நிராசை-விராகமும், சத்தியமூனாக்கவேண் டும்-உண்மையாகச்சொல்லத்தகுந்த, சமாதியென்றறுகூட்டம்-சமாதி சட்கசம்பத்தியும். முத்தியைவிரும்புமிச்சை- முமூட்சுத்துவமுமாகிய இந்நான்கும்- இந்நான்கையும், சாதனம்-சாதனசதுட்டயமென்றுமொழிவர்-சத்துக்கள்சொல்லுவார்கள்-எ-று,



(அ-கை.) [இதுவுமது.]

சமந்தமம்விடல்சகித்தல்சமாதானஞ்சிரத்தையாறுஞ்
சமமகக்கரணதண்டந்தமம்புறக்கரணதண்ட
மமர்மனைவிபகாரங்களருகலேவிடலென்றுகு
மமர்செயுஞ்சுகதுக்காதியனுபவிப்பதுசகித்தல்.

இ-ள். சமம்-சமமெனவும், தமம்- தமமெனவும், விடல்- உபரதியெனவும், சகித்தல்-திதிட்சையெனவும், சமாதானம்- சமாதானமெனவும், சிரத்தை-சிரத்தையெனவும், ஆறும்- ஆறுகும், சமம்-சமமாவது, அகக்கரணதண்டம்-அந்தக்கரணத்தைத் தண்டித்தலாம், தமம்-தமமாவது, புறக்கரணதண்டம்-புறத்தின்கண்ணுள்ள தசேந்திரியங்களைத் தண்டித்தலாம், விடல்-விடலென்பது, அமர்மனைவிபகாரங்கள்-விரும்பப்பட்ட குடும்பவிபகாரங்களை, அருகலென்றும்-சுருங்கச் செய்தலாம், சகித்தல்-சகித்தலாவது, அமர்செயும்- கலகஞ்செய்கின்ற, சுகதுக்காதி இன்பதுன்பமுதலிவைகளை, அனுபவிப்பது- பிராரத்தமென்று சமசித்தராயனுவிப்பதாம்-எ-று. (௮)

(அ-கை.) [இதுவுமது.]

சிரவணப்பொருளைத்தானேசித்தஞ்சிந்திக்குமாறு
சரசமாய்வைக்குமித்தைச்சமாதானமென்பர்மேலோர்
பரமசற்குருநூலன்புபற்றலேசிரத்தையாகும்
வரமிகுசமாதியாறுவகையாஞ்சொற்பொருளிதாமே

இ-ள். சிரவணப்பொருளை - வேதாந்தசிரவணார்த்தங்களை, சித்தம்-உள்ளமானது, சிந்திக்குமாறு - பிரியமாய்ச்சிந்திக்கும்படி; சரசமாய் வைக்கும்-இனியதன்மையாகச்செய்யும், இத்தை- இதை, மேலோர்-மகான்கள், சமாதானமென்பர்-சமாதானமென்று சொல்லுவார்கள், பரமசற்குரு-மேலானவாசிரியரிடத்தும்-நூல்-வேதாந்தசாஸ்திரங்களிடத்தும், அன்புபற்றல்-அன்புவைத்தல், சிரத்தையாகும்-சிரத்தையாம், வரமிகு-மேன்மைமிகுந்த, சமாதி - சமாதியென்னும், ஆறுவகையாஞ்சொற்கு - ஆறுபிரிவான பதத்துக்கு, பொருளிதாம் - அருத்தமிதுவாம்-எ-று.

(இ-ங-க-ம்) அநித்தியவஸ்துக்களிவையெனக்கண்டு நித்தியவஸ்துவையடைதற்கேதுவான குணங்களையே சாதனசதுட்டயமாகக்கூறினதாம். (௯)

(அ-கை.) அச்சாதனங்களின்றியமையாச் சிறப்பினவெனவுமதனு லுண்டாகும் பயனிஃதெனவுங்கூறுகின்றார்.

சாதனமின்றியொன்றைச்சாதிப்பாருலகிலில்லை
யாதலாலிந்தநான்குமுடைந்தவர்க்கறிவுண்டாகு

நூதனவிவேகியுள்ளினுழையா துநுழையுமாகிற்
பூதசென்மங்கள்கோடிபுனிதனும்புருடனுமே.

இ-ள். சாதனமின்றி-சாதனமில்லாமல், ஒன்றை-ஒருகாரியத்தை,சாதிப்பார்-சாதிப்பவர்கள், உலகிலில்லை பூமியின்கணில்லை, ஆதலால் ஆகையால், இந்தநான்கும்-இச்சாதனசதுட்டயங்களை, அடைந்தவர்க்கு-பெற்றவர்களுக்கு, அறிவுண்டாகும்-ஞானேதயமாகும், நூதனவிவேகியுள்ளில் - புதியவிவேகியின்மனதில், நுழையாது-புகாது, நுழையுமாகில்-புகுமானால், பூத-இறந்தகாலத்துள்ள, சென்மங்கள்கோடி-அநந்தசநநங்களில், புனிதனும்புருடனும்-சித்தசுத்தியுள்ளவனாகிய பூமானும்— எ-று. [இ-ம்.] மெய்யுணர்வை யுணர்தற்கிச்சாதனங்களவசியம்வேண்டுமென்பதாம். (௰௧)

(அ-கை.) அச்சாதனமுள்ள சீடனது தீவிரதர பக்குவத்தையறிவித்தல்.

இவனதிகாரியானேனிந்திரியங்களாலு
புவனதெய்வங்களாலும்பூதபௌதிகங்களாலுந்
தவனமூன்றடைந்துவெய்யிற்சகித்திடாப்புழுப்போல்வெம்பிப்
பவமறஞானதீர்த்தம்படிந்திடப்பதறினனே.

இ-ள். இவன் இச்சாதனசதுட்டய முள்ளவனே, அதிகாரியானேன் இந்நூலுக்கதிகாரியாவான், இந்திரயங்களாலும் - ஆதியாத்மிகத்தினாலும், புவனதெய்வங்களாலும்-ஆதிதெய்விகத்தினாலும், பூதபௌதிகங்களாலும ஆதிபௌதிகங்களாலும், தவனமூன்றடைந்து தாபத்திரயாக்கினியையடைந்து, வெய்யிற்சகித்திடாப்புழுப்போல்-சூரியன் தீக்ஷணகிரணத்துக்குச் சகிக்கமாட்டாத கிருமியைப்போல, வெம்பி-வெப்-முற்று பவமறும்- பிறவியையொழிக்கின்ற, ஞானந்தீர்த்தம்படிந்திட- ஞானசாகரத்தின்மூழ்க, பதறினன் - தீவரமுற்றான்— எ-று. [இ-ம்] தாபத்திரயாக்கினியாகிய சங்காரதுன்பங்களுக் காற்றாதவனே யவைநீங்கிப் பிரமானந்த மடையவிரைவனென்பதாம், ()

(அ-கை.) அத்தீவிரதரபக்குவனுக்குசாசிரியர் தரிசனமாதல்,

ஆனவிம்மனைவிமக்களர்த்தவீடணைகண்மூன்றிற்
கானவர்வலையிற்பட்டுக்கைதப்பியோடுமான்போற்
போனவன்வெறுங்கையோடேபோகாதவண்ணஞ்சென்று
ஞானசற்குருவைக்கண்டுநன்றாகவணங்கினனே.

இ-ள். ஆனவிம்மனைவி-தனக்கானவிவ்வில்லாளும், மக்கள் - புத்திரரும், அர்த்தம்-தனமுமாகிய, ஈடணைகண்மூன்றில்-ஈடணாத்திரயங்களினின்றும், கானவர்வலையிற்பட்டு-வேடர்கள்வீசும்வலைக்குளகப்பட்டு, கைதப்பியோடுமான்போல்-தவறிச்செல்லு மரிணத்தைப்போல,



போனவன்-ஓடினவன், வெறுங்கையோடே - சும்மா, போகாதவண்ணம்-செல்லாதபடி, சென்று, உளத்திலன்பும்-புறத்திலாராதனைக் குரியவஸ்துக்களுங் கொண்டுபோய், ஞானசற்குருவைக்கண்டு ஞானசாரியனைத் தரிசனஞ்செய்து, நன்றாக- திரிகரணசுத்தியாக, வணங்கினன்-பூரித்துப்பணிந்தான், எ-று. [இ-ம்,] ஈடணாத்திரயமான துன்பங்களினின்று நீங்கியவிவனுக்கின்பவடிவமான சற்குருதெரிசனமானதென்பதாம். (௰௨)

(அ-கை.) தரிசனஞ்செய்த அவ்வாசிரியரிடத்திற் செய்யும்விண்ணப்பம்.

வணங்கிநின்றழுதுசொல்வான்மாயவாழ்வெனுஞ்சோகத்தா
லுணங்கினேனையனேயென்னுள்ளமேகுளிரும்வண்ணம்
பிணங்கியகோசபாசப்பின்னலைச்சின்னமாக்கி
யிணங்கியகுருவேயென்னையிரக்ஷிக்கவேண்டுமென்றான்.

(இ-ள்.) வணங்கிநின்று-பணிந்தெழுந்து நின்று, அழுதுசொல்வான்-கண்ணீர்சொரிய வழுதுரைப்பான், மாயவாழ்வெனும்-பொய்யானகுடும்பவாழ்க்கையென்னும், சோகத்தால்- துன்பத்தினால், உணங்கினேன்-வாடினேன், ஐயனே-எனதாசிரியரே, என்னுள்ளம், எனதகம், குளிரும்வண்ணம்- சீதளமாம்படி, பிணங்கிய - செறிந்திருக்கிற கோசபாசப்பின்னலை-பஞ்சகோசமாகிய பந்தப்பின்னலை, சின்னமாக்கி-தூளாக்கி, இணங்கியகுருவே-முத்தியையடைவிப்பதற் குடன்பட்டிருக்குமாசிரியரே, என்னை-அடியேனை, இரட்சிக்க வேண்டுமென்றான் - முத்தியிற்சேர்க்க வேண்டுமென்றுசொன்னான், எ-று. (இ-ம்.) அறிவின்மையால் வரும்பவத்துன்பத்தைநீக்கி, யறிவினால்வருமின்பத்தின் மூழ்கும்படிசெய்விக்க, வாசிரியனாவேண்டிக்கொடலாம். (௰௩)

(அ-கை) அங்ஙனம்விண்ணவின சீடனைப்பரிசோதித்தல்.

அன்னைதன்சிசுவையையனமைமீன்பறவைபோலத்
தன்னகங்கருதிநோக்கித்தடவிச்சந்நிதியிருத்தி
யுன்னதுபிறவிமாற்றுமுபாயமொன்றுண்டுசொல்வேன்
சொன்னதுகேட்பாயாகிற்றொடர்பவந்தொலையுமென்றார்.

(இ-ள்) அன்னை-தாயையொத்த, ஐயன்-குருவானவர், தன்சிசுவை-தன்னுடையசிடனை, ஆமை-கூர்மத்தைப்போல, தன்னகங்கருதி-தனதுள்ளத்தினினைத்து, மீன்-மச்சத்தைப்போல, நோக்கி - பூரணதிருஷ்டிவைத்து, பறவைபோல-பக்ஷியைப்போல, தடவி-அஸ்தமஸ்தகசையோகஞ்செய்து, சந்நிதியிருத்தி - எதிரிலிருக்கவைத்து, உன்னதுபிறவிமாற்றும்- உனதுபவத்துன்பத்தைநீக்கும், உபாயமொன்றுண்டு-தந்திரமொன்றிருக்கின்றது, சொல்வேன்- உபதேசிப்பேன், சொன்

னதைகேட்பாயாகில்-போதித்தவண்ணங்கேட்டு நடப்பாயாகில், தொடர்பவம்- சிருட்டிமுதற்றொடருஞ் சநநமானது, தொலையுமென்றார்- நீங்குமென்றருளினர்-எ-று, [ப-ம்.] விஷயத்தைநினைக்குமாகாமியத்தைக்கெடுத்தறிவையுணரும்படி சிந்தித்தாரென்பார்- ஆமைபோற்கருகியெனவும், முன்பந்தப்பட்டிருக்கின்ற சஞ்சிதமொழிந்து தனதிசத்தாமாத்திரமான திருஷ்டிவரும்படி பார்த்தாரென்பார்-மீன்போனோக்கியெனவும், பிராரத்தமாகவந்த பௌதிகவடிவம், ஹதித்தியானந்தமாக விளங்கத்தனது பூரணானந்தமாக வியாபித்ததென்பார் பறவைபோற் றடவியெனவுங்கூறினர். (இ-ம்) சமஸ்காரஞ்செய்த வாசிரியர் உபதேசிப்பதற்காக வுகமமதைகளுளவோவிலவோ வெனவாராய்ந்ததாம். (௰௫)

(அ-கை) ஆசிரியர்வசனத்தின் மகிழ்ந்தன்புகூர்தல்

தொடர்பவந்தொலையுமென்றுசொன்னதைக்கேட்டநேரந்
தடமடுமூழ்கினன்போற்சரீரமுங்குளிர்ந்துள்ளாறி
யடருமன்பொழுகுமாபோலானந்தபாஷ்பங்காட்டி
மடன்மலர்ப்பாதம்மீண்டும்வணங்கிநின்றீதுசொல்வான்.

(இ-ள்) தொடர்பவம்-தொன்றுதொட்டுத் தொடாநின்ற சநநமானது, தொலையுமென்று- நீங்குமென்று, சொன்னதை - அருளியதை, கேட்டநேரம்-கேட்டபோதே, தடமடு- விசாலமானதடாகத்தில், மூழ்கினன்போல-முழுகினவனைப்போல, சரீரமுங்குளிர்ந்து- தேகமுங்குளிர்ச்சியாய், உள்ளாறி-மனமுங்குளிர்ந்து, அடருமன்பு-நிறைந்தவன்பானது, ஒழுகுமாபோல்-கரையழித்துச் செல்லுவதுபோல், ஆநந்தபாஷ்பங்காட்டி-இரண்டுகண்களினு மாநந்தபாஷ்பம்பெருக, மடன்மலர்ப்பாதம்- இதழ்விரிந்த கமலமலர்போன்ற பாதங்களை, மீண்டும்-திரும்பவும், வணங்கி-பணிந்து, நின்று-எழுந்துநின்று, ஈதுசொல்வான்-இதனைச்சொல்லத் தொடங்குவான்-எ-று. (௰௬)

(அ-கை) சீடன்விண்ணப்பத்தினு லகமின்றென்பதைக் குறிப்பினுலறிதல்.

சொன்னதுகேட்கமாட்டாத்தொண்டனுனுஞ்சுவாமி
நின்னதுகருணையாலேநீயென்னையாளலாமே
யுன்னதுபிறவிமாற்றுமுபாயமொன்றுண்டென்றீரே
யின்னதென்றதைநீர்காட்டியீடேற்றல்வேண்டுமென்றான்.

(இ-ள்) சொன்னது-போதித்ததை, கேட்கமாட்டா-கேட்டுநடக்கமாட்டாத, தொண்டனுனும்- அடிமையானுலும், சுவாமி- என்தெய்வமே, நின்னதுகருணையால்-தேவரீரதுகிருபையினுல், நீயென்னை- தேவரீரடியேனை ஆளலாமே-கடுத்தாளலாமே. உன்னதுபிறவிமாற்றும்- உனதுபவந்தைக்கெடுக்கும், உபாயமொன்றுண்டென்றீரே-தந்திரமொன்றிருக்கிறதென்றருள்செய்தீரே. இன்னதென்று - இத்தன்மையதென்று, அதை-அவ்வுபாயத்தை, நீர்காட்டி-தேவரீர்காண்பித்து, ஈடேற்றல்வேண்டுமென்றான்-இரட்சிக்கவேண்டுமென்றான்-எ-று. (இ-உ-கம்) சீடனறிவுளவ்வளவுதல்லுமானுலு மதன்கண்ணுதயமான வானந்தத்திற்குவிளக்கமாக வதைவிளக்குதல் குருதரியமாதலாற்குருவருளேவிளக்கவேண்டுமென்பதாம். (௰௭)



(அ-கை.) அசம்பாவமின்றென்பதையறிந்தாத்ம ஸ்வரூபத்தையுபதேசிக்கத்தொடங்கல்.

அடங்கியவிருத்தியானென்றறிந்தபின்செறிந்தமண்ணின்
குடம்பையுட்புழுமுன்னாதங்குளவியின்கொள்கைபோலத்
தொடங்கியகுருவுமான்மசொரூபமேமருவவேண்டி
யுடம்பினுட்சிவனைப்பார்த்துபதேசமோதுவாரே.

(இ-ள்.) அடங்கியவிருத்தியானென்று விருத்தியடங்கினவனென்று, அறிந்தபின்-தெரிந்தபின்பு, செறிந்த- நெருங்கிய மண்ணின்குடம்பையுள்- மட்கூட்டினுள்ளிருக்கின்ற, புழுமுன்- கிருமியின்முன்னே, ஊதுங்குளவியின்- சத்திக்குங்குளவியினது, கொள்கைபோல்- தன்மையைப்போல, தொடங்கியகுருவும்-உபதேசிக்கத்தொடங்கியவர்சாரியரும், ஆன்மசொரூபம்- ஆத்மஸ்வரூபத்தை, மருவவேண்டி- சீடனடையும்பொருட்டு, உடம்பினுள்-தேகத்துள்ளிருக்கும், சிவனைப்பார்த்து-சீவனைநோக்கி, உபதேசமோதுவார்- உபதேசஞ்செய்வார்-எ-று.

(இ-ம்.) சீடனதுயதார்த்தஸ்வரூபத்தைப்பார்த்தவனத்தாகவிளங்கும்பொருட்டனுக்கிரகிக்கத்தொடங்கினதாம். (௰௮)

(அ-கை.) பவத்தைநீக்கும்பொருட்டதின்காரணமுமதினிற்றுஞ்சாலவளவையுங்கூறல்.

வாராயென்மகனேதன்னைமறந்தவன்பிறந்திறந்து
தீராதசுழற்காற்றுற்றசெத்தைபோற்சுற்றிச்சுற்றிப்
பேராதகாலநேமிப்பிரமையிற்றிரிவன்போது
மாராயுந்தன்னைத்தானென்றறியுமவ்வளவுந்தானே.

(இ-ள்.) என்மகனே-எனதுபுத்திரனே, வாராய்-கேளாய், தன்னைமறந்தவன்-தனதாத்மசொரூபத்தைமறந்தவன், பிறந்திறந்து-சநித்துமரித்து, தீராதசுழல்காற்றுற்ற- ஓயாதசுழல்காற்றிலகப்பட்ட, செத்தைபோல்-சருகைப்போல், சுற்றிச்சுற்றி- அப்பவத்திற்சுழன்றுசுழன்று, பேராதகாலநேமி- நீங்காதகாலசக்கிரத்தினது, பிரமையிற்றிரிவன்-சுழ

ந்சியிற்சஞ்சரிப்பன், போதமாராயுந்தன்னை - அறிவினுலாராய்ந்ததீயு மாத்மாவை, தானென்று பிரமமென்று, அறியுமவ்வளவும்-தெரியுமட்டு ம்-எ-று. (இ-ம்.) அறிவின்மையா னுண்டான பவமறிவுதயமாய்த்தன் னைத்தானெனவுணருமட்டுமிருக்குமென்பதாம். (௰௯)

(அ-கை.) மகாவாக்கியவுபதேசப்பிரகாரம் அறியவேண்டியபொரு ளிதுவெனவறைதல்.

தன்னையுந்தனக்காதாரத்தலைவனையுங்கண்டானேற்
பின்னையத்தலைவன்றானுய்ப்பிரமமாய்ப்பிறப்புத்தீர்வ
னுன்னைநீயறிவாயாகிலுனக்கொருகேடுமில்லை
யென்னைநீகேட்கையாலேயீதுபதேசித்தேனே.

(இ-ள்) தன்னையும்-கூடஸ்தனையும், தனக்காதாரத்தலைவனையும்-தனக் கிடமானபிரமத்தையும், கண்டானேல்-தரிசிப்பானாயின், பின்னை-பின்பு, அத்தலைவன்றானும்-அப்பிரமமேகூடஸ்தனும், பிரமமாய்-அக்கூட ஸ்தனேபிரமமாய், பிறப்புத்தீர்வன்- சநநநீங்குவான், உன்னைநீயறிவா யாகில்-உனதத்துவிதஸ்வரூபத்தை, நீதெரிந்துகொள்வாயானால், உன க்கொருகேடுமில்லை-உனக்கொருகெடுதியுமில்லை என்னை- எம்மை, நீகே ட்கையால்-நீகேட்டின்றபடியால், ஈதுபதேசித்தேன்- எனதனுபவ மானவிதைச்சொன்னேன்-எ-று.

[ப-ம்.] நசிப்பதானதேகமுதற்பிரகிருதிபரியந்தம் - ஒவ்வொன்றி னுநசியாமற்றானுய்ச்சேடித்திருக்கின்ற பிரத்தியேகாத்ம லக்ஷதன்னி யத்தைத் தன்னையெனவும் அங்ஙனஞ்சேடித்ததானே அவைகளனை த்திலும் பூரணமானபிரமசைதன்னியமாய் விளங்குவதைத்தலைவனெ னவும்அஃதேயிஃ திஃதேயஃதாய் விளங்குஞ்சுத்தசைதன்னியந்தானு குவதை-பின்னைத்தலைவன்றானுய்ப்பிரமமாயெனவும்,அங்ஙனம்விளங் கியவனுபவத்திற்குதயாஸ்தமனமின்மையாற் சநநமரணமின்றென்ப தை-பிறப்புத்தீர்வனெனவுங்கூறினர். (௨௰)

(அ-கை) தன்னையறிய வேண்டுமென்பதைச் சர்வத்திர சாதாரண மாகக்கொள்ளுந் தேகமெனக்கருதி யஃதை யறிந்தவர்கள் பவநீங்கா மையா யஃதினுண்மையை யுணரவினுதல்.

என்னைத்தானசடனுகவெண்ணியேசொன்னீராயா
தன்னைத்தானறியாமாந்தர்தாணியிலொருவருண்டோ
பின்னைத்தானவர்களெல்லாம்பிறந்திறந்துழலுவானே
னின்னைத்தானம்பினேற்குநிண்ணயமருளுவீரோ,

(இ-ள்.) என்னைத்தானசடனுக- என்னையானறியாதவனுக, எண்ணி யோ சொன்னீர்- கருதியோசொன்னீர், ஐயா-எனதாசிரியரே, தன்னைத் தானறியாமாந்தர்- தன்னைத்தெரியாதமனிதர், தாணியிலொருவருண் டோ-பூமியின் கண்ணொருவருண்டோ, பின்னை-பின்பு, அவர்களெல் லாம்-அவர்களனைவரும், பிறந்திறந்துழலுவானேன்-சநநமரணத்திற்சு ழலுவானேன், நின்னை-தேவரீரை, நம்பினேற்கு-நம்பினவடியேனுக்கு நிண்ணயமருளுவீர்- நிச்சயத்தைச்சொல்வீர், எ-று. (ப-ம்,) ஆசிரியர் தனதனுபவப்படி தேகத்திற்றானுயிருந்த தன்னையறியவேண்டுமெ ன்ன வஃதனுபவமாகாதசீடன் றேகமேதானெனக்கருதி யென்னை யானறியவில்லையாவென்று னென்பார் என்னைத்தானசடனுகவெண் ணியோ சொன்னீரெனவும்,இங்ஙனமறிந்தயாவர்க்குஞ் சநநமரணமே னீங்கவில்லை யென்பானென்பார் பின்னைத்தானவர்களெல்லாம் பிறந் திறந்துழலுவானேனெனவும், தானென்ப திஃதெனவுண்மையாகத் தெரிவிக்கவேண்டுமென்பானென்பார் நிண்ணயமருளுவீரெனவுங் கூறினர், (இ-ம்) தானென்பதனுபவமாகுப்பொருட்டதனியல்பை வி சாரித்ததாம், (௨௧)

(அ-கை,) தானென்ப திஃதெனக்கூறியுந் தோன்றாததற்காக வாசி ரியர் வருத்தமுற்றிரங்குதல்,

இன்னதுதேகந்தேகியிவனெனவுணர்வன்யாவ
னன்னவன்றன்னைத்தானென்றறிந்தவனுகுமென்றார்
சொன்னபின்றேகியாரிச்சூலமல்லாமலென்றான்
பின்னதுகேட்டவையர்பீடையுநகையுங்கொண்டார்,

(இ-ள்,) தேகம்-சரீரமானது. இன்னது-இத்தன்மையுள்ளது,தேகி- சரீரி இவனென இத்தன்மையுள்ளவனென்று,உணர்வன்யாவன் அறிகி ன்றவனெவனோ, அன்னவன்-அவன், தன்னை கூடஸ்தனை, தானென்று- பிரமமென்று, அறிந்தவனுகுமெனறார்-தெரிந்தவனுவனென்றார், சொ ன்னபின்-அங்ஙனம்போதித்தபின்பு இத்தூலமல்லாமல் இச்சரீரமன் றி,தேகியார்என்றான்-சரீரியாரென்றுகேட்டான்,பின் பின்பு, அது- அவனனுபவத்தை, கேட்டவையர்- கேட்டவாசாரியர், பீடையும்-து ன்பமும், நகையும்-புன்னகையும்,கொண்டார்-கொண்டனர்-எ-று(ப-ம் ன)த்தேகந்தானு யிருப்பவனை யெங்ஙனமுய்விக்கலாமென வாலோசி க்கு மனவருத்தமும், தேகந்தானென வறிந்தவன் றேகியையுந் தா னென்றறிவனென்று மகிழ்ச்சியுங்கொண்டானென்பார்-பீடையுநகை யுங் கொண்டாரெனக்கூறினர், (இ-ம்,) ஆசிரியர் தனதனுபவமான சுத்தசைதன்னியத்தைத் தானென்றுகூறச் சீடன் றனக்கனுபவமா ன தேகந்தானன்றித் தான்வேறுளதோவென வினவினதாம், (௨௨)

(அ-கை) தேகந்தானன் றதன்கண்ணுள்ளதேகியே தானென்பது தனக்குத்தானேதோன்ற அவத்தாத்திரயங்களை யறிகின்றவன் யாரெ ன வாசிரியர்வினுதல்,

தேகமல்லாமல்வேறேதேசிகியார்காணேனென்றுப்
மோகமாங்கனவில்வந்தமுளைத்திடுமவனுர்சொல்லாய்
சோகமாங்கனவுதோன்றுச்சுழுத்திகண்டவனுர்சொல்லா
யாகநீநனவிலெண்ணுமறிவுதானேதுசொல்லாய்,

(இ-ள்,) தேகமல்லாமல்-சரீரத்தையன்றி,வேறே-வேறுயுள்ள,தேசி யார்-சரீரியார்,காணேனென்றுப்-யான்கண்டிலேனென்றுப், (அங்ஙன மாயின்) மோகமாம்-மோகமாகிய, கனவில்வந்துமுளைத்திடுமவனுர்-சொற்பனத்திலுதித்தவன்யாவன்,சொல்லாய் இதனைநீசொல்,சோகமா ங்கனவுதோன்றா-பயக்கமாகிய சொற்பனந்தோன்றாத,சுழுத்திகண்ட வனுர் சுழுத்தியிற்சூனியமாகத் தரிசித்தவனுர்,சொல்லாய்-சொல்வாய், ஆக-ஆகியவிவ்விரண்டையும்,நீநனவிலெண்ணும்- நீசாக்கிரத்திலினை க்கும்,அறிவுதானேதுசொல்லாய் அறிவுயாது-எ-று.(இ-ம்.) தேகத்தை த்தவிர தேசியொருவனுளனென்பது தோன்றவினதாம். (௨௩)

(அ-கை.) தேகத்தின்கண் ணவத்தைகளை யறிகின்றதேசியொரு வனுளனெனத் தோன்றுகின்றது அதனை விளக்கவேண்டுமெனல்.

நனவுகண்டதுநான்கண்டநனவுளநினைவுநீங்கிக்
கனவுகண்டதுமிரண்டுஞ்சாருதசுழுத்திகண்டுந்
தினமனுபவித்தலொக்குந்தெரியவுமில்லைசற்றே
புனைதினிலுதிக்கும்பின்னைமறைக்குமதருளுவீரே.

(இ-ள்.) நனவுகண்டதும்-சாக்கிராவத்தையிற்பார்த்ததும்-நான்கண் ட-யான்பார்த்த,நனவுளநினைவுநீங்கி சாக்கிரத்திலுள்ளநினைப்புநீங்கி, க னவுகண்டதும்-சொற்பனத்திற்பார்த்ததும்,இரண்டுங்காணு- இவ்வி ருவவத்தைகளின்றெழிலின்றிய,சுழுத்திகண்டும்- சுழுத்தியிற் சூனி யத்தைப்பார்த்ததும்,தினமனுபவித்தல்- நடோறுமனுபவிப்பதனுல் ஒக்கும்-தேவரீர், தேசியொன்றிருக்கின்றனென்றருளியதொவ்வும், தெரியவுமில்லை அதுபிரத்தியக்ஷமாகவுமில்லை, சற்றேமனதிலுதிக்கும்-சற்றுமனதினிற்றோற்றுகின்றது, பின்னையறைக்கும்- பின்புமறைகின் றது,அது-அஃதின்ஸ்வரூபத்தை,அருளுவீர்- கிருபைசெய்வீர் எ-று.கண்டதெனபது-கண்டுமெனவும், மறையுமென்பது-மறைக்குமெ னவுந்திரிந்துநின்றன. (இ-ம்.) தானென்பது தேகமன்று தேசியெ னவவத்தைகளை முன்னிட்டறிவிக்கவொருவாற்றானறிந்த சீடனஃது மின்மினிப்போலத் தோற்றிமறைதலி னதன்யதார்த்தஸ்வரூப மிஃ தெனவிளங்க வனுக்கிரகிக்க வேண்டிக்கோடலாம். (௨௪)

(அ-கை.) முன்றேகத் தானுயிருந்தவனைக் கிஞ்சித்து விலட்சணப் படுத்திப் பின்னடந்த விலக்கணையான்முன்பு சடமான தேசவிலக்க ணங்கூறி யஃதைநீக்கிப் பின்சித்ததானுன தேசியிலக்கணங் கூறத் தொடங்கல்.

நாலத்தின்மரங்கள்காட்டித்தனிப்பிறைகாட்டுவோர்போ
லாலத்திலுடுக்கள்காட்டியருந்ததிகாட்டுவார்போற்
றூலத்தைமுன்புகாட்டிச்சூக்குமசொரூபமான
மூலத்தைப்பின்புகாட்டமுனிவரர்தொடங்கினுரோ.

(இ-ள்) நாலத்தின்-பூமியின்கண்ணுள்ள, மரங்கள்காட்டி - தருக்க ளைக்காண்பித்து, தனி-பிறைகாட்டுவார்போல்-தனியானமூன்றும்பி றையைத்தரிசிப்பிப்பவர்போல, ஆலத்திலுடுக்கள்காட்டி - ஆகாய த்தின்கணுள்ள தாரகைகளைக்காட்டி—அருந்ததி காட்டுவார்போல்-அருந்ததியைக்காண்பிப்பவர்போல, தூலத்தைமுன்புகாட்டி - தூல மாயுள்ளதத்துவங்களை முன்னேதரிசிப்பித்து, சூக்குமசொரூபமா ன-அணுவுக்கணுவான, மூலத்தை-காரணத்தை—பின்புகாட்ட-பின் றரிசிப்பிக்க, முனிவரர்தொடங்கினுர் - ஆசிரியராரம்பித்தார்—எ-று, ஆலமென்பது-ஆகுபெயர்.

இ-ம்-போதமாகும்படி போதிக்குமரபுகூறினதாம். (௨௫)

(அ-கை) தானுகிய சித்தைத் தனியே தரிசிப்பிக்கு நிமித்தத் தனைச் சகசசிவபரமாகத் தோற்றுவிக்கு மாரோபத்தியையும் அத்த விதமான கூடஸ்தமமாகத் தோற்றுவிக்கு மபவாதயுத்தியையுங் கூ றத்தொடங்கல்.

அத்தியாரோபமென்று மபவாதமென்றுஞ்சொல்லு
முத்தியாற்பந்தப்வீடென்றுணக்கும்வேதாந்தமெல்லா
மித்தையாமாரோபத்தாற்பந்தமாம்பவாதத்தான
முத்தியாமிவ்விரண்டின்முந்தியாரோபங்கேளாய்.

(இ-ள்) அத்தியாரோபமென்றும் - அத்தியாரோபமென்று சொல் லும்—உத்தியாற்பந்தம்-சொல்லுகின்ற யுத்தியினுற்பந்தமெனவும் அபவாதமென்றுஞ்சொல்லுமுத்தியால் - அபவாதமென்றுசொல்லு கின்ற யுத்தியினுல்—வீடென்றும்-வீடெனவும்—வேதாந்தமெல்லா ம்-உபநிடதமனைத்தும்—உணக்கும்-சொல்லும்—ஆதலால்-மித்தை யாமாரோபத்தால் - இல்லாதவாரோபத்தால்—பந்தமாம்-பெத்தமா ம்—அபவாதத்தால்-அபவாதத்தினுல்—முத்தியாம்-வீடாம், இவ்விர ண்டில்-இவ்விருவகையில்—முந்தியாரோபங்கேளாய்-முன்பாரோப த்தைக்கேட்டாய்—எ-று.

(இ-ம்) அத்தியாரோப பவவாதவிலக்கணங்கூறினதாம். (௨௬)

(அ-கை) அத்தியாரோபவிலக்கணத்தைத் திட்டாந்தரூபமாகக் கூ றுதல்.

ஆரோபமத்தியாசங்கற்பனையாவவெல்லா
மே,ரோர்வஸ்துவினைவேறேயோரோர்வஸ்துவெனவேற்

ஞருடுபணியாத்தோன்றனாகத்திறியிற்றோன்ற
னீருகொனற்றோன்றனிரந்தாம்வெளியிற்றோன்றல்.

(இ-ள்) ஆரோபம்-ஆரோபமென்றும், அத்தியாசம் - அத்தியாசமென்றும், கற்பனை-கற்பனையென்றும், ஆவவெல்லாம்- ஆவனவனைத்தும், ஓர்வஸ்துவினை-ஒவ்வொருபொருளை, வேறே-வேறாக, ஓர்வஸ்துவென-ஒவ்வொருபொருளென—ஓர்தல்-அறிதலாம், நாருடு - பழுதையினிடத்த—பணியாய்த்தோன்றல் - சர்ப்பந்தோற்றுதல்—தறியில் கட்டையினிடத்த—நாகத்தோன்றல்-மனுகத்தோற்றுதல், கானலாடு-கானலினிடத்த—நீர்தோன்றல்- சலந்தோற்றுதல்—வெளியில் ஆகாயத்தினிடத்தில்—நிரந்தரந்தோன்றல் தாமின்மை தோற்றுதலும்—எ-று. (உஎ)

(அ-கை) முற்கூறியதிஷ்டாந்தம்போலச் சுத்தசைதன்னியத்திற் சுகசீவபரந்தோற்றமெனல்.

இப்படிப்போலநாமரூபங்களிரண்டுமின்றி
யொப்பமாயிரண்டற்றொன்றாயுணர்வெளிநிறையாய்நிற்றி
மப்பிரமத்திற்றோன்றுமைம்பூதவிகாரமெல்லாஞ்
செப்பியகற்பிதத்தாற்செனித்தவென்றறிந்துக்கொள்ளே.

(இ-ள்) இப்படிபோல- இவைபோல, நாமரூபங்களிரண்டுமின்றி- நாமரூபமான விருதன்மைகளின்றி—ஒப்பமாய்- ஒற்றுமையாயும்—இரண்டற்றொன்றாய் - அவிதமின்றியேகமாகியும் உணர்வெளிநிறைவாய்-ஞானப்பிரகாசநிறைவாயும், நிற்கும்- இருக்கின்ற-அப்பிரமத்திற்றோன்றும்-அப்பிரமத்திற்றோற்றுகின்ற,ஐம்பூதவிகாரமெல்லாம்- பஞ்சபூதரூபவியவேறுபாடனைத்தும்,செப்பிய-சொல்லாநின்ற, கற்பிதத்தால்-ஆரோபத்தால், செனித்தவென்று- உண்டானவைகளென்று, அறிந்துகொள்-தெரிவாய்-எ-று,

(இ-உ-க-ம்.) உள்ளதானசத்திலில்லாததானசகசீவபரந்தோன்றுமுறைமையிங்ஙனமென்றுகூறினதாம், (உஅ)

(அ-கை,) பிரமத்திற்கற்பிதமாகச்சிவேஸ்வரசகத்துண்டான முறையை யிருவகையாகக்கூறத்தொடங்கி முன்னமொருவகையைக், கூறுகின்றார்,

அதுதானெப்படியென்றக்காலநாதியாஞ்சீவரெல்லாம்
பொதுவானசுழுத்திபோலப் பொருந்துமவ்வியத்தந்தன்னி
லிதுகாலதத்துவப்பேரீசனுட்பார்வையாலே
முதுமூலசுபாவம்விட்டுமுக்குணம்வியத்தமாமே.

(இ-ள்) அதுதானெப்படியென்றக்கால் - அக்கற்பனையெப்படியுண்டாயிற்றெனின், உபாதியாஞ்சீவரெல்லாம்-சித்ரூபமானசீவர்களனைவரும், பொதுவானசுழுத்திபோல-சாதாரணமான சுழுத்தியைப்போற்குணியமாயிருக்கின்ற, அவ்வியத்தந்தன்னில் - மூலப்பிரகிருதியில், பொருந்தும்-அமையும், இது-இவ்வவ்வியத்தம், காலதத்துவப்பேர்-நாமங்காலதத்துவமாம், ஈசனுட்பார்வையால் - ஈஸ்வரன் சமுகத்தினால், முதுமூலசுபாவம்விட்டு முதன்மையானபிரகிருதியினின்றுநீங்கி. முக்குணம்வியத்தமாம்-மூன்றுகுணங்களும்வெளிப்படும்-எ-று. (உகூ)

(அ-கை) முக்குணவியல்புகூறல்.

உத்தமவெளுப்புநீலமுபயமாஞ்சிவப்புமாகுஞ்
சுத்தசத்துவந்தமத்தோடசுத்ததத்துவப்பேர்சொல்லுஞ்
சத்துவமழுக்கிருட்டாச்சாற்றுமுக்குணமுமூன்று
மொத்துளவெனினுந்தம்முளொருகுணமதிகமாம்மே.

(இ-ள்) உத்தமவெளுப்பு-முதலானவெண்ணிறமும், உபயமாஞ்சிவப்பு-இரண்டாவதானசெம்மைநிறமும், நீலம்-மூன்றாவதானகருநிறமும், ஆகும்- ஆகாநின்ற, சுத்தசத்துவம்- தூய்தானசத்துவகுணமும், அசுத்ததத்துவம்-ரசோகுணமும், தமத்தோடு-தமோகுணமுமென, பேர்சொல்லும்-நாமங்கூறப்பெறும்—சத்துவம்- சத்துவமானசுத்தமும்—அழுக்கு-அழுக்கும், - இருட்டா- இருட்டுமாக—சாற்றும்-சொல்லப்பட்ட, முக்குணமும்-இம்மூன்றுகுணங்களும், மூன்றுமொத்துளவெனினும், மூன்றுமொத்திருப்பவைகளாயினும், தம்முள்- அவைகளுள், ஒருகுணமதிகமாம்-இரண்டடங்கியொருகுணம்விசேடித்துநிற்கும்.

(இ உ-க-ம்.) வித்தைதவடிவானசீவர்கள்பந்தப்பட்டிருக்குந்தங்கண்மறவியானவவ்வியத்தத்திற் காலதத்துவமு முக்குணங்களும்வியத்தமாயினவென்பதாம், (௩௰)

(அ-கை-,) மற்றொருவகைசிருட்டியின்மரபுகூறத்தொடங்கல்.

ஒருவழியிதுவாமித்தையொருவழிவேறாச்சொல்வார்
மருவுமவ்வியத்தந்தானேமகதத்வமாகுமென்று
மருண்மகதத்துவந்தானகங்காரமாகுமென்றங்
கருவகங்காரமூன்றாய்க்காட்டியகுணமாமென்றும்,

(இ-ள்) ஒருவழியிதுவாம்-ஒருமார்க்கமிதுவாம், இத்தை-இதையே, ஒருவழிவேறாச்சொல்வார்மற்றொருமார்க்கமாய்ச்சொல்வார்கள் அஃதெங்ஙனமெனின்-மருவுமவ்வியத்தந்தானே-பொருந்தியவவ்வியத்தமே, மகதத்வமாகுமென்றும்-மகதத்துவமாமெனவும் அருண்மகதத்துவந்தான்-சொல்லியமகதத்துவமே, அகங்காரமாகுமென்றும்-அகங்கா

ரதத்துவமாமெனவும், கருவகங்காரம்-கருவாகியவகங்காரமே,மூன்றுப்காட்டியகுணமாமென்றும்மூன்றுப்த்தெரிவித்தகுணங்களாமென வுஞ்சொல்லப்படும்-எ-று

சுத்தசைதன்னியமான தன்னையெதிரிட்டறியவுதயமானவறிவுக்கு முன்புண்டானமறதியே-அவ்வியத்தமானபிரகிருதியெனவும் அவ்வறிவுபகிர்முகவுன்முகமானவிடமே மகதத்துவமெனவும்- அஃதுதன்னிடத்துப்பிரதிபலமான ஆரோபத்தைநானென்பதே- அகங்காரதத்துவமெனவும்-அதனிர்ச்சலமே-சத்துவமெனவும் - அதன்சலனமே-ரசசெனவும்-அதன்மக்கினமேதமசெனவுமுண்டானவுகடத்திருட்டியை நீதனதனுபவத்திற்காண்க. (௫௧)

(அ-கை) மேற்கூறிய குணங்களிற் சகசீவபரவுற்பத்தியை கூறுவான்றொடங்கிமுன்னர்பரனுற்பத்தியைக்கூறுகின்றார்

இக்குணங்களிலேவிண்போன்றிருக்குஞ்சிற்சாயைதோன்று
முக்குணங்களினுந்தூய்தாமுதற்குணமாயையாகு
மக்குணப்பிரமச்சாயையந்தரியாமிமாயை
யெக்குணங்களும்பற்றுதோணிமித்தகாரணமாமீசன்,

(இ-ள்) இக்குணங்களில்-இம்மூன்றுகுணங்களில்.விண்போன்று-ஆகாயம்போலஇருக்கும் -நிரவயமாயிருக்கின்ற,சிற்சாயைதோன்றும்-சிற்சாயை பிரதிபலிக்கும், முக்குணங்களினும்-மூன்றுகுணங்களினும்.தூய்தாமுதற்குணம்-சுத்தமாகியசத்துவகுணம்மாயையாகும்-மாயையாம்,அக்குணம்-அந்தசத்துவத்திற்பிரதிபலித்த,பிரமச்சாயை-பிரமப்பிரதிபலனமேஅந்தரியாமி-அந்தரியாமியாம்மாயையெக்குணங்களும்-மாயாசம்பந்தமானவெந்தக்குணங்களும்,பற்றுதோன்-பற்றுதவனே,நிமித்தகாரணமாமீசன்-பஞ்சபூதமுதிசமுதலியசிருட்டிக்குநிமித்தகாரணமாகிய விசனும்—எ-று. (௫௨)

(அ-கை) ஈசன்காரணசரீரவுற்பத்தியையுஞ் சீவனும்பத்தியையுங் கூறல்

ஈசனுக்கிதுசுழுத்தியிதுவேகாரணசரீரங்
கோசமானந்தமாகுங்குணமிராசதமவித்தை
தேசறுமவித்தைதோறுஞ்சிற்சாயைசிவகோடி
நாசமாமுயிர்க்கப்போதுநாமமும்பிராஞ்ஞனே,

(இ-ள்)ஈசனுக்கு-இவ்விஸ்பரனுக்கு, இது-இம்மாயையே,சுழுத்தி-சுழுத்தியவத்தையாம்,இதுவே-இஃதே,காரணசரீரம்-காரணசரீரமாம் கோசமானந்தமாகும்-இதுவேயானந்தமயகோசமாம்குணமிராசதம்-ரசோகுணம், அவித்தை-அவித்தையாம், தேசறுமவித்தைதோறும்-வி



டக்கமின்றியவவித்தைசடோறும்பிரதிபலித்த,சிற்சாயை-ஞானப்பிரதிபலனமே.சிவகோடி-சீவராசிகளாம், நாசமாம்-பாலவயுமிற்ந்தசுழுத்தியையபிமானிக்கும், உயிர்க்கு-சீவர்களுக்கு-அப்போது-அவ்வவசரத்தில்- நாமமும்பிராஞ்ஞனும்-பெயர்பிராஞ்ஞனும்-எ-று. (௫௩)

(அ-கை.) சீவனதகாரணசரீரவும்பத்தியைக்கூறுகின்றார்

அழுக்கொடுபற்றுஞ்சீவர்க்கதுவேயானந்தகோசஞ்
சுழுத்திகாரணசரீரஞ்சொன்னவிப்மட்டுமோக
முழுக்குணத்திரண்டால்வந்தால் மூலவாரோபஞ்சொன்னோம்
வழுத்துருக்குமவாரோபவழியுநீமொழியக்கேளாய்

(இ-ள்) அழுக்கொடுபற்றும்-அவித்தையைச்சேர்ந்திருக்கின்ற,சீவர்க்கு-சீவர்களுக்கு,அதுவே-அவ்வவித்தையே-ஆனந்தகோசம் ஆனந்தமயகோசமாம், சுழுத்தி-அஃதேசுழுத்தியவத்தையாம்,காரணசரீரம்-அஃதேகாரணசரீரமாம், சொன்னவிம்மட்டும்-சொல்லியவிதுபரியந்தம்—மோகம்-மயக்கமாகத்தோற்றியபிரகிருதியின், முழுக்குணத்திரண்டால்வந்த-முழுதுமானசத்துவராசோகுணத்திலுண்டான,மூலவாரோபம்-காரணசரீரவத்தியாசத்தை,சொன்னோம்-உரைத்தோம், வழுத்துருக்குமவாரோபவழியும் - சொல்லப்பட்டசூக்குமசரீரவத்தியாசமுண்டானமார்க்கத்தையும்,மொழிய-யான்சொல்ல,நீகேளாய்-நீகேட்பாய்—எ-று (௫௪)

சுத்தசைதன்னியச்சாயை-அசனிடமாதலின்- அதனைப்பிரமகூடஸ்தனெனவும்-அஃது சத்துவராசோகுணத்திற்றக்குதலில் அக்குணங்களைமாயையவித்தையெனவும்- அவற்றிற்பிரதிபிம்பித்தசாயை யாரோபமாதலின்-அவற்றைச்சிவேஸ்வரனெனவும்அம்மாயை யவித்தைகள்மேல்விளைவுக்குக்காரணமாதலின் அவைகளைக் காரணசரீரமெனவும் அவைகளிலனைத்துமடங்கிநிற்றலே ஆனந்தமயகோசமெனவும்-அவைகளையபிமானித்துநிற்பவனை-அந்தரியாமிபிராஞ்ஞனெனவுங்கொள்க. இ-(௫-க-ம்)சிவேஸ்வரவுற்பத்தியும்-அவர்களுக்குண்டான காரணசரீரவத்தியாசமுங்கூறினதாம். (௫௫)

(அ-கை,) சிவேஸ்வரர்களுக்குச் சூட்சுமசரீரமுண்டான முறைமையைக் கூறுவான்றொடங்கி முன்புசத்திகளின் றோற்றமுரைத்தல்

ஏமமாயாவிநோதவீசனாருளினாலே
பூமலியுயிர்சட்செல்லாம்போகசாதனமுண்டாகத்
தாமதகுணமிரண்டு சத்தியாய்ப்பிரிந்துதோன்றும்
வீமமாமூடலென்றும்விபுதாரந்தேதர்மமென்றார்.

இ-ள்)ஏமமாயாவிநோத-மோகமாகியமாயையை விளையாட்டாகவுடை

ய,ஈசனருளினல்-ஈஸ்வரனுடையகிருபையினல், பூடவியுயிர்கட்கெல்லாம்-பொலிவுமிகுந்தசீவர்களனைவர்க்கும். போகசாதனமுண்டாக அனுபோதசாதனமுண்டாகும்பொருட்டு, தாமதகுணம்,தமோகுணமானது,விமமாமூடமெலன்றும்-பயங்கரமானவாபாணமெனவும், விபுலமாந்தோற்றமென்றும்- நாநாவிதமாகும் விக்ஷேபமெனவும், இரண்டுசெத்தியப்ப்பிரிந்துதோன்றும்-இருசத்திகளாய்ப் பிரிந்துதோன்றும்-எ-று.

உயிர்கட்கெல்லாம் போகசாதனமுண்டாகவென்பதனற் சீவர்சன் சமஷ்டியேயீஸ்வரனதலின்-அவ்வீஸ்வரனுக்குங்கொள்க

(இ-ம்) தமோகுணப் பிரதிபலனமான சிற்சாயையின் அறிவின்மையாவரணமும் அறிவுவிக்ஷேபமுமெனவிரண்டுசத்திகளாயினவென்பதாம், (௩௫)

(அ-கை) விக்ஷேபசத்தியிற் றன்மாத்திரையான சூட்சும பூதவுற்பத்திகூறல்,

தோற்றமாஞ்சத்திதன்னிற் சொல்லியவிண்ணுர்விண்ணிற்
காற்றதாங்காற்றிற் றீயாக்கனலினீர்நீரின்மண்ணும்
போற்றுமிவ்வைந்தநொய்யபூதங்களென்றபோருஞ்
சாற்றுமற்றிவற்றிற்போகசாதனதனுவுண்டாகும்.

(இ-ள்) தோற்றமாஞ்சத்திதன்னில்- விக்ஷேபசத்தியில், சொல்லிய விண்ணும், சொல்லப்படுஞ் சத்ததன்மாத்திரையான வாகாயமுண்டாம்,விண்ணில்-அவ்வாகாயத்தில், கற்றதாம்-பரிசதன்மாத்திரையான வாயுவுண்டாம், காற்றில்-அவ்வாயுவில், தீயாம்-ரூபதன்மாத்திரையானவக்கினியுண்டாம், கனலில்-அவ்வக்கினியில், நீர்-ரசதன்மாத்திரையானவப்புவுண்டாம், நீரில்-அவ்வப்புவில், மண்ணும்-கந்ததன்மாத்திரையானபிருதிவியுண்டாம், போற்றும்-போற்றப்பட்ட, இவ்வைந்தும்-இத்தன்மாத்திரைகளைந்தும், நொய்யபூதங்களென்று பேராம், சூக்குமபூதங்களென்றுநாமங்களாம், சாற்றும்-சொல்லப்பட்ட, இவற்றில் இத்தன்மாத்திரைகளில், போகசாதனதனுவுண்டாகும் - அனுபோகத்துக்குச்சாதநமான சூக்குமசரீரந்தோன்றும். (௩௬)

(அ-கை) தன்மாத்திரையின் சத்துவகுணத்தில் அந்தக்கரண ஞானேந்திரியவுற்பத்திகூறல்.

ஆதிமுக்குணமிப்பூதமடங்கலுந்தொடர்ந்துநிற்குங்
கோதில்வெண்குணத்திலைந்துகூறுணர்கருவியாகு
மோதியபின்னையைந்துமுளம்புந்தியிரண்டாஞான
சாதனமாமிவ்வேழுஞ்சற்குணப்பிரிவினலே.



(இ-ள்) ஆதிமுக்குணம்-உண்டானமூன்றுகுணங்களும், இப்பூதமடங்கலும்-இத்தன்மாத்திரைகளைந்திலும், தொடர்ந்துநிற்கும் - கூடியிருக்கும், கோதில்-குற்றமற்ற, வெண்குணத்தில் - சத்துவகுணத்தில்—ஐந்துகூறு-வியஷ்டியானவைந்துபங்கும்—உணர்கருவியாகும்-ஞானேந்திரியங்களாம்—ஓதியபின்னையைந்தும்-சொல்லப்பட்ட சமஷ்டியானவைந்துபங்கும்—உளம்புந்தியிரண்டாம்-மனம் புந்தி எனவிரண்டாகும்—சற்குணப்பிரிவினல் சத்துவகுணமமாதலால்—இவ்வேழும்-இந்தவேழும்,ஞானசாதனமாம்- அறிகருவிகளாம்-எ-று. ()

(அ-கை) தன்மாத்திரையின் ரசோகுணத்தில் வாயுகன்மேந்திரியங்களினுற்பத்திகூறல்.

இராசதகுணத்தில்வேறிட்டெடுத்தகூறைந்தமைந்தம்
பிராணவாயுக்களென்றும்பெருந்தொழிற்கன்மமென்றும்
பாவியபெபராமிந்தப்பதினேழுமிலிங்கதேகஞ்
சுராசுரர்நரர்விலங்காய்த்தோன்றியவுயிர்கட்கெல்லாம்.

(இ-ம்) இராசதகுணத்தில்-ரசோகுணத்தில்—எடுத்தகூறைந்தும்-எடுத்தொன்றாகவைத்தபங்கைந்தும்—பிராணவாயுக்களென்றும்-பிராணதிபஞ்சவாயுக்களென்றும்—வேறிட்டெடுத்தகூறைந்தும்-தனித்தனியேயெடுத்தபங்கைந்தும்—பெருந்தொழிற் கன்மமென்றும்-பெரியகிரியையைச்செய்யுங் கன்மேந்திரியங்களெனவும்—பாவியபெபராம் - பாவியநாமங்களாம்—இந்தப்பதினேழும் - இப்பதினேழுதத்துவங்களும்—சுரர்-தேவர்களும், அசுரர்-அவுணர்களும்—நரர் மனிதர்களும்—விலங்காய்-மிருகங்களுமாகி—தோன்றிய - உண்டான—உயிர்கட்கெல்லாம்-சீவர்களனைவர்க்கும், இலிங்கதேகம்-சூக்குமசரீரங்களாம்—எ-று.

சில நூலாசிரியர் சூட்சுமதேகமிருபத்தநான்கு தத்துவமென்றதை இந்நூலாசிரியர் விடயமைந்தையும் ஞானேந்திரியத்திலடக்கியும்-அகங்காரத்தையுஞ்சித்தத்தையு மனம்புத்தியிலடக்கியும் பதினேழாகக்கூறினரெனக்கொள்க.

(இ-௩-௧-ம்) சீவேஸ்வரருக்குண்டான சூக்குமசரீரவத்தியாசங்கூறினதாம்.

(அ-கை) சூக்குமதேகத்திலுல்வருங்சற்பனநாமங்களைக்கூறல்.

இவ்வுடன்மருவுஞ்சீவற்கிலங்குதைசதனென்றுரு
மிவ்வுடன்மருவுமீசற்கிரணியகருப்பனுகு
மிவ்வுடலிரண்டுபேர்க்குமிலிங்கசூக்குமசரீர
மிவ்வுடற்கோசமூன்றுமிதுகனவவத்தையாமே.

(இ-ள்) இவ்வுடல்- இவ்வியஷ்டிசூக்குமதேகத்தை—மருவுஞ்சீவற்கு - சேர்ந்தபிமானிக்குஞ் சீவர்களுக்கு—இலங்குதைசதனென்றுரு

ம்-விளங்காநின்றவபிமானிநாமத்தைசதனென்பதாம்—இவ்வுடல்- இச்சமஷ்டிசூக்குமதேகத்தை—மருவுமீசற்கு-சேர்ந்தபிமானிக்கின்ற ஈஸ்வரனுக்கும்—இரணியகருப்பனாம் - அபிமானிநாமமிரணியகருப்பனென்பதாம்—இவ்வுடல்-இச்சரீரம்—இரண்டுபேர்க்கும்-இவ்வேஸ்வரரிருவர்க்கும்—இலிங்கசூக்குமசரீரம் சூக்குமசரீரமாம்—இவ்வுடல்-அச்சரீரந்தக்கு—கோசமூன்றும்-பிராணமய மனோமய விஞ்ஞானமயமெனக் கோசங்கண்மூன்றாகும், இது கனவவத்தையாம் இது சொற்பனவவத்தையாம்-எ-று.

தன்மாத்திரைகள் சூக்குமமாதலின்-அவற்றைச் சூக்குமபூதமெனவும்—அவற்றின் றடிப்பைச்சூக்குமதேகமெனவும் - அஃதை யபிமானிப்பவர்களை இரணியகருப்பன் -தைசதனெனவும்—அஃது மனோராச்சியஞ் செய்தலைச் சொர்ப்பனவஸ்தையெனவும் அஃது பிராணமனோபுத்திகளாதத் தன்னை மறைத்தலைக் கோசங்க ளெனவுங் கொள்க. (கக)

(அ-கை) பஞ்சபூத பௌதிகமான சகத்துற்பத்தியைக் கூறுவான் றொடக்கி யஃதுண்டாகுதற்கேதுகூறுகின்றார்.

சூக்குமசகமிப்பட்டுஞ்சொல்லினேமிப்பாற்றூல
மாக்குமாரோபந்தானுமடைவினின் மொழியக்கேளாய்
தாக்குமிவ்வுயிர்க்குத் தூலதனுவும்போகமுமுண்டாகக்
காக்குமிவ்வீசன்பஞ்சீகரணங்கள் செய்தான்றானே.

(இ-ள்) சூக்குமசகம் - சூக்குமசரீரப்பிரபஞ்சத்தை—இம்மட்டும். இதுபரியந்தம்—சொல்லினேம்-சொன்னோம், இப்பால்-மேல்—தூலமாக்கும் - தூலபூதமுந் தூலதேகமுமுண்டாக்கும்—ஆரோபந்தானும்-அத்தியாசத்தையும்—அடைவினில் - கிரமமாக—மொழியக்கேளாய்- சொல்லக்கேட்பாய்—தாக்குமிவ்வுயிர்க்கு - சூக்குமசரீரத்திற் சேர்ந்திருக்கின்ற விச்சீவர்களுக்கு—தூலதனுவும் - தூலதேகமும் போகமும்- அநுபோகமும், உண்டாக - உண்டாகும்படி—காக்குமிவ்வீசன்-சீவர்களைப்பாதுகாக்குமிவ்வீஸ்வரன்—பஞ்சீகரணங்கள்-பஞ்சீகரித்தலை, செய்தான்-செய்தனன்—எ-று.

தனுவும் போகமுமென்றவும்மையால் அண்டமும் புவனமுங்கொள்க. (சம)

(அ-கை) பஞ்சீகரணமும் அவற்றினாலாகியகாரியமுங் கூறல்.

ஐந்துபூதமும்பத்தாக்கி யவையை யிரந்நான்காக்கி
நந்துதன்பாதிவிட்டு நாலொடுநாலுங்கூட்ட
வந்தன தூலபூதமகாபூதமவற்றினின்றுந்
தந்தன நான்காந்தூல தனுவண்டபுவனபோகம்.



(இ-ள்) ஐந்துபூதமும்பத்தாக்கி-தமோகுணப்பங்காகிய சூக்குமபஞ்சபூதங்களைப் பத்துபங்குசெய்து—அவைபாதி - அவற்றிற்பஞ்சீகபாதியை, நந்நான்காக்கி-ஒவ்வொன்றைநான்குநான்குசெய்து, நந்துதன்பாதிவிட்டு - கேடில்லாததன்னுடையசமானபாதியைநீக்கி— நாலொடு-மற்றநான்கொடு, நாலுங்கூட்ட- நான்கையுஞ்சேர்க்க, வந்தன தூலபூதம்-தூலபூதமுண்டாயின, மகாபூதமவற்றினின்றும்-தூலபூதமாகியவவைகளினின்றும், தந்தன- உண்டாகப்பட்டன, தூலதனு-தூலசரீரமும், அண்டம்-அண்டமும், புவனம்-புவனமும், போகம்-போகங்களுமாகிய, நான்காம்-நான்காகும்-எ-று-அண்டமென்பது பஞ்சபூதசமஷ்டியெனவும்புவனமென்பது அவைகளிலுள்ள பதப்பிராப்திஸ்தானங்களெனவுங்கொள்க, (சக)

(இ-உ-க-ம்) சூட்சுமபூதத்தைப்பஞ்சீகரித்துத்தூலபூதமும் அவற்றிற்றூலசரீரமுதலியநான்குந்தோற்றினவென்பதாம்.

(அ-கை) தூலதேகத்தினுள்ளவருங்கற்பனைநாமங்களைக்கூறல்,

தூலமேமருவுஞ்சீவன்சொல்லியவிசுவனாகுந்
தூலமேமருவுமீசன்சூழ்விராட்புருடனாகுந்
தூலஞ்சாக்கிரவவத்தைசொன்னதோரன்னகோசந்
தூலகற்பனையீதென்றுதொகுத்ததுமனதிற்கொள்வாய்.

(இ-ள்) தூலமேமருவுஞ்சீவன்-வியஷ்டி தூலதேகத்தைச்சேர்ந்தபிமானிக்கின்றசீவனுக் கபிமானிநாமம். சொல்லிய-சொல்லப்பட்ட, விசுவனாகும்-விசுவனென்பதாம், தூலமேமருவுமீசன்-சமஷ்டி தூலதேகத்தைச்சேர்ந்தபிமானிக்கின்றவீஸ்வரனுக்கபிமானிநாமம், சூழ்விராட்புருடனாகும் - சூழாநின்றவிராட்புருடனென்பதாம்— தூலம்-இவையிருவருக்குந்தூலதேகமாம், சாக்கிரவவத்தை-இவை யிவ்விருவர்க்குஞ்சாக்கிரவவத்தையாம், சொன்னது-சொல்லியது, அன்னகோசம் -இவ்விருவர்க்குமன்னமயகோசமாம், தூலகற்பனையீதென்று-தூலசரீரகற்பிதமிதுவென்று, தொகுத்தது-தொகுத்துச்சொன்னதை மனதிற்கொள்வாய்-மனதிலுணர்வாய்—எ-று.

தன்மாத்திரைமிசிரமானதைத்தூலபூதமெனவும்- அஃதோருருவானதைத்தூலசரீரமெனவும் - அஃதை அபிமானிப்பவர்களை விசுவன்விராட்டெனவும்-அதினின்றுஎதிரிட்டறிதலைச் சாக்கிரவத்தையெனவும்அஃதன்னமயமாதலின்-அதனை அன்னமயகோசமெனவுங்கொள்க

(இ-ம்) அபிமானிநாமமுதலியபலவகைகளுண்டான வத்தியாசங்கூறினதாம், (சஉ)

(இ-ள்.) படமுநாலும்போல் - படமும்நாலும்போல, செய்தபணியும்பொன்னும்போல் - செய்தவாபரணமுமாடகமும்போல, கடமுமண்ணும்போல் - கலசமும்மிருத்துவும்போல், பார்க்கில் - பார்க்குமிடத்தில், காரியகாரணங்கள் - காரியகாரணங்களிரண்டும், ஒன்றாம் - ஒன்றேயாம் — உடன்முதற்சுபாவமீறாய் - தூலதேகமுதற்பிராகிருதிபரியந்தம் — ஒன்றிலொன்றழித்தவாறு - ஒன்றிலொன்றுண்டானபிரகாரம் — அடைவினில் - முறையாக, ஒடுக்கி - அடக்கி — காண்பது - சுத்தப்பிரமத்தைத்தரிசிப்பது — அபவாதவுபாயமாம் - அபவாதவுத்தியாம் - எ-று, (சஎ)

(இ-ம்.) தன்னிடத்திற்கற்பிதமான சகசிலபாங்களைத் தனதுருவமாகவொடுக்கிக்காண்பதேயபவாதவுத்தியென்பதாம். (சஅ)

(அ-கை) முற்கூறிய ஆவரணசத்தியினிலக்கணம்யாதெனவினாதல்,

தூடணதமத்தில்வந்ததோற்றமாஞ்சத்திசெய்ய
பீடணவிகாரஞ்சொன்னீ ரிரண்டுசத்திகளென்றீரோ
மூடலாஞ்சத்திசெய்யுமோகமுஞ்சொல்லுமையா
கேடறக்குருவேயென்னக்கிருபையோடருள்செய்வாரே.

(இ-ள்,) தூடணதமத்தில்வந்த - தூஷிக்கத்தக்க தமோகுணத்திலுண்டான — தோற்றமாஞ்சத்திசெய்யும் - விக்ஷேபசத்திசெய்யாநின்ற, பீடணவிகாரஞ்சொன்னீர் - இச்சாரூபப்பிரபஞ்சமுண்டான வறுபாடுகளைச்சொன்னீர் — இரண்டுசத்திகளென்றீரே - இரண்டுசத்திகளென்றுசொன்னீரே — மூடலாஞ்சத்திசெய்யும் - ஆவரணசத்திசெய்யாநின்ற, மோகமும் - மயக்கத்தையும் — கேடறும் - நித்தியமான, குருவே - ஐயா குருசுவாமியே — சொல்லுமென்ன - அருளவேண்டுமென்று கேட்க, கிருபையோடு - கருணையோடும், அருள்செய்வார், ஆசிரியனுக்கிரகிப்பார் — எ-று,

(அ-கை) ஆவரணசத்தியின்றன்மைகூறல்,

தானிகர்தனக்காமீசன்றனையுந்தங்களைத்தான்கண்ட
ஞானிகடமையுமன்றிநாஸ்திநபாதியென்னு
மூனிறையுயிர்களுள்ளினுணர்விழிக்குருடாய்வண்ணம்
வானிலந்திசைகண்மூடுமழைநிசியிருள்போன்மூடும்.

(இ-ள்) தானிகர்தனக்காம் - தனக்குத்தானேசமானமாகிய — ஈசன்றனையும் - பிரமமயமானவீசனையும் — தங்களைத்தான்கண்ட - தானேயகூடஸ்தனைத்தரிசித்த — ஞானிகடமையும் - ஞானவான்களையும் — அன்றி - அல்லாமல் — நாஸ்தி - இல்லை — நபாதியென்னும் - இருக்கிறதாணு



றேவென்கிறவிருமுகத்தினால், ஊனிறை - தேகத்தில்வசிக்கும் — உயிர்களுள்ளின் - சீவர்களகத்தின் விளங்கிய — உணர்விழி - ஞானதிருட்டியானது, குருடாம்வண்ணம் - தெரியாதபடி — வானிலந்திசைகள் - விண்மண்திக்குகளை — மூடும் - மூடுகின்ற — மழைநிசியிருள்போல் - கார்காலத்திராவினிருளைப்போல — மூடும் - ஆவரணசத்தியானது மறைக்கும் — எ-று

(இ-ம்) கூடஸ்தபிரமங்களை மறையாமலவைகளி லாரோபமான சீவேஸ்வரர்களைமறைக்குமென்பதாம். (சகூ)

(அ-கை) (இ-து)

பூன்றமாம்பிரமத்துக்கும்புறத்துளவிகாரங்கட்கு
மான்றகூடத்தனுக்குமகத்துளவிகாரங்கட்குத்
தோன்றியபேதஞ்சற்றுந்தோன்றுமன்மறைத்துமூடு
மூன்றியபவவியாதியுண்டாக்குமுபாதியீதே.

(இ-ள்) பூன்றமாம்பிரமத்துக்கும் - பூரணமானபிரமஸ்வரூபத்துக்கும் — புறத்துளவிகாரங்கட்கும் - புறம்பிலுள்ளவீசன்முதலிய வேறுபாடுகளுக்கும் — ஆன்றகூடத்தனுக்கும் - மாட்சிமையான கூடஸ்தனுக்கும் — அகத்துளவிகாரங்கட்கும் - அகத்திலுள்ளசீவன்முதலியவேறுபாடுகளுக்கும் — தோன்றியபேதம் - உண்டானசிற்சடபேதங்களை — சற்றுந்தோன்றாமல் - எவ்வளவுந்தோன்றாமல் — மறைத்துமூடும் - மறைக்கும் — ஊன்றிய - திரமான — பவவியாதி - பவப்பிணியை, உண்டாக்கும் - விளைவிக்கும், உபாதி - உபாதியானது — ஈதே - இவ்வாவரணசத்தியேயாம் - எ-று.

(இ-ம்) அதிஷ்டானவாரோபங்களின்பேதந் தெரியவொட்டாமலஸ்தி, நபாதியென்னுமிருமுகத்தால் ஞானதிருஷ்டியை மறைக்குதல் - ஆவரணசத்தியின்றன்மையென்பதாம். (ருய)

(அ-கை,) அதிஷ்டானதிஷ்டி சாமானியமாகத் தோற்றியபின்னரும்விசேடமறைபட்டபோது மறைபடாதபோது மாரோபந்தோன்றக்கண்டிலையேயென்ற சீடனைநோக்கி யவ்வதிஷ்டான விலக்கணத்தை இரண்டுவிதமாகக் கூறுகின்றார்.

ஆதாரமறைந்தபோதலாரோபமெய்க்கேதோன்று
மாதாரமறையாதாயி னாரோபமில்லையேயென்று
லாதாரஞ்சமம்விசேட மாமெனவிரண்டுகூறு
மாதாரஞ்சமமாமெய்க்கு மாரோபம்விசேடமாமே.

(இ-ள்) ஆதாரமறைந்தபோதல் - பிம்பமறையுமானல் — ஆரோபமெய்க்கேதோன்றும் - பிரதிபிம்பமெய்க்கனந்தோன்றும் — ஆதாரமறை

யாகாயில்-விம்பமறைவில்லையெனில்—ஆரோபமில்லையேயென்றால்-பி
ரதிவிம்பமிக்லையெனின்—ஆதாரம்-ஆதாரமானது—சமம்-விசே
டமாமென—சமமாமெனவும்-விசேடமாமெனவும்—இரண்டுகூறும்
இரண்டுவகையாம்—சமம்-சமமானது—எங்கும்-எவ்விடத்துமுள்ள
ஆதாரமாம்-ஆதாரமாகும்—விசேடம்-விசேடமானது—ஆரோபமாம்
கற்பிதமாம்—எ-று.

(இ-ம்) ஆதாரமான சுத்தசைதன்னியம் பூரணமானகூடஸ்தபி
ரமமாக விளங்குமிடத்திற் சமமெனவு மதனி லாரோபமானவறிவுசிவே
ஸ்வரசகர்த்தாக விரிந் தொடுங்குமிடத்து விசேடமெனவு மிவ்வாறு
நித்தொடுங்குமறிவுண்மையாயினு மக்கிரியைகண் மித்தையாதலி னவ்
விசேடத்தை யாரோபமெனவுங்கொள்க. (௫௨)

(அ-கை) (இ-து)

சகமதிலிதுவென்சுட்டாச்சமானக்கண்மறைந்திடாது
மிகவுமாகயிறம்பாம்புமிவிசேடங்கண்மறைந்தபோது
மகமெனுஞ்சமானந்தன்னையஞ்ஞானமறைத்திடாது
பகர்வதோர்விசேடஞ்சிவன்பரனெனுமவனைமூடும்.

(இ-ள்) சகமதில்-உலகத்தின்கண்—இதுவென்சுட்டா - இதுவென்
றுசுட்டப்படாத—சமானக்கண்-சமமாகியகண்கள்—மறைந்திடாவ
ஒன்றுமறைக்கமறைபடாது,மிகவுமாகயிறும்பாம்பும்-மிகவுஞ்சொல்
லாநின்ற மூதைபுஞ்சர்ப்பமுமாகிய—விசேடங்கண் மறைந்தபோ
தும்-விசேடமாகத் தோன்றினவையொன்று மறைக்க மறைபடும்—
(அதனைப்போல்) அகமெனுஞ்சமானந்தன்னை-நானென்னுங் கூடஸ்
தபிரமத்தை—அஞ்ஞானமறைத்திடாது - அறியாமையானவாவரண
மறைக்கமாட்டாது—பகர்வதோர்விசேடம் - சொல்லப்பட்ட ஓர்வி
சேடமாகிய—சிவன்பரனெனும்-சிவேஸ்வரனென்கிற—அவனை மூடு
ம்-அவர்களைமறைக்கும்-எ-று.

சிவன் பரனெனுமவனைமூடுமென்றது அவர்களுணர்வை யென
வும்-அஞ்ஞானமறைந்திடாதென்றது-ஆவரணமறைந்திடாதெனவும்
கானலிருக்குமிடத்துச்சலந்தோற்றுதலும் அக்கானலாய்ப் பார்க்குமி
டத் தஃதுதோற்றியுமில்லாததுபோல ஆதாரமிருக்குமிடத் தாரோப
ந்தோற்றுதலும்-அவ்வாதாரமாய்ப் பார்க்குமிடத் தஃதுதோற்றியுமில்
லாததுபாமெனவுங்கொள்க.

(இ-ம்) ஆரோபமான சிவேஸ்வராதி தமக்காதாரமான கூடஸ்
பிரமத்தைப் பார்க்கவொட்டாம லவர்தமுணர்வை யிவ்வாவரணமறை
க்குமேயன்றி யாதாரத்தைமறைக்கமாட்டாதென்பதாம்.



(அ-கை) அவ்வுணர்வை மனமுதலாகத்தோன்றினவிக்ஷேபகாரி
யமறைத்ததேயன்றி ஆவரணமெங்கேமறைத்ததெனல்.

கேவலநிலைதோன்றாமற்கெடுத்ததுபஞ்சகோசஞ்
சிவனுஞ்சகத்துமாகிச்செனித்தவிக்ஷேபமன்றோ
வாவரணந்தானேபாழநர்த்தமென்றுயாதுக்கேதோ
மேவருக்குருவேயென்றவினவினமகனேகேளாய்.

(இ-ன்) கேவலநிலைதோன்றாமல் - முத்திநிச்சயந்தோன்றாமல்—
கெடுத்தது-அழித்தது—பஞ்சகோசம் - பஞ்சகோசமும்—சிவனும்-
சிதாபாசனும்—சகத்துமாகி- உலகமுமாய்—செனித்தவிட்சேபமன்
றோ- உண்டானவிட்சேபமல்லவா—அங்ஙனமிருக்க, ஆவரணந்தா
னே-ஆவரணமே—பாழ்-பாழெனவும்—அநர்த்தமென்று- அநர்த்த
மெனவும்—உரைத்தேது - சொல்லியதென்ன—மேவருங்குருவே
யென்று-அடைதற்கரியவாசிரியரேயென்று—வினவினமகனே-கேட்
டமாணாக்கனே—கேளாய்-நீகேட்பாய்—எ-று.

ஆனந்தமயகோசமுஞ் சிவனும் விட்சேபகாரியங்களல்லாதனவா
யிருக்க வங்ஙனங்கூறிய தென்னையெனின்-அந்தக்கரணப் பிரதிபல
ன் சிவனும் அவனறியாமை யானந்தமயகோசமு மாதலா லிங்ஙனங்
கூறியதெனக்கொள்க.(இ-ம்)வெளிப்படை. (௫௩)

(அ-கை) விட்சேபசத்தியினு லுண்டாகு நன்மையு மாவரணசத்
தியினு லுண்டாகுந் தீங்கையுங்கூறுகின்றார்.

தோற்றமாஞ்சத்திதானேதுன்பமாம்பவமானாலு
மாற்றலான்முத்திசேர்வார்க்கனுகூலசகாயமாகு
மூற்றவாய்பசற்காலம்போதுபகாரநிசியிலுண்டோ
மாற்றமென்னுரைப்பேன்மைந்தாமறைப்பதுமிகப்பொல்லாதே

(இ-ள்) தோற்றமாஞ்சத்திதானே - விக்ஷேபசத்தியே—துன்பமா
ப்பவமானாலும்-துன்பத்தைக்கொடுக்கின்ற தேகமுதலியவைகளானா
லும்—ஆற்றலான்-முயற்சியினால்—முத்திசேர்வார்க்கு- வீடடைபவ
ர்களுக்கு—அனுகூலசகாயமாகும் - அதமிகவுஞ்சகாயமாம்—ஊற்
றமாய்-அதிதற்குதவியாம்—பகற்காலம்போல் - இவாவைப்போல்—
உபகாரம்—சகாயமானது—நிசியிலுண்டோ- இரவிலுளதோ, மாற்ற
மென்னுரைப்பேன்-என்னசொல்வேன்—மைந்தா-மகனே—மறைப்
பது மூடுகின்றவாவரணம்—மிகப்பொல்லாது - மிகவும் பொல்லாத
தாம்—எ-று. (௫௪)

(அ-கை) இன்னுமதனை வற்புறுத்தல்.

சுழுத்தியிற்பிரளயத்திற்றோற்றமாஞ்சகங்கண்மாண்டு
மழுத்தியபவம்போய்முத்திபடைந்தபேரொருவருண்டோ

முழுத்தவிட்சேபமெல்லாமுத்தியிற்கூட்டுகிற்கும்
கொழுத்தவாவரணமுத்திகூடாமற்கெடுத்தகேடே.

(இ-ள்) சுழுத்தியில் - நித்தியப்பிரளயமாகியசுழுத்தியிலும்—பிரளயத்தில்-பிரமப்பிரளயத்திலும்—தோற்றமாஞ்சகங்கண்மாண்டு- உண்டானவுலகமுதலியவைகளனைத்தும்— அழுத்தியடவம்போய் - நற்கதியிலமிழ்த்தியசநநநீங்கி—முத்தி வீட்டை— அடைந்தபேர்- பெற்றவர்கள்—ஒருவருண்டோ- ஒருவருளரோ—முழுத்தவிட்சேபமெல்லாம்-முழுதும்விக்ஷேபகாரியமான வனைத்தும்—முத்தியிற்கூட்டுகிற்கும்-வீட்டிற்சேர்க்கும்—கொழுத்த- அறியாமைமிகுந்த—ஆவரணம்-ஆவரணமானது—முத்திகூடாமல் - வீட்டைச்சேராமல்—கெடுத்தகேடு-கெடுத்தகேடாம்—எ-று. (ப-ம்)யனேனியானுனியாற் பரமசுகத்தையடைதலின் விக்ஷேபமெல்லாமுத்தியிற் கூட்டுகிற்குமென்றார்.

(இ-உ-க-ட) முத்தியையடைதற்கு அறிதலுள்ளவிக்ஷேபஞ் சாதனமாமேயன்றி அறியாமையானவாவரணமாகாதென்பதாம்.

(அ-கை)மித்தையான விக்ஷேபசத்தியினால்வெளிப்படு முத்தியு மித்தையேயாமெனி லந்நனமாகாதெனல்.

சுத்தியில்வெள்ளிபோலத்தோன்றியகோற்றமான
சத்தியும்பொய்யேயென்றாற்சத்திசாதனமாவந்த
முத்தியும்பொய்யாமென்னின்மோகநித்திரைவிலக்கா
னித்திரைதெளியுமாபோனிருவாணநிலைமெய்யாமே.

(இ-ள்) சுத்தியில்வெள்ளிபோல—இளிஞ்சிலில்ரசிதாரோபம்போல—தோன்றிய-உண்டான—தோற்றமானசத்தியும் - விட்சேபசத்தியும்—பொய்யேயென்றால்-மித்தையாயின்—சத்திசாதனமாவந்த- அச்சத்திசாதனமாகவுண்டான—முத்தியும் - வீடும்—பொய்யாமென்னில்-மித்தையாமெனின்—மோகநித்திரைவிலக்கால்-மோகமானசொர்ப்பனசிம்மத்தினால—நித்திரைதெளியுமாப்போல்- நித்திரைதெளிந்து சாக்கிரம்வருவதுபோல்—நிருவாணநிலை - அச்சத்தியினாலுண்டாகு முத்திநிலையும்—மெய்யாம்-உண்மையேயாம்—எ-று.

(இ-ம்) மித்தையான சொர்ப்பனசிம்மத்தினாலுண்டான சாக்கிரஞ் சத்தியமானதுபோல மித்தையானவிக்ஷேபசத்தியின்காரியமானவிபானுதிகளாலுண்டானவீடும் சத்தியமேயாமென்பதாம். (௩௬)

(அ-கை) இச்சத்திகளின்காரணமானமாயைகளை நீக்குமோவ கூறல்.

இம்பரினஞ்சைநஞ்சைநசாலிரும்பினையிரும்பாலெய்யு
மம்பினையம்பாற்பற்றுமழுக்கினையழுகக்ான்மாய்ப்பர்
வம்பியன்மாயைதன்னைமாயைக்ால்மாய்ப்பர்பின்னைத்
தப்பமாயதுவுங்கூடச்சவஞ்சுடுதடிபோமே.

(இ-ள்) இம்பரில்-இவ்வுலகத்தில்—நஞ்சை சர்ப்பந்தீண்டினவிஷத்தை,நஞ்சால் ஒருவிதமானவிஷத்தினாலும், இரும்பினை-அயத்தை—இரும்பால்-அவ்வயத்தினாலும்,எய்யுமம்பினை-விடுமம்பை, அம்பால்-அதற்குப்பகையானவம்பினாலும்,பற்றுமழுக்கினை பிடித்தவழுக்கை, அழுக்கால்-அஃதைநீக்குமழுக்கினாலும்,மாய்ப்பர்-கெடுப்பார்கள்(அங்ஙனம்)வம்பியன்மாயைதன்னை-அசுத்தமாயையை,மாயையால்-சுத்தமாயையால்,மாய்ப்பர்-கெடுப்பார்கள்,பின்னை-பின்பு, தப்பமாயதுவும்-பற்றுக்கோடானவச்சுத்தமாயையும்,கூட-அச்சுத்தமாயையோடுங்கூட,சவஞ்சுடுதடிபோல்-பிரேதத்தைச்செய்யுந்தண்டமதனோடுவேவுதல்போல,போம்-கெடும்-எ-று.

(இ-ம்) சடரூபமான வசுத்தமாயையை-சித்ரூபமான சுத்தமாயையினாற்கெடுத்தண்டத்தகையமானபரஞானத்திற்சுத்தமாயையும் அசுத்தமாயையோடுகெடுமென்பதாம். (௩௭)

(அ-கை.) ஆத்துமாக்களுக்கிவ் விருவிதமானமாயைகளாற் சத்தாவத்தைகள்வருமாறுமவற்றினைமமுக்கூறல்.

இந்தமாயையினாற்சீவர்க்கேழவத்தைகளுண்டாகு
மந்தவேழவத்தைதம்மையடைவினின்மொழியக்கேளாய்
மூந்தவஞ்ஞானமூடன்மூளைத்தல்காணுசஞானஞ்
சந்ததங்கண்டஞானந்தழல்கெடல்குளிர்மையாதல்.

(இ-ள்.) இந்தமாயையினால்- இம்மாயையால்—சீவர்க்கு-சீவர்களுக்கு, ஏழவத்தைகளுண்டாகும்-சத்தாவத்தைகளுளவாம். அந்தவேழவத்தைதம்மை-அவ்வேழவத்தையினைமங்களை, அடைவினில்-கிரமமாக, மொழியக்கேளாய்-சொல்லக்கேட்பாய், மூந்தவஞ்ஞானம்-முன்னையஞ்ஞானமும்,மூடல்- ஆவரணமும்,மூளைத்தல - விட்சேபமும்—காணுதஞானம்-பரோட்சஞானமும்—சந்ததங்கண்டஞானம்- நித்தியாபரோட்சஞானமும்,தழல்கெடல்-துக்கநிவர்த்தியும்,குளிர்மையாதல்-கடையற்றவானந்தமுமாம்-எ-று. (௩௮)

(அ-கை,) அச்சத்தாவத்தைகளின்றன்மையைக்கூறல்

பிரமமாத்தனைமறந்தபேதைமையேயஞ்ஞானம்
பாநிலைகாணேமென்றுபகர்தலாவரணமூட
னாமெனுருகருத்தாச்சீவனுமெனன்மூளைத்தமூற்றம்
குருவன்வாக்கியத்தாற்றன்னைக்குறிக்கொளல்பரோட்சஞானம்

(இ-ள்) பிரமமாத்தனை-பிரமஸ்வரூபமாகியதன்னை—மறந்தபேதைமையே-மறந்தவறியாமையே,அஞ்ஞானம்- அஞ்ஞானமாம், பாநிலை-பிரமநிலை, காணேமென்று-இருந்தாற்காணுமென்று,பகர்தல்-சொ

ல்லுதல்—ஆவரணமூடல்-ஆவரணமூடலென்னுமாவரணசத்தியாம் நாமொருகருத்தால்- புருடனோர்நினைப்பினால்— சிவனுனெனல்-சிதாபாசனுனெனல்,மூனைத்தமூேற்றம்-விட்சேபசத்தியாம், குருவின்வாக்கியத்தால்-ஆசிரியருபதேசத்தினுல்—தன்னைக்குறிக்கொளல்- பிரமத்தைக்குறிப்பாகத்தெரிந்துகொள்ளுதல்,பரோக்ஷஞானப்-பரோக்ஷஞானமாம்-எ-று. (௫௯)

(அ-கை) (இ-து)

தத்துவவிசாரஞ்செய்துசகலசந்தேகமும்போ
யத்துவிதந்தானுதலபரோக்ஷஞானமாகும்
கத்தனுஞ்சிவபோதங்கழிவதேதுக்கம்போதன்
முத்தனுமெல்லாஞ்செய்துமுடிந்ததானந்தமாமே.

(இ-ள்) தத்துவவிசாரஞ்செய்து-தற்பதமொம்பதம்விசாரித்து, சகலசந்தேகமும்போய்-எல்லாவையமுநீங்கி, அத்துவிதந்தானுதல்-கூடஸ்தபிரமவைக்கியமானவத்துவிதஸ்வருபந்தானுகவிளங்குதல், அபரோட்சஞானமாகும்-அபரோட்சஞானமாய்—கத்தனுஞ்சிவபேதம்- அகம்பாவமானசிவேஸ்வரதேகம்—கழிவதே-நீங்கவே—துக்கம்போதல் துக்கநிவர்த்தியாய், முத்தனுய் சிவன்முத்தனுய்,எல்லாஞ்செய்துமுடிந்தது-இருதகிருத்தியமானது, ஆனந்தமாம்-தடையற்றவானந்தமாம்-எ-று.

[இ-௬-க-ம்] அஞ்ஞானமாவரணமிரண்டும்அசுத்தமாயாசம்பந்தமாம் விட்சேபமபரோட்சமிரண்டுஞ் சுத்தாசுத்தமாயாசம்பந்தமாம், அபரோட்சமுதலிய மூன்றுஞ் சுத்தமாயாசம்பந்தமாய், அவைகளில் அபரோட்சஞானத்தினுல்பரோட்சமும் விட்சேபசத்தியின்காரியமான இரிஸ்யமும், துக்கநிவர்த்தியினுலாவரணமும்தடையற்றவானந்தத்தினுலஞ்ஞானமுநீக்கும் அவைகணீங்கவேயிவைகளுமங்களுநீக்கநிரதிசயானந்தமாகசத்தானேவிளக்குமென்பதாம். (௬௰)

[அ-கை.] அச்சத்தாவத்தைகளை விளக்குநிமித்தந் தசபுமான்றிட்டாந்தங்கூறல்,

இதுநினக்கறியும்வண்ணமிப்படியொருதிட்டாந்தம்
புதுமையாங்கதைகேள்பத்துப்புருடரோராற்றைநீந்தி
யுகைதிரத்திலேறியொருவனென்பதுபேரெண்ணி
யதனெடுதான்பத்தாமெனன்றறியாமன்மயங்கினின்றான்,

(இ-ள்) இதுநினக்கறியும்வண்ணம்-இஃதுனக்குத்தெரியும்படி, இப்படி-இவ்வண்ணம்,ஒருதிட்டாந்தம்-ஒருதிட்டாந்தமாக, புதுமையாங்கதைகேள்,வியப்பானவோர்சரித்திரங்கூறுவன்கேட்பாய், பத்துப்புருடர்-பதின்மர்,ஓராற்றைநீந்தி-ஓராறினைநீந்தி,உகைதிரத்தி லேறி,



க்கரையிலேறி,ஒருவன்-ஒருபுருடன்,ஒன்பதுபேரெண்ணி - ஒன்பதுபேரையெண்ணி, அதனெடு-அவர்களோடும், தான்-எண்ணினதான், பத்தாமென்றறியாமல்-தசமனென்றுதெரியாமல், மயங்கினின்றான்-பிரமித்துநின்றான்—எ-று, (௬௧)

(அ-கை.) திட்டாந்த தாட்டாந்தங்களுக்கொப்புமைகாட்டல்.

அறியாதமயலஞ்ஞானமவனிலைகாணேனென்றற்
பிறிபாவாவரணமாகும்பீடைகொண்டழல்விட்சேப
நெறியாளன்றசமனுண்டுநிற்கின்றானென்றசொல்லைக்
குறியாகவெண்ணிநோக்கிக்கொள்வதுபரோட்சஞானம்.

(இ-ள்) அறியாதமயல்-தன்னைத்தெரியாதமயக்கமே, அஞ்ஞானம் அஞ்ஞானமாம், அவனிலை-அத்தசமனில்லை, காணேனென்றல்-இல்லாமையாற்காண்கிலோமெனல், பிறிபாவாவரணமாகும்-அறியாமைநீங்காதவாவரணமாம், பீடைகொண்டழல்-தசமனைக்காணேனென்றுதுன்பமுற்றலறல்,விட்சேபம்-விட்சேபமாம், நெறியாளன்-வழிச்செல்வோனிவன்கருத்தைக்கண்டு,தசமனுண்டு-பதின்மனுளன், நிற்கின்றானென்றசொல்லை-இவ்விடத்திலிருக்கிறானென்று சொல்லியவசனத்தை, குறியாகவெண்ணி-குறிப்பாகநினைத்து, நோக்கிக்கொள்வது-அறிந்துகொள்வது,பரோட்சஞானம்-பரோட்சஞானமாம்—எ-று.()

(அ-கை) (இ-து.)

புண்ணியபதிகன்பின்னும்புருடரோன்பதின்மர்தம்மை
எண்ணியநீபத்தாவானென்னவேதன்னைக்காணல்
கண்ணினிற்கண்டஞானங்களைதல்போவதுநோய்போத
நிண்ணியமனதிலையந்தெளிதலானந்தமாமே.

(இ-ள்,) புண்ணியபதிகன்-புண்ணியவானுன நெறிச்செல்வோன், பின்னும் பின்பும்,புருடரோன்பதின்மர்தம்மை-பூமான்களொன்பதுபேரை,எண்ணியநீ-எண்ணினநீ, பத்தாவனென்னவே-தசமனுமென் றசொல்லவே,தன்னைக்காணல்-தன்னைத்தசமனுகக்கண்டல், கண்ணிற்கண்டஞானம்-அபரோட்சஞானமாம், களைதல்போவது-அழுகைநீங்கினது, நோய்போதல்-துக்கநிவிர்த்தியாம், நிண்ணியமன திலவன்மையானவுளத்தில்,ஐயந்தெளிதல்-சந்தேகந்தீர்தல்,ஆனந்தமாம் தடையற்றவானந்தமாய்—எ-று,

இ-௬-க-ம்) தசமன்றிட்டாந்தத்தினுற்றன்னைமறந்தகனுலவந்தவுபாதிகளையும்-தத்தரிசனத்திலவைகணீக்கத்தையுங் கூறினதாம். (௬௨)

(அ-கை) தசமன்றன்னைத் தானேகண்டதுபோலத் தன்னைத் தானுகத்தரிசிப்பிக்கவேண்டுமென்றசீடனைநோக்கி மகாவாக்கியாத்

த்த நிருபணத்திறு லந்தவிதமான சங்கை அறிவிச்சத்தொடங்கல்,

தேசபுமான் றனைக்கண்டாற்போற்றேசிகமூர்த்தியேயென்
னிசவடிவினையான்காணநீர்காட்டல்வேண்டுமென்றான்
தசிபெறுமிலக்கியார்த்தந்தொம்பதந்தற்பதங்க
ளசிபதமயிக்கியஞ்செய்யு மதிசயவுண்மைகேளாய்.

(இ-ள்) தேசபுமான்-பதின்மனுவன், தனைக்கண்டாற்போல்-தன்னைக்கண்டதுபோல், தேசிகமூர்த்தியே-ஆசாரியரே, என்னிசவடிவினை-என்தத்துவஸ்வரூபத்தை, யான்காண-நான்தரிசிக்கும்படி, நீர்காட்டல்வேண்டுமென்றான் - தேவரீர்காண்பிக்கவேண்டுமென்றுகேட்டான், தொம்பதந்தற்பதங்கள், நீயதுவென்னும்பதங்கள்-நீயதுவென்னும்பதங்களின், தசிபெறுமிலக்கியார்த்தம்-பரிசுத்தவிலக்கியார்த்தமான கூடஸ்தப்பிரமத்தில், ஐக்கியம்-ஐக்கியத்தை, அசிபதம்-ஆகுமென்னும்பதமானது, செய்யும்-காட்டும், அதிசயவுண்மைகேள்- அற்புதமானவுண்மையைக்கேட்பாய்—எ-று. (௬௪)

(அ-கை.) ஒன்றாகிய சைதன்னியமே நான்கு சைதன்னியமாகத்தோன்றுமெனல். (ஸ்

விண்ணொன்றேமகாவிண்ணென்று மேகவிண்ணென்றும்பரி
மண்ணென்றகடவிண்ணென்றமருவியசலவிண்ணென்று
மெண்ணுங்கற்பனைபோலொன்றேயெங்குமாம்பிரமமீச
னண்ணுங்கூடஸ்தன்சீவனுன்குசைதன்யமாமே,

(இ-ள்) விண்ணொன்றே-ஆகாயமொன்றே, மகாவிண்ணென்றும், மகாகாயமெனவும், மேகவிண்ணென்றும்-மேகசலப்பிரதிவிம்பாகாயமெனவும், மண்ணென்றகடவிண்ணென்றும்- மிருத்துவென்றகடாகாயமெனவும், மருவியசலவிண்ணென்றும், அதிற்பொருந்தியசடசலப்பிரதிவிம்பாகாயமெனவும், எண்ணுங்கற்பனைபோல்- நினைக்கப்பட்டகற்பிதத்தைப்போல், ஒன்றே-ஏகமானசுத்தசைதன்னியமே, எங்குமாம்பிரமம்-பூரணமானபிரமமெனவும், ஈசன்-ஈஸ்வரனெனவும்—நண்ணுங்கூடஸ்தன் - பொருந்திய கூடஸ்தனெனவும்—சீவன்-சீவனெனவும், நான்குசைதன்யமாய்-நான்குசித்துக்களாம்—எ-று. (௬௫)

(அ-கை) ஆரோபசைதன்னியத்தைநீக்கி யதிஷ்டான சைதன்னியத்தையடையவேண்டுமெனல்.

பூச்சியவீசன்சீவன்புகல்பதமிரண்டினுக்கும்
வாச்சியமிலக்கியந்தான்மலமிலாப்பிரமமாத்மா
காச்சியபாலினெய்போற்கலந்தொன்றுங்கடைந்தெடுக்கு
மாச்சியமென்னவுன்னையறிந்துநீபிரிந்துகொள்ளே.



(இ-ள்) புகல்-மகாவாக்கியத்திற்சொல்லும்—பதமிரண்டினுக்கும் தற் தந் தொம்பதமானவிருபதங்கட்கும்—வாச்சியம் - வாச்சியார்த்தமான—பூச்சியவீசன்சீவன்- ஆரோபமானசீவேஸ்வராராம்—இலக்கியந்தான்-இலக்கியார்த்தமானது—மலமிலாப்பிரமமாத்மா- நிர்மலமானபிரமகூடஸ்தராம், காச்சியபாலில்-காய்ச்சினபாலில்—நெய்போல்-வெண்ணெயைப்போல்—கலந்தொன்றும்-சடத்திற்சேர்ந்தொருமித்திருக்கின்ற—உன்னையறிந்து-ஆத்மாவைத்தரிசித்து—கடைந்தெடுக்குமாச்சியமென்ன - கடைந்தெடுத்துருக்கியநெய்போல்—நீபிரிந்துகொள்-நீயதனுத்மாவினின்றுபிரிவாயாக—எ-று.

(இ-௬௬-ம்) தற்பததொம்பதங்களின் வாச்சியார்த்தமான சீவேஸ்வராரோபமெனக்கண்டவைகளைநீக்கி யிலக்கியார்த்தமான கூடஸ்தபிரமவதிஷ்டானத்தையொன்றாகக்காண்கி லதுவே யசிபதார்த்தமான சுத்தசைதன்னியமாமென்பதாம். (௬௬)

(அ-கை) தன்னைத்தரிசிப்பிக்குநிமித்தந் தானல்லாதவைகளை நியதிகளைதல்.

பிறிவதெப்படியென்றக்காற்பிணமாகுமுடனுனென்னு
மறிவினைக்கொல்லல்வேண்டுமைம்பூதவிகாரமன்றோ
வெறிபதோர்துருத்திமூச்சுவிடுவதுபோலமூக்கா
லெறிபிராணனுநீயல்லையிராசதகுணவிகாரம்.

(இ-ள்) பிறிவதெப்படியென்றக்கால் - அனாத்மாவை நீங்குவதெனமெனின்—பிணமாகுமுடல் சவமாகின்றதேகம், ஐம்பூதவிகாரம்-பஞ்சபூதவிகாரமாதலால்—நானென்னுமறிவினை-அஃதை நானெனஸ்கிறவுணர்வை—கொல்லவேண்டும்- கெடுத்தல்வேண்டும்—வெறிபதோர்துருத்தி-வெறுந்துருத்தியானது—மூச்சுவிடுவதுபோல - காற்றைவிடுவதுபோல—மூக்காலெறிபிராணனும் - மூக்கினால்வீசும்பிராணவாயுவும்—இராசதகுணவிகாரம்-ரசோகுணத்தின்விகாரமாதலால், நீயல்லை-நீயல்லை—எ-று. (௬௭)

(அ-கை) (இ-து)

காரணமாமனதுபுத்திகருத்தாவாமவையான்மாவே
தாமுளவிண்டுகோசஞ்சத்துவகுணவிகாரம்
வரமறுகனவானந்தமயனையுநானென்றதே
விரவியதமவன்ஞானவிருத்தியின்விகாரமாமே.

(இ-ள்) காரணமாமனதுபுத்தி-அந்தக்கரணமானமனமும் புத்தியும்—கருத்தாவாய்-அசம்பாவமாய்—தாமுள - பேதமுள்ள—இரண்டு கோசம்-மனோமயகோசமும் விஞ்ஞானமயகோசமும்—வரமறுகனவு-திரமில்லாதசொப்பனமும்—சத்துவகுணவிகாரம்-சத்துவகுணவி

காரமுமாம் (ஆகலால்) அவையான்மாவோ-அவ்விரண்டு மாத்திரமல்ல— ஆநந்தமயனையும்-ஆநந்தமயகோசனை சிவனையும்—கிரமியகமம்-பொருந்தியதமரூபமான—அஞ்ஞானவிருத்தியின்- அவித்தியாவிருத்தியினது—விகாரமாம்-விகாரமாதலால்—நானென்றிதே - ஆத்துமாவென்றுகருதாதே-எ-று.

(இ உ-ச-ட) தேகமுதல் - அவித்தைபரியந்தமான மூன்றுதேகமூன்றவத்தை மூன்றபிமானியையும் பஞ்சகோசங்களையுந்தான் அன்றென நியதிகளைந்ததாம். (சூஅ)

(அ-கை) நியதிகளைந்தநீ யவ்விடத்துள்ள சத்தசைதன்னியத்தைத் தரிசித்தவரும்பொருட்டுப் பஞ்சகோசவிலட்சணனுவாயெனல்.

சத்தொடுசித்தானந்தஞ்சமந்திரஞ்சாக்ஷியேக
நித்தியம்வியாபியான்மாநீயதுவாயதிந்த
பொத்தொடுசடத்துக்காதிபொருந்துபேதங்களான
குத்திரபஞ்சகோசக்குகைவிட்டுவெளியிலாவாய்.

(இ-ள்) சத்தொடு-சத்தும்—சித்த-சித்தும்—ஆநந்தம்- ஆநந்தமும்—சமம்-சமமும்—திரம்-ஸ்திரமும்—சாட்சி-சாட்சியும், ஏகம் - ஏகமும்—நித்தியம்-நித்தியமும், வியாபி பூரணமுமாகிவிளங்குவது, ஆன்மா-ஆத்மஸ்வரூபமாதலால்—நீயதுவாய்-நீயேயதுவாய், பிரமம்-பிரமமே, கூடஸ்தனென-வத்துவிவஸ்வரூபமாக, அறிந்து - தரிசித்து, பொத்தொடுசடத்துக்காதி- அனுர்தசடதக்கமுதலியவற்றை, பொருந்துபேதங்களான-அடையாநின்ற வேறுபாடுகளுள்ள—குத்திரபஞ்சகோசக்குகைவிட்டு-வஞ்சகமானபஞ்சகோசயாகிய தேகத்தைநீக்கி வெளியிலாவாய்-வெளிபடுவாய்-எ-று.

(இம்) பஞ்சகோசங்களைக்கண்டவைகட்கு விலக்ஷணனுவாயெயென்பதாம். (சூகூ)

(அ-கை) விலக்ஷணமான விடத்தைப்பார்த்திவ்விருளோ நானென வினுதல்.

பஞ்சகோசமும்விட்டப்பாற்பார்க்கின்றபோதபாழே
விஞ்சியதுவல்லாமல்வேறொன்றுந்தெரியக்காணே
னஞ்சனவிருளையோநானகமெனவனுபவிப்பேன்
வஞ்சமில்குருவேயென்றமகன்பதிதெளியச்சொல்வார்.

(இ-ள்) பஞ்சகோசமும்விட்டு-ஐந்துகோசமானமூன்றுதேகத்தையுநீக்கி—அப்பால்-மேல்—பார்க்கின்றபோது- பார்க்கும்பொழுது—பாழேவிஞ்சியது - சூன்யமேமிசவித்திருக்கின்றது—அதுவல்லாமல் அச்சூனியமேயன்றி—வேறொன்றும் - மற்றொன்றும்— தெரியத்தோன்ற—காணேன்-பார்க்கிலேன்— அஞ்சனவிருளையோ-கரியவத்



தகாரத்தையோ—நான்-யான்—அகமெனவனுபவிப்பேன் - நானென்றனுபவிப்பேன்—வஞ்சமில்குருவேயென்ற- உண்மையாகுவ சாரியரேயென்றுகேட்ட—மகன்பதிதெளிய-சீடனறிவுதெளியும்படி—சொல்வார்-போதிப்பார்—எ-று. அஞ்ஞானவிருளென்பது பிரகிருதியெனக்கொள்க(இ-ம்) நியதிகளைந்தக விருக்க தன்னைக்காணுமல் நியதிகளையப்பட்டவைக போற்றுமையைத் தான் றேற்றவில்லையெனக்கலங்கி வினவினதாம். (எ௰)

(அ-கை) பிரகிருதியைநீக்கிச் சுத்தசைதன்னியனை தன்னைத் தரிசிப்பிக்கும்பொருட் டிருளைக்கண்டவன்பாழ அவனே நீயெனக்காண்பாயெனல்.

முன்புசுறசமன்புத்திமோகத்தாலெண்ணியெண்ணி
யொன்பதுபேரைக்கண்டவொருவனுந்தனைக்காணுத
பின்னவனிடையிற்கண்டபெரியபாழவனுபோரா
யன்புளமகனேகாண்பதடக்கதுங்காண்பானீயே.

(இ-ள்) முன்புகறசமன்-முன்சொல்லிய பதின்மனுனவன்—புத்திமோகத்தால்-புத்திமயக்கத்தினுல்—எண்ணியெண்ணி-நினைத்துநினைத்து-ஒன்பதுபேரை- ஒன்பதுபெயர்களை—கண்டவொருவனுந்தனை-பார்த்தவொருவனுகியதன்னை—காணுதபின்பு-பாராதபின்—அவனிடையிற்கண்ட - தன்னிடத்திலே தன்னைத் தசமனுகப்பார்த்த—அவனே-அவனு—பெரியபாழ்-பெரும்பாழ்—பாராய்-பார்ப்பாய்—அன்புளமகனே-அன்புள்ளபுத்திரா—காண்பதடக்கலும்- சூனியமுதலிய திரியக்களனைத்தையும்—காண்பானீயே - பார்ப்பவனீயேயாவாய்—எ-று-(இ-ம்) அவ்விருளாகியவறியாமைநீயன்றதனைக்கண்டஞானமே நீயெனவதிவித்ததாம், (எக)

(அ-கை) அங்ஙன மதிஷ்டானசைதன்னியமான தனது சந்நிதியிற் சகலமுமுதித்தொடுங்குமெனல்.

தூலசூக்குமவஞ்ஞானந்தோன்றமூன்றவத்தைதாமுங்
காலமோர்மூன்றுஞ்சன்மக்கடலெழுங்கல்லோலங்கள்
போலவேவந்துவந்துபோனவெத்தனையென்பேறு
ஞாலமர்கடவுளாணைபவைக்கெலாஞ்சாட்சிநீயே.

(இ-ள்) தூலசூக்குமவஞ்ஞானம்-தூலசூக்குமகாரணமாகிய சரீரத்திரயங்களும்—தோன்றமூன்றவத்தைதமும்-தோற்றுகின்ற சாக்கிரசொற்பன சுழுத்தியென்னு மவத்தாத்திரயங்களும்—அவற்றையபிமானிக்கின்ற - விசுவதைசதபிராஞ்ஞனுமான வபிமானத்திரயங்களும்—காலமோர்மூன்றும்-திரிகாலங்களும்—சன்மம்- பவமாகிய—கடலெழும்-சாகரத்திலுண்டால—கல்லோலங்கள்போலவே - பேரலைகளைப்போலவே—வந்துவந்து உண்டாகியுண்டாகி—போனது- அழி

ர்தன—நான்-யான்—எத்தனையென்பேர் - எவ்வளவென்றுசொல்வன்—ஆலமர்கடவுளானை-கல்லாலினிழலில்வசிக்குஞ் சற்குருவின் பேரிலாணைப்படிக்கு—அவைக்கெல்லாம்- அவைகளனைத்திற்கும், சாட்சிநீயே-நீயேசாட்சியாம்-எ-று.

(இ-ம்) ஆரோபமான வவித்தைமுதலியவைகளனைத்தேகத்தையும் அவைகட்கதிஷ்டானமான வாத்மஞானவியாபகத்தையுந் தெரிவித்ததாம். (௭௨)

(அ-கை) அவ்வாத்மஞானத்தைத்தவிர மற்றோர்ஞான மன்றென்பதையுறுதிப்படுத்த நிமித்தந் தன்னையறிவதுதானெனல்.

எல்லாங்கண்டறியுமென்னையேதுகொண்டறிவேனென்று
சொல்லாதேசுயமாஞ்சோதிச்சுடருக்குச்சுடர்வேறுண்டோ
பல்லார்முன்றசமன்றன்னைப்பார்ப்பதுந்தனைக்கொண்டேதா
னல்லாதுபதினென்றுனுமவனிடத்துண்டோபாராய்.

(இ-ள்) எல்லாம்-அனைத்தையும்—கண்டறியுமென்னை- பார்த்தறிகின்றவென்னை—ஏதுகொண்டறிவேனென்று - எதைக்கொண்டறிவேனென்று—சொல்லாதே-உரையாதே—சுயமாம் - சோதியான—சுடருக்கு-பிரகாசத்தையறிவிப்பதற்கு—சுடர்வேறுண்டோ-பிரகாசம்வேறுமுளதோ—பல்லார்முன்-பலர்முன், தசமன்றன்னை-பதின்மனை—பார்ப்பதும் - காண்பதும்—தனைக்கொண்டேதானல்லாது - தன்னைக்கொண்டேயன்றி—பதினென்றுனும்- பதினொராம்பருடனும்—அவனிடத்து-அத்தசமனிடத்து, உண்டோபாராய்-உளதோபார்ப்பாய்—எ-று. (௭௩)

(இ-ம்) ஆத்மசைதன்னியமொன்றேயென்றறிவித்ததாம்,

(அ-கை) சர்வஞ்ஞத்துவ கிஞ்சிஞ்ஞத்துவத்தையும் அறிவறியாமையையுநீக்கிச் சுத்தசைதன்னியத்தைத் தரிசிப்பித்ததாம்-

அறிவுக்குமறிவுசெய்யுமறிவுவேறுண்டென்றெண்ணு
மறிவற்றகுதர்க்கமூடர்க்கனவத்தைடலயாய்த்திரு
மறிபடும்பொருணீயல்லையறிபடாப்பொருணீயல்லை
யறிபொருளாகுமுன்னையனுபவித்தறிவாய்நீயே.

(இ-ள்) அறிவுக்கும்-சுயஞ்சைதன்யத்திற்கும்—அறிவுசெய்யுமறிவு அறிவிக்குஞானம்—வேறுண்டென்று - மற்றொன்றிருக்கின்றதென்று—எண்ணும்- நினைக்கின்ற—அறிவற்றகுதர்க்கமூடர்க்கு - உணர்வின்றிகுதர்க்கஞ்செய்யு மஞ்ஞானிகளுக்கு—அனவத்தை - அனவஸ்திதாதைப்—பலமாய்த்தீரும்-பிரயோசனமாய்முடியும்—அறிபடும்பொருணீயல்லை - திரிசியவத்துக்களுநீயல்லை—அறிபடாப்பொருணீயல்லை - அறியாமையான சூனியவத்துக்களுநீயல்லை—அறிபொரு

ளாகுமுன்னை - சைதன்னியவத்துவான வுனதாத்மஸ்வரூபத்தை, நீயே-நீ, அனுபவித்தறிவாய்-அனுபவித்துணர்வாய்-எ-று.

(இ-ம்) துவிதமாகிய அபாவுணர்வைநீக்கி யத்துவிதமானபரவுணர்விதுவெனவுணர்த்தியதாம். (௭௪)

(அ-கை) அப்பாவுணர்வேதானாகவிளங்கிய சிதானந்தமேசர்வமாக விளங்குகின்றதெனவுணர்த்துகல்.

மதுரமாங்கட்டிசுட்டமாப்பணியாரமெல்லா
மதுரமாக்கியவதற்குமதுரந்தான்சுபாவமன்றோ
வதுவிதுவெனுஞ்சடங்களறிவாகவறிவைத்தந்த
யதுவிதுமிரண்டுமாகாவகம்பொருளறிவாய்நீயே.

(இ-ள்) மதுரமாங்கட்டி-தித்திப்பாகியகரும்புக்கட்டிசேர்த்து,சுட்ட-சுடப்பட்ட,மாப்பணியாரமெல்லாம்-மாப்பலகாரங்களனைத்தையும்,மதுரமாக்கிய-மதுரமாகச்செய்த,அதற்கு - அவ்வெல்லக்கட்டிக்கு,மதுரந்தான்-மதுரமானது,சுபாவமன்றோ-சுபாவமல்லவா, அது-அதுவென்னுஞ்சமஷ்டியும்,இது-இதுவென்னும்வியஷ்டியுமான,சடங்கள் திரிசியவஸ்துக்களை, அறிவாக-ஞானமாக, அறிவைத்தந்து-ஞானதிஷ்டியைக்கொடுத்து, அதுவிதுவிரண்டுமாகா-சீவேஸ்வரதுவிதமாகாத, அகம்பொருள்-தானாகியவத்துவிதவஸ்துவை, அறிவாய்நீயே - நீதரிசிப்பாய்—எ-று.

(இ-ம்) சனதம்சத்தைத்தவிர வேறொன்றுமில்லையெனத் தனதுவியாபகத்தை விளக்கியதாம். (௭௫)

(அ-கை) இவ்வத்துவிதநிலை சித்திக்குப்பொருட்டதிஷ்டானத்துக்கயிக்கியமேயன்றியாரோபத்துக்கயிக்கியமின்றெனல்.

இந்தநீதொம்பதத்தினிலக்கியப்பொருளாமென்றும்
பந்தமிற்பிரமமேதற்பதந்தனினிலக்கியார்த்த
மந்தமாஞ்சிவனீசனவர்களேவாச்சியார்த்தஞ்
சந்ததம்பேதமாவார்தமக்கயிக்கியங்கூடாதே.

(இ-ள்)இந்தநீ-இத்தன்மையுள்ளகூடஸ்தனுனநீயே, தொம்பதத்தின்-தொம்பதத்தினுடைய,இலக்கியப்பொருளாம்-லட்சியார்த்தமாம்,என்றும்-எப்போதும், பந்தமிற்பிரமமே-மாயாரகிதமானபிரமமென்னுமதுவே,தற்பதந்தனின்-தற்பதத்தினுடைய, இலக்கியார்த்தம்-லட்சியார்த்தமாம்,அந்தமாம்-தோற்றிநசிப்பதான,சிவனீசனவர்களே-சீவேஸ்வரானவவர்களே, வாச்சியார்த்தம்-வாச்சியார்த்தமாம்,சந்ததம்-எப்போதும், பேதமாவார்தமக்கு-பேதமாகியசீவேஸ்வரர்களுக்கு,ஐக்கியங்கூடாது-ஏகமாதல்கூடாதாம்-எ-று.

பேதமாவார்க்கைக்கியங்கூடாதென்றவதனால்- அபேதமாவார்க்கைக்கியங்கூடுமென்றாயிற்று(இ-ம்)மகாவாக்கியத்தினிலக்கியார்த்தமான கூடஸ்தபிரம்ம- அபேதமாதலினவர்கட்கைக்கியங்கூடுமென்பதாம்,(

(அ-கை) (இ-து)

பேதமானதுவுங்கேளாய்பேராலுமிடங்களாலு
மோதருமுபாதியாலுமுடலாலுமுணர்வினாலும்
பாதலம்விசும்புபோலப்பலதரமகன்றுநிற்ப
ராதலாலிவர்க்கெந்நாளுமைக்கியமென்பதுகூடாதே.

(இ-ள்) பேதமானதுவும்-பேதமென்பதுவும், கேளாய் - கேட்பாய், பேராலும்-சிவேஸ்வரனென்னு நாமங்களினாலும், இடங்களாலும்- அண்டபிண்டங்களாயிருக்கின்றஸ்தானங்களினாலும், ஓதருமுபாதியாலும்-சொல்லுதற்கரியகாரணகாரியமானவுபாதிகளினாலும், உடலாலும்-சமஷ்டிவியஷ்டியாகியதேகங்களினாலும், உணர்வினாலும்-சர்வஞ்ஞத்துவகிஞ்சிஞ்ஞத்துவமென்னுஞானத்தினாலும், பாதலம்விசும்புபோல-பாதாளமும்விண்ணுலகமும்போல, பலதரம்-நாநாவிதத்தினாலும், அகன்றுநிற்பராதலால்-நீங்கிநிற்பவர்களாதலால், இவர்க்கு-இத்தன்மையுள்ளசிவேஸ்வரர்களுக்கு, எந்நாளும்-எப்போதும், ஐக்கியமென்பது கலத்தலென்பது, கூடாது-கூடாது, எ-று (இ-ம்)மகாவாக்கியத்தின்வாச்சியார்த்தமானசிவேஸ்வரரிவ்விதம்பேதமாதலினவர்கட்கைக்கியங்கூடாதென்பதாம். (௭௭)

(அ-கை)மகாவாக்கியார்த்தப்படி கூடஸ்தபிரமமேகமென்னும்பொருட்டோன்ற மூவிதவிலக்கணையைக் கூறுகின்றார்,

வடநூல்வல்லவர்கள்சொல்லும்வாசகப்பொருள்சேராம
லிடாகிற்பொருளாம்வண்ணமிலக்கணையுளாயர்கொள்வர்
திடமானவதுவுமூன்றாய்ச்செப்புவார்விட்டதென்றும்
விடவிலாதென்றும்விட்டுவிடாதசென்றும்பேராமே

(இ-ள்) வடநூல்வல்லவர்கள்-கிரந்தகர்த்தாக்கள், சொல்லும்-சாஸ்திரங்களிற்சொல்லாநின்ற, வாசகப்பொருள்-வாச்சியார்த்தத்தினால், சேராமல்-பொருள்பொருந்தாமல், அடாகின்-தடைபாயின், பொருளாம்வண்ணம்-அர்த்தமாகும்பொருட்டு, இலக்கணையுளாயால் - இலக்கியார்த்தத்தினால், கொள்வார்-பொருள்கொள்வார்கள், திடமாக-திறமாக, அதுவும்-அவ்விலக்கணையையும்——மூன்றாய்ச்செப்புவார்-மூன்றுவிதமாகச்சொல்லுவார், விட்டதென்றும்-விட்டவிலக்கணையெனவும், விடவிலாதென்றும்-விடாதவிலக்கணையெனவும், விட்டுவிடாதசென்றும்-விட்டுவிடாதவிலக்கணையெனவும், பேராய்-நாமங்களாய்——எ-று,

(இ-ம்) இலக்கணையினாமங்களைக்கூறினதாம் (௭௮)



(அ-கை) அவற்றிற்குதாரணங்கூறல்,

கங்கையிற்கோஷமென்றுங்கறுப்புச்சேப்போடுதென்றுந்
தங்கியசோயந்தேவதத்தனென்றுஞ்சொல்வார்க
ளிங்குதாரணங்களாக்கியிந்தமூன்றுனைகளாலே
அங்கநூல்விரோதமானசொல்லெலாம்பொருளாந்தானே

(இ-ள்) கங்கையிற்கோஷமென்றும் - பாகீரதியி லிடைச்சேரியெனவும், கறுப்புச்சேப்போடுதென்றும் - கருமைசெம்மைகள்செல்லுகின்றனவெனவும்——தங்கிய-தங்காநின்ற, சோயம்-அவனேயிவனென, தேவதத்தனென்றும்-தேவதத்தனென்னுமோர்புருடனெனவும், சொல்வார்கள்-உரைப்பார்கள், இங்கு-இவ்விடத்து, உதாரணங்களாக்கி உதாரணங்களாகக்கொண்டு, இந்தமூன்றுனைகளால்-இம்மூன்றிலக்கணைப்பொருள்களினால்——அங்கநூல்-மேலானசாஸ்திரங்களில், விரோதமான அர்த்தம்பொருந்தாமல்வேறுபடுகின்ற, சொல்லெல்லாம்-வாக்கியங்களனைத்தையும்——பொருளாய்-அருத்தமாம்——எ-று.

[ப-ப்] கங்கைக்கணிடைச்சேரியென்னுமிடத்து கங்கையினிடத்திடைச்சேரியிருக்குமா அதன்கரையிலிருக்குமென்றர்த்தைவிட்டிஃதைக்கொள்வது விட்டவிலக்கணையென்பார் கங்கையிற்கோஷமெனவும்-கருமைசெம்மைசெல்லுகின்றன வென்னுமிடத்தவைகட்டினியேசெல்லுமா-கருமைநிறமாகியபசுவும் செம்மைநிறமாகியகுதிரையுஞ்செல்லுகின்றனவென் றந்நிறத்தைவிடாமல்- அவ்வான்மாவைக்கொள்வது விடாதவிலக்கணையென்பார், ——கறுப்புச்சேப்போடுதெனவும்——அவ்விடமு மக்காலமு மவ்வேடமுள்ள விவனென——அவைகளைநீக்கி இப்புருடனைமாத்திரங்கொள்ளுமிப்போது.——அவ்விடமுதலானவைகணீக்கி இப்புருடன்மாத்திரமிருக்கின்றனைதவிட்டுவிடாதவிலக்கணையென்பார்-தங்கியசோயந்தேவதத்தனெனவும் - இவ்விலக்கணைவாக்கியப்படிபொருள்கோடலே-நூல்களனைத்தினுமுள்ள அவிரோதமான பொருள்கோடலென்பார், இந்தமூன்றுனைகளாலே அங்கநூல்விரோதமான சொல்லெலாம்பொருளாமெனவுங்கூறினர்.

(இ-ம்) தொம்பதார்த்தத்தைவிட்ட விலக்கணையாற்றரிசிக்கவேண்டுமென்பது- தூலமுதல்வித்தைபரியந்தமான சரீரத்திரயங்களைவிட்டு அவைகட்குவிலட்சணமானகூடஸ்தனைசதன்னிபத்தைத் தரிசிப்பதும் தற்பதார்த்தத்தைவிடாத விலக்கணையாற்றரிசிக்கவேண்டுமென்பது சைதன்னியம் ஆனந்தானுபூதியின்றி விளங்காமையால்- இச்சைதன்னியத்தைவிடாமலானந்தாப்பிரமத்தைத்தரிசிப்பதும்- அசிபதார்த்தத்தைவிட்டுவிடாதவிலக்கணையாற்றரிசிக்கவேண்டுமென்பது ஆனந்தமின்றியறிவும்- அறிவின்றியானந்தமுமின்மையால்- அவைகளின்யே

தமானதுவிதத்தைவிட்டு அபேதமான அத்துவிதவஸ்துவைவிடாமற்ற றிருப்பதுமாம். (எக)

பன்னியசோயமென்னும் பதங்களின்வாச்சியார்த்த
மன்னியதேயங்காலமவனிவனெனப்பவெல்லாஞ்
சொன்னவிவ்விரோதம்விட்டுத்தொகையிலக்கியம்விடாம
லுன்னிடிற்றேவதத்தனொருவனைவெளியாக்காட்டும்

(இ-ள்) பன்னி-முன்சொன்ன,சோயமென்னும்-அவனேயிவனெ ன்னும்—பதங்களின்-பதங்களுக்கு,வாச்சியார்த்தம்-வாச்சியார்த்தமா னது,அன்னிய-வேறான—தேயம்-தேசமும்,காலம்-காலமும்,அவனி வனென்ப,அவனிவனென்பனவாக,சொன்ன-சொல்லப்பட்ட,இவ்வி ரோதமெல்லாம்- விரோதமாயுள்ளவிவ்வனைத்தையும்,விட்டு-விடுத்து, தொகையில்-முடிவில்—இலக்கியம்விடாமலுன்னிடில்- இலக்கியார்த் தத்தைவிடாமற்சிந்திக்கில்—தேவதத்தனொருவனை-தேவதத்தனென் னுமொருபுருடனையே—வெளியாக்காட்டும் - பிரத்தியட்சமாகக்கா ண்பிக்கும்—எ-று.

(இ-ம்) இவ்விலக்கணையின்பொருளொருமையை நன்றாகத்தெரி வித்ததாம், (அய)

(அ-கை) இத்திஷ்டாந்தப்படிதாஷ்டாந்தத்தைவிளக்குதல்.

தத்துவப்பதங்கடாமுஞ்சாட்சியாய்ப்பிரமமான
வத்துவைவிடாமற்பேதவாச்சியார்த்தத்தைவிட்டு
நித்தமுமதுநீயாகுநீயதுவாகுமென்னு
மர்த்தமுமகண்டமென்றேபசிபதவைக்கியங்காட்டும்.

(இ-ள்) தத்துவப்பதங்கடாமும்-தற்பதந்தொம்பதங்களில்—பேத வாச்சியார்த்தத்தைவிட்டு-வாச்சியார்த்தமான பேதமாயுள்ள சீவஸ் வரரைவிட்டு—சாட்சியாய்ப்பிரமமான - கூடஸ்தபிரமமான—வத்து வைவிடாமல்-பொருளைவிடாமல்—நித்தமும் - எப்போதும்—அதுநீ யாகும்-பிரமமேகூடஸ்தனும்—நீயதுவாகுமென்னும்-கூடஸ்தனேபி ரமமாவென்னும்—அர்த்தமும்-பொருளும்—அகண்டமென்று - ஒன் றென்று—அசிபதம் - ஆநுஎன்னும்பதமானது—ஐக்கியங்காட்டும்- அத்துவிதத்தைவிளக்கும்—எ-று.

(இ-ம்) ஆசிரியருபதேசப்படி யாரணநிச்சய மிருப்பது தோன் றவதின்முடிவான மகாவாக்கியத்தி னிலக்கியார்த்தமான கூடஸ்தபி ரமத்தினொருமையை யுணர்த்தியதாம். (அக)

(அ-கை) இவ்வத்துவிதமான சுவானுபூதியே தானாக விளங்குவா யெனல்,



கடனீரின்மேகநீரிற்கண்டவானிரண்டும்பொய்யே
குடவானும்பெரியவானுங்கூடியொன்றுமெப்போது
மிடமானபிரமஞ்சாட்சியிரண்டுமெப்போதுமேகத்
திடமாகச்சுவானுபூதிசிவோகமென்றிருந்திடாயே.

(இ-ள்) கடனீரில்-கடற்சலத்திலும்—மேகநீரில் - மேகசலத்திலும் கண்டவான் - தோற்றுகின்றபிரதிவிம்பாகாயமான—இரண்டும்பொ ய்யே-இரண்டுமித்தையேயாம்—குடவானும்- கடாகாயமும்—பெரி யவானும்-ஆகாயமும்—எப்போதும்-எக்காலமும், கூடியொன்றும்- கலந்தேகமாகும் (அதுபோல) இடமானபிரமம்-வியாபகமானபிரம மும்—சாட்சி-கூடஸ்தனுமான—இரண்டும்-இரண்டுசைதன்னியமு ம்—எப்போதும்-எக்காலமும்—ஏகம்-ஒன்றேயாமாதலின்—திடமாக ஸ்திரமாக—சுவானுபூதி-சுவானுபூதியாகிய—சிவோகமென்று - சிவ யோகமென்று—இருந்திடாய்-இருப்பாய்-எ-று.

(இ-ம்) சுருதி குருவாக்கியார்த்த மொன்றுபட்ட வத்துவிதமான சுத்தசைதன்னியமே தானாகவிளங்குவாயென மௌனநிலையையுணர் த்தி யாசிரியர் மௌனமாயிருந்தாரென்பதாம். (அஉ)

(அ-கை) குருவாக்கியப்படி சமாதியிற்றன்னைத்தரிசித்தல்.

தஞ்சமாங்குருவுஞ்சொன்னதத்துவவழிதப்பாமற்
பஞ்சகோசமுங்கடந்துபாழையுந்தள்ளியுள்ளிற்
கொஞ்சமாமிருப்பும்விட்டுக்கூடஸ்தபிரமமென்னு
நெஞ்சமுநழுவியொன்றாய்நின்றபூரணத்தைக்கண்டான்

(இ-ள்) தஞ்சமாம் - தனக்குயிர்த்துணையாக—குருவுஞ்சொன்ன ஆசாரியானுக்கிரகஞ்செய்த—தத்துவவழி - தற்பததொம்பதசோத னைசெய்தமார்க்கங்கள்—தப்பாமல் - தவறாமல்—பஞ்சகோசமுங்க டந்து-ஐந்துகோசங்கட்குவிலட்சணனாய்—பாழையுந்தள்ளி- அஞ் ஞானங்கண்டசூனியத்தையுநீக்கி—உள்ளில்-அகத்தில்—கொஞ்சமாயி ருப்பும்-அற்பமாகத்தோற்றியிருக்கின்ற ஸ்மரணத்தையும்—விட்டு- விடுத்து—கூடஸ்தபிரமமென்னும் - கூடஸ்தபிரமமென்கிற—நெஞ் சமுநழுவி-நினைவுமிறந்து,ஒன்றாய்நின்ற- அத்துவிதமாயிருந்த—பூ ரணத்தைக்கண்டான் -பரிபூரணஸ்வரூபத்தைத் தரிசித்தான்—எ-று.

(அ-கை,) சமாதிகூடிசுவானுபூதிமயமாதல்

அனுபவானந்தவெள்ளத்தமுந்தியேயகண்டமாகித்
தனுகரணங்களாதிச்சகலமுமிறந்துசித்தாய்
மனதபூரணமாய்த்தேகமானசற்குருவுங்காண
தனவினிற்சுழுத்தியானிற்றன்மகஞ்சுபாவமானான்.

(இ-ள்) அனுபவானந்தவெள்ளத்து-சுபாவமாகிய்திரிசயானந்த சமுத்திரத்தில்—அழுந்தி-மூழ்கி—அகண்டமாகி- அகண்டாகாரமாய்—தனுகரணங்களாகி - தேகேந்திரியவந்தக்கரணமுதலிட—சகலமுமிதந்து-அனைத்துநசித்து—சித்தாய்- சின்மாத்திராநுபவத்திருள், பனதுபூரணமாய்-மனப்பூரணமாகி—தேகமான-பூரணபேதிருவுருக்கொண்ட—சற்குருவுக்காண- ஆசிரியரும்பார்க்கும்படி—நனவினிற்சுழுத்தியாகி-நனவினிற்சுழுத்திலையடைந்த—நன்மகன் - நற்சிடன்—சுபாவயானன்-தனதியல்பானஸ்வரூபமாகவிளங்கினன்-எ-று.

(இ உ க-ம்) சுருதிதருவாக்கியப்படி சுவானுபவம்விளங்கிற்றென்பதாம். (அச)

(அ-கை) சமாதியினின்றும்வெளிப்படல்.

அரிமகனெடும்போதிவ்வாறுசுபின்மனதுமெள்ள
வெளியில்வந்திட்டவுணர்ந்தான்விமலதேசிகனைக்கண்டான்
அளிவிழிசொரியப்பாதந்தொழுதவிழ்ந்தெழுந்துசூழ்ந்தான்
குளிர்முகச்சுவாமிகேட்கக்கும்பிட்டுநின்றுசொல்வான்.

(இ-ள்) அளிமகன்-கனிவுள்ளசிடனைவன்—நெடும்போது - வெகுநேரம்—இவ்வாறுயின்-இவ்வண்ணமாக,விளங்கினபின்பு-மனதல்வரூபசமஸ்காரயானது—மெள்ளவெளியில்வந்திட- மெள்ளவச்சமாதியினின்றுந்தூரியமாய் வெளிப்பட—உணர்ந்தான்- அறிந்தவனாய், விமலதேசிகனை-நிர்மலமானவாசிரியனை—கண்டான்-பார்த்தன—விழிகண்கள்—தளிசொரிய-ஆனந்தபாஷ்பம்பொழிய—பாதம்- அவரதுபதத்தில்—தொழுதுவீழ்ந்து—சாஷ்டாங்கமாக- நமஸ்காரஞ்செய்து—எழுந்து-பின்பெழுந்து—சூழ்ந்தான்-வலம்வந்து—குளிர்முக- பிரமானந்தம்விளங்குகின்றமுகத்தையுடைய—சுவாமிகேட்க- ஆசாரியர்கேட்கும்படி—கும்பிட்டுநின்றுசொல்வான்-சிரசின்மேலஞ்சலியோடுநின்றுதுதிப்பான்-எ-று.

(இ-ம்) சமாதியனுபவ சமஸ்காரத்தோடு சகலநிட்டைக்குவெளிப்பட்டதாம். (அரு)

(அ-கை) லக்ஷமாதுகாணேனைக்குருவைத்துதிசெய்தல்.

ஐயனேயெனதுளேநின்றநந்தசென்மங்களாண்ட
மெய்யனேவுபதேசிக்கவெளிவந்தகுருவேபோற்றி
யுய்யவேமுத்திநல்குமுதவிக்கோருதவியாயேன்
செய்யவேறொன்றுக்காணேன்றிருவடிபோற்றிபோற்றி.

(இ-ள்) ஐயனே-ஆசாரியனே—எனதுளேநின்று-எனதகத்திலின்றுஅநந்தசென்மங்கள் - அளவிறந்தபவங்களோடும்—ஆண்டமெய்யனே-ஆளாநின்றகர்த்தனே—உபதேசிக்க- அனுக்கிரகிக்குநிமித்தம், வெளிவந்தகுருவே-மானிடவடிவுகொண்டெழுந்தருளியவாசிரியரே, போற்றி-வணங்குகின்றேன்—உய்யவே- அடியேனீடேறும்பொருட்டு—முத்திநல்குமுதவிக்கு- வீடளித்தசகாயத்திற்கு—ஓர்உதவி - ஓர்கைம்மாறு—நாயேன்செய்ய- அடியேன்செய்ய—வேறொன்றுங்காணேன்-மற்றொன்றுங்காணகிலேன்—திருவடிபோற்றிபோற்றி-கேவலமுகியபாதங்களைத்துதிக்கின்றேன்—எ-று (அசா)

(அ-கை) சமாதியனுபவம்பெற்றசிடனைநோக்கிச் சகசநிட்டையநுபவமுதயமாம்பொருட்டனதனுபவந்தடையின்றி விளங்குமெனிலக்ஷேகைம்மாறெனக்கூறுதல்.

சிட்டனிவ்வாறுசொல்லத்தேசிகர்மகிழ்ந்துநோக்கிக்
கிட்டவாவெனவிருத்திக்கிருபையோடருளிச்செய்வார்
துட்டமாந்தடைகண்மூன்றுந்தொடராமற்சொரூபஞான
நிட்டனாயிருப்பாயாகினீசெய்யுமுதவியாமே

(இ-ள்) சிட்டன்-சிடனானவன்—இவ்வாறுசொல்ல - இவ்வண்ணந்துதித்துரைக்க—தேசிகர்-ஆசிரியரானவர்—மகிழ்ந்துநோக்கி - மகிழ்ச்சியுடன்பார்த்து—கிட்டவாவெனவிருத்தி - சமீபத்தில்வாவென்றழைத்திருக்கச்செய்து—கிருபையோடு - கருணையோடும்—அருளிச்செய்வார்-அனுக்கிரகஞ்செய்வார், துட்டமாம் - பொல்லாதனவாகிய, தடைகண்மூன்றும்-மூன்றுதடைகளும்—தொடராமல்- தொடர்ந்துவராமல்—சொரூபஞானநிட்டனாய் - ஸ்வரூபசைதன்ய சமாதியையுடையவனாய்—இருப்பாயாகில்- இருப்பாயானால்—நீசெய்யுமுதவியாம்-இஃதேநீயெனக்குச்செய்யுங்கைம்மாறாம்—எ-று.

(இ உ-க-ம்) தானேனவனுபவமான சுகபோகத்தைத் தவிர வேறொருகருதமலிருக்கவேண்டுமென்பதாம். (அஎ)

(அ-கை) அனுபவமான வத்துவிதஞானந் தடைகளின்றி நீங்குமோவென்ற சிடனைநோக்கி யவைசளுண்டே லனுபவந்திரயாகவிளக்காவெனல்.

நீநானென்றிரண்டில்லாமனிறைந்தபூரணமாயெங்கு
நானாகத்தெரிந்தஞானநழுவுமோகுருவேயென்று
முனைகுப்பிரமரூபஞ்சற்குருநூலாற்சொன்று
மானாலுந்தடைகளுண்டேலனுபவமுறைத்திடாதே.

(இ-ள்) நீநானென்ன - நீயெனவுநானெனவும்—இரண்டில்லாமனிறைந்தது-விகமின்றியத்துவிதமாக வியாபித்த—பூரணமாய் - பரிபூரணமாய்—எங்கும்-எவ்விடத்தும்—நானாகத்தெரிந்தஞானம் - தானாகவிளங்கியசைதன்யமானது—குருவே-ஆசிரியரே—நழுவுமோவென்

ருக்-நமுவுமோவென்றுகேட்டான்—தானுதும்பிரமரூபம் - தன்மய மானபிரமஸ்வரூபமானது—சற்குரு ஆசாரியருபதேசத்தினுலும்—நூலால்-வேதாந்தசாஸ்திரங்களினுலும்—தோன்றுமானல் - உதிக்கு மானுலும்—தடைகளுக்கு மேல் - தடைகளிருக்குமானல்—அநுபவ முறத்திடாது-அவ்வநுபவந்திறப்படாது—எ-று, நீயென்பது மூன் ணிலையிற் குருவாகவிளங்கிய வானந்தமெனவும், நானென்பது தன் மையிற்சீடனுகவிளங்கியவறிவெனவுங்கொள்க. (அஅ)

(அ-கை) தடைகளையு மவற்றைநீக்குமுபாயங்களையுங்கூறல்.

தடைகளைதெனிலஞ்ஞானஞ்சந்தேகவிபரீதங்கள்
படர்செயுமிந்தமூன்றும்பலசன்மப்பழக்கத்தாலே
வுடனுடன்வரும்வந்தக்காலுயர்ஞானங்கெடுமிவற்றைத்
திடமுடன்கெடுப்பாய்கேட்டல்சிந்தித்தறெளிதலாலே

(இ-ள்) தடைகளைதெனில்-அத்தடைகளியாவையென்றால்—அஞ் ஞானம்-அஞ்ஞானமும்—சந்தேகம்-சந்தேகமும்—விபரீதங்கள்-வி பரீதங்களுமாய்—படர்செயும்-துன்பஞ்செய்யும்—இந்தமூன்றும் இம்மூன்றுதடைகளும்—பலசன்மப்பழக்கத்தால் - அநேகசென்மப் பழக்கத்தினுல்,உடனுடன்வரும்-அடிக்கடிவரும், வந்தக்கால்-அங்ஙனம்வருமாகில்—உயர்ஞானங்கெடும்-மேலானஞானமறைபடும், இவற்றை-இத்தடைகளை,திடமுடன்-ஸ்திரமாக, கேட்டல்-சிரவணத்தி னுலும்,சிந்தித்தல்-மனனத்தினுலும்,தெளிதலால்—நிதித்தியாசனத்தினுலும், கெடுப்பாய்-நீக்குவாய்—எ-று. (அகூ)

(அ-கை)தடைகளுள்ளவாயினநுபவம்விளங்காதெனத்திருஷ்டாந்தமுகத்தாலறிவித்தல்.

அக்கினிகட்டுப்பட்டாலற்பமுஞ்சுடமாட்டாது
மக்கினஞானத்தாலேவந்தபந்தமும்வேவாது
சிக்கெனப்பழகிக்கேட்டல்சிந்தித்தறெளிதலாலே
விக்கினமடஞ்சந்தேகம்விபரீதப்போக்குவாயே,

(இ-ள்)அக்கினி-நெருப்பானது,கட்டுப்பட்டால்-மந்திரத்தினுல்உஷ்ணசத்திஸ்தம்பமானுல்— அற்பமும்-சற்றும்,சுடமாட்டாது-எரிக்க மாட்டாது,(அதுபோல)மக்கினஞானத்தால்,தடைகளினுற்பிரகாசங்குன்றினசித்தினுல்,வந்தபந்தமும்-வாப்பட்டதிரிசயவாசனையும்,வேவாது-கெடாது(ஆதலால்) சிக்கெனப்பழகி-இடைவிடாமற்பழக்கஞ்செய்து,கேட்டல்-சிரவணத்தினுல்,விக்கினமடம்-ஞானத்துக்குத்தடையாகியவஞ்ஞானத்தையுஞ்,சிந்தித்தல்-மனனத்தினுல்,சந்தேகம்-சந்தேகத்தையும்,தெளிதலால்-சுபாநுபவமாய்த்தெளிதலினுல், விபரீதம்-கற்பிதமானதிரிசியத்தையும்,போக்குவாய்-நீக்குவாய்—எ-று, (கூய)



(அ-கை.) அத்தடைகளினியல்புகூறல்

பிரமபாவனையைமூடிப்பேதங்காட்டுவதஞ்ஞானங்
குரவன்வாக்கியநம்பாமற்குழம்பினமனஞ்சந்தேகந்
திரமுறச்சகமெய்யென்றுந்தேகநானென்றுமுள்ளே
விரவியமோகந்தானேவிபரீதமென்பர்மேலோர்.

(இ-ள்.)பிரமபாவனையைமூடி-திருக்குஸ்மரணத்தைமறைத்து,பேதங் காட்டுவது-திரிசியத்தைகாண்பிப்பது, அஞ்ஞானம்-அஞ்ஞானமாம் குரவன்வாக்கியம்-ஆசாரியருபதேசவாக்கியார்த்தத்தை,நம்பாமல்-நம்புதல்செய்யாமல்,குழம்பினமனம்-மனக்கலக்கம், சந்தேகம்-சந்தேகமாம்,திரமுறு-நிலையில்லாத,சகமெய்யென்றும்-சகஞ்சத்தியமெனவும்—தேகநானென்றும்-சரீரம்யானெனவும், உள்ளே-மனத்தின்கண் விரவியமோகந்தானே-விபரீதமென்பர்-விபரீதமென்றுசொல்லுவார்கள்—எ-று. (கூக)

(அ-கை.) அத்தடைகளைக்கெடுக்குங்கேட்டன்முதலியவைகளினியல்புகூறல்.

தத்துவவநுபோகந்தான்சாதித்தல்கேட்டலென்பா
ரொத்துளபொருளுகந்தாலுசாவல்சிந்தித்தலென்பார்
சித்தமேகாந்தமானதரிசனந்தெளிதலென்பார்
நித்தமிப்படிசெய்தக்காணிர்வாணம்பெறுவாய்நீயே.

(இ-ள்.) தத்துவவநுபோகந்தான்-மகாவாக்கியார்த்தமான பிரமோபதேசத்தை,சாதித்தல்- குருமுகமாகப்பெறுதலை, கேட்டலென்பார் கேட்டலென்றுரைப்பார்,ஒத்துளபொருள்-அதனைக்கியார்த்தத்தை— உசாவல் விசாரித்தலை,சிந்தித்தலென்பார் -சிந்தித்தலென்றுசொல்லுவார்கள், சித்தம்-மனது,ஏகாந்தமானதரிசனம்,தனிமையானசுவாநுபூதியைத் தரிசித்தலை—தெளிதலென்பார்-தெளிதலென்றுசொல்லுவார்கள்—நித்தம்-எப்போதும், இப்படிசெய்தக்கால்-இவ்வண்ணமநுசந்தித்தால்—நிர்வாணம்-முத்தியை,பெறுவாய்நீ-நீயடைவாய்-எ-று

(இ-ரு-க-ம்.)அஞ்ஞானமுதலியதடைகளைக்கேட்டன்முதலியவுபாயங்களாற்கெடுக்கிறசுபாநுபவந்தடையின்றிவிளங்குமென்பதாம்.

(அ-கை)அக்கேட்டன்முதலியவைகள்வேண்டுங்காலவளவுகூறல்.

எத்தனைநாண்ஞாதாவுஞானமுமிருக்குமென்னி
லத்தனைநாளும்வேண்டுமப்பாலோர்செயலும்வேண்டா
நித்தமும்வெளிபோற்பற்றுறுஞயமாத்திரமாய்சீவன்
முத்தானவர்விதேகமுத்திபெற்றிருப்பரென்றும்.

இ-ள்.)எத்தனைநாள்-எவ்வளவுகாலம்,ஞாதாவும்-காண்பானும்,ஞானமும்-காட்சியும்,இருக்குமென்னில்-இருக்குமாகில், அத்தனைநாளும்

அவ்வளவுகாலமும், வேண்டும்-இக்கேட்டன்முதலியமூன்றும் வேண்டும், அப்பால்-அதற்குமேல், ஓர்செயலும்வேண்டாம்-ஓரனுஷ்டானமும்வேண்டுவதில்லை, நித்தமும்-எப்போதும், வெளிபோல்-நான்குபூதத்திலுந்தாக்கத்திருக்கின்றவாகாயத்தைப்போல—பற்று- இரிசியங்களிற்பற்றுதலிற்றும், ஞேயமாத்திரமாய்-ஆத்துமஸ்வரூபமாய், சிவன்முத்தரானவர்-சிவன்முத்திநிலையடைந்தவர்கள், என்றும்-எப்போதும் விதேகமுத்தி-விதேககைவல்யத்தை—பெற்றிருப்பார்- அடைந்திருப்பார்கள்—எ-று,

(இ-ம்.) காண்பானுங்காட்சியுநீக்கிஸ்வரூபந்தானுறெப்பரியந்தம்கேட்டன்முதலியவைகளைப் பழகவேண்டுமென்பதாம் (௬௫)

(அ-கை.) அச்சிவன்முத்தர்கள்தொகையுநாமமுஞ்சொல்லியவர்களியல்புகூறத்தொடங்கல்.

ஞானமார்சிவன்முத்தர்நால்வகையாவர்கேளாய்
வானிகர்பிரமவித்துவான்வரியான்வரிட்ட
னனவர்நாமமீதாமவர்களிற்பிரமவித்தன்
றனமுமற்றைமூவர்தாரதம்மியமுஞ்சொல்வேன்

(இ-ள்.) ஞானமார்சிவன்முத்தர்- ஞானநிறைந்தசிவன்முத்தர்கள் நால்வகையாவர்- நான்குவிதமானவர்கள்—கேளாய்-அதனைக்கேட்பாய், வானிகர்பிரமவித்து- ஆகாயத்தைக்கொப்பானபிரமவித்தெனவும், வரன்-பிரமவரனெனவும், வரியான்-பிரமவரியானெனவும், வரிட்டன்-பிரமவரிட்டனெனவும், ஆனவர்நாமமீதாம் - ஆனவர்களுடையபெயரிவையாம், அவர்களில்-அவர்களுக்குள், பிரமவித்தின்றனமும்-பிரமவித்தினிலையும், மற்றைமூவர் - ஏனைமூவருடைய, தாரதம்மியமுஞ்சொல்வேன்-தாரதம்மியத்தையுஞ்சொல்வேன்—எ-று.

(இ-ம்.) வெளிப்படை. (௬௬)

(அ-கை.) சிவன்முத்தர்களிற்பிரமவித்தினியல்புகூறல்

தீராய்ப்பிரமவித்தாய்த்தெளிந்தவர்தெளியுமுன்னம்
வாரமாயிருந்ததங்கள்வருணமாச்சிரமஞ்சொன்ன
பாரகாரியமாறுைலும்பலர்க்குபகாரமாக
நேரதாச்செய்வார்நீர்நந்நிலைவிடாச்சிவன்முத்தர்.

(இ-ள்.) தீராய்-தீரமுள்ளவர்களாய், பிரமவித்தாய்-பிரமவித்தாய், தெளிந்தவர்-தெளிவுற்றவர்கள்—தெளியுமுன்னம்-இங்ஙனந்தெளிவதற்குமுன்பு, வாரமாயிருந்த- உரிமையாயிருந்த—தங்கள்- தங்களுடைய, வருணமாச்சிரமம்-வருணாச்சிரமங்களைக்குறித்து, சொன்ன-கன்மநூலாற்சொல்லப்பட்டவைகள், பாரகாரியமானாலும்-வருத்தமானகருமங்களாயினும், பலர்க்குபகாரமாக-யாவர்க்குமனுகூலமாக, தீர்ந்தநிலைவிடா-முடிவானநிச்சயத்தைவிட்டுநீங்காத, சிவன்முத்தர்-பிரமவித்தானவர்கள், நேரதாச்செய்வார்-கிரமமாகவவற்றைச்செய்வார்கள்-எ-று.



(இ-ம்.) பிரமவித்துலோகோபகாரநிமித்தஞ்சற்கருமமனுஷ்டிப்பானென்பதாம் (௬௭)

(அ-கை) (இ-து)

காமமாதிகள்வந்தாலுங்கணத்திற்போமனத்திற்பற்றார்
தாமரையிலைத்தண்ணீர்போற்சகத்தொடுகூடிவாழ்வார்
பாமரரெனக்காண்பிப்பர்பண்டிதத்திறமைகாட்டார்
ஊமருமாவருள்ளத்துவகையால்சிவன்முத்தர்.

(இ-ள்) காமமாதிகள்வந்தாலும்- காமமுதலியவைகளொருபோது நேரிட்டாலும், கணத்திற்போம்- அநிச்சாபிராரத்வமாகக்ஷணத்தினீங்கும், மனத்திற்பற்றார் - மனதில்வையார்கள், தாமரையிலைத்தண்ணீர்போல்-கமலபத்திரோதகம்போல, சகத்தொடுங்கூடிவாழ்வார்-உலகத்தாருடன்சேர்ந்துவாழ்வார்கள், பாமரரென-அஞ்ஞானிகளைப்போல, காண்பிப்பார்-காட்டுவார்கள், பண்டிதத்திறமைகாட்டார்-வித்துவத்திறத்தைத்காண்பியார்கள், உள்ளத்து-அகத்தின்கண், உவகையாம்-நித்தியாநந்தத்தையுடைய. சிவன்முத்தர் - பிரமவித்தானவர்கள்—ஊமருமாவார்-மௌனமாயிருப்பார்கள்—எ-று. காமமாதிகள்வந்தாலுமென்றவும்மை அவைகள்வாராவென்பதை யுணர்த்தியதாம்.

(ப-ம்.) பிராரத்வானுபவித்தற்கிருப்படியானஇச்சையாதிகளொருபோதேகதேசமாகவுதிக்கினும்- அவைகளாத்மசுகத்தை-விளக்குதற்கு வெஞ்சகமாநின்றுவிளக்கித் தானுடனேநசித்தலின், காமாதிகள்வந்தாலுங் கணத்திற்போமெனவும்- மனம்-பூரணானந்தமாகத்தெளிந்திருத்தலின்மனத்திற்பற்றாரெனவும் உலகருடன்மனமொவ்வாமல் வாக்குங்காயமுமொத்திருத்தலை-தாமரையிலைத்தண்ணீர்போற்சகத்தோடுங்கூடிவாழ்வாரெனவும்-எவரெவரெங்ஙனமெங்ஙனம்வஸ்துநிச்சயங்கூறினுமந்நிச்சயங்களனைத்துந் தனதுசுவானுபவத்திற்கொத்தலினவைகளைமறுக்கத்தெளிவின்றியபேதையர்கள்போலக்காட்டுதலை-பாமரரெனக் காண்பிப்பாரெனவும் அங்ஙனநிச்சயங்களனைத்துந் தனதனுபவவியாபகத்திற்கம்சமாகத்தானவைகளினங்கியாகவிளங்குமனுபவத்தையறிவியாதிருத்தலை-பண்டிதத்திறமைகாட்டாரெனவும் துரியாதீதமான மகாமௌனமாயிருத்தலை ஊமருமாவாரெனவும் மனஞ்சென்றவிடமெல்லாஞ்சிதானந்தமாகவிளங்குதலை உள்ளத்துவகையாமெனவுங்கூறினர்.

(இ-ம்.) பிரமவித்தினனுபவவிலாசத்தைக்கூறினதாம். (௬௮)

(அ-கை) (இ-அ)

பேதகன்மத்தால்வந்தபிராரத்வநாநாவாகு
மாதலால்விகாரங்களவரவர்க்கானவாகு
மாதவஞ்செயினுஞ்செய்வர்வாணிபஞ்செயினுஞ்செய்வர்
பூதலம்புரட்பலாயம் புகுந்துண்பர்சீவன்முத்தர்.

(இ-ள்,) பேதகன்மத்தால்வந்த-அறிவின்மையானசஞ்சிதகன்மத்தா லுண்டான,பிராரத்வம்-பிராரத்வகன்மம்—நாநாவாகும்-பலவிதமாம் ஆதலால்-ஆதலினுல்,விகாரங்கள்-விருத்திகள், அவரவர்க்கானவாகும் அவரவர்களுக்கு நியமித்தவையாம், சீவன்முத்தர் பிரமவித்தானவர்கள், மாதவஞ்செயினுஞ்செய்வர் - மகாதவத்தைச்செய்தாலுஞ்செய்வார்கள், வாணிபஞ்செயினுஞ்செய்வர்-வியாபாரஞ்செய்தாலுஞ்செய்வார்கள், பூதலம்புரப்பர்-பூமிபாலனஞ்செய்தாலுஞ் செய்வார்கள், ஐயம்புகுந்துண்பர்-பிட்சைவாங்கிப்புசித்தாலும்புசிப்பார்கள்-எ-று.)

(இ-ம்) பிரமவித்தைத்தொழிலைச்செய்யினும் அவைகள் பிராரத்வகன்மமேயன்றி யவர்க்கில்லையென்பதாம். (௬௭)

(அ-கை) (இ-அ)

சென்றதுகருதார்நாளைச்சேர்வதுநினையார்கண்முன்
னின்றதுபுசிப்பார்வெய்யினிலவாய்விண் விழுதுவிழ்ந்தும்
பொன்றினசவம்வாழ்ந்தாலும் புதுமையாயொன்றும்பாரார்
நன்றுதீதென்னார்சாட்சிநடுவானசீவன்முத்தர்.

(இ-ள்) சென்றதுகருதார்-முன்னீங்கினவைகளைநினைத்து வாடார்கள்—நாளைச்சேர்வதுநினையார்-எதிர்காலத்தவரும்பொருளைநினைத்து மகிழார்கள்—கண்முன்னின்றதுபுசிப்பார்-நிகழ்காலத்துள்ள பொருளைப்பிராரத்வமென்றனுபவிப்பார்கள்—வெய்யில்-உஷ்ணகிரணமானது—நிலவாய்-அமிர்தகிரணமாய்—விண்விழுதுவிழ்ந்தும்-ஆகாயத்தினின்றும்விழுவதாகவிறங்கினுலும்—பொன்றின-மரித்த—சவம்வாழ்ந்தாலும்-பிரேதஞ்சீவித்தாலும்—புதுமையாய்-அதிசயமாக, ஒன்றும்பாரார்-ஒன்றையுங்காணுர்கள், நன்றுதீதென்னார்-இதுநன்றென்றுந்தீதென்றுஞ்சொல்லார்கள்—சாட்சி-சாட்சியாய்—நடுவான-மத்தியதமாய்விளங்கிய—சீவன்முத்தர்-பிரமவித்துக்கள்—எ-று.

[ப-ம்] முன்புள்ளவறிவின்மையும்-பின்புள்ள கிரியைஉணர்வையுங்காணுது-நடுநிலையாகிய பாவுணர்வில் சுகித்திருத்தலின் சென்றது கருதார் நாளைச்சேர்வது நினையார்கண்முன்னின்றது புசிப்பாரெனவும் சகலவிசித்திரமுந் தனதலீலையாகக்கருதி அவைகளில் வியப்புறுதிருத்தலின் வெய்யினிலவாய் விண்விழுதுவீழ்ந்தும் பொன்றின சவம்வாழ்ந்தாலும் புதுமையாயொன்றும் பாராரெனவும் சர்வமுந்



ததுசித்திருவமாகவிளங்குதலின் நன்றுதீதென்னுரெனவும் மத்தியதசர்வசாட்சியான தர் னத்துவிதமாக விளங்குதலின் சாட்சிநடுவான சீவன்முத்தரெனவும் கூறினர்.

(இ-ம்) பிரமவித்து மனமடக்கியனுபவமாய்நிற்றலினென்றைக்கருதுதலும் வியப்புறுதலுமிலவென்பதாம் இந்நான்குசெய்யுளின் முந்தின பிரமவித்தி னியல்பைக்கூறினதெனக்கொள்க. (௬௮)

(அ-கை) மற்றமூவரியல்புகூறல்.

பின்னைமூவரிலிரண்டுபேர்களுஞ்சமாதியோகந்
தன்னையுற்றிருப்பார்தேகசஞ்சாரநிமித்தந்த னு
யுன்னுவோன்வரன்வேற்றோராலுணர்பவன்வரியானரு
மன்னியர்தம்மாற்றன்னாலறியாதோன்வரிட்டனுமே.

(இ-ள்) பின்னைமூவரில்-மற்றமூன்றுபேர்களில்—இரண்டுபேர்களும்-பிரமவான் பிரமவரியானென்னு மிரண்டு சீவன்முத்தர்களும்—சமாதியோகந்தன்னை-சமாதிஞானத்தை—உற்றிருப்பார்-அடைந்திருப்பார்கள், தேகசஞ்சாரநிமித்தந்தானுய்—தேகஞ் சஞ்சரிக்கும்பொருட்டு, உன்னுவோன்-உணவுமுதலியவற்றை நினைப்பவன்—வரன்-பிரமவானும்—வேற்றோரால்-மற்றொருவரால்—உணர்பவன்-முன்சொல்லியவைகளைக்கொள்ளவறிபவன்—வரியானரும் - பிரமவரியானரும், அன்னியர்தம்மால் பிறராலும்—தன்னால்-தம்மாலும், அறியாதோன்-முன்சொல்லியவைகளைக்கொள்ளவறியாதவன்—வரிட்டனும் பிரமவரிட்டனும்-எ-று.

பிரமவரிட்டன்சமாதியிலதீதமானவனெனக்கொள்க

(இ-ம்) பின்னுள்ளபிரமவரன் பிரமவரியான் பிரமவரிட்டனிவர்களியல்பைக்கூறினதாம். (௬௯)

(அ-கை) இந்நால்வர்பயன்களைக்கூறல்

அரிதாகுமிவர்களிவ்வாறநேகராலுமுத்தி
சரியாகும்பாடுபட்டசமாதிக்குப்பலனேதென்றால்
பெரிதானதிட்டதுக்கம்பிரமவித்தனுபவிப்பன்
வரியானும்வரனுமற்றைவரிட்டனுஞ்சுகமாய்வாழ்வார்.

(இ-ள்) அரிதாகும்-திரிலோகத்துல்லபமாகும்—இவர்கள் இச்சீவன்முத்தர்கள்—இவ்வாறு-இவ்வண்ணம்—அநேகராலும்-அநந்தராலும், முத்திசரியாகும்-வீடொருதன்மைத்தாம்—பாடுபட்ட-வருத்தமுற்றுச்செய்த—சமாதிக்கு-நிஷ்டைக்கு, பலனேதென்றால் - பிரயோசனமியாதென்னில்—பெரிதான-மகத்தான—வரியானும் - பிரமவரியானும்—வரனும்-பிரமவானும்—வரிட்டனும்-பிரமவரிட்டனும் சுகமாய்வாழ்வார்-நிரதிசயானந்தமாகவாழ்வார்கள்—மற்றை-ஏனைய

பிரமவித்து-அச்சமாதியிற்பாடுபடாத பிரமவித்தானவன்—திட்டதுக்கப்-நெடுந்துன்பங்களை—அனுபவிப்பன்-அனுபவிப்பான்-எ-று.

(இ-ம்) இச்சீவன்முத்தர்கள் பிராரத்வத்தினால்வருஞ் சுகதுக்கானுபவத்திற் றூரதம்மியராயினும் பிரமானந்தவைவல்யப்பேற்றி லஃதில சொல்பதாம். (௰)

(அ-கை) முத்தன்பெத்தனியல்புகூறல்.

பிரமஞானிகளுங்கன்மப்பேதையர்போலவாழ்ந்தாற்
றிரமுறுமஞ்ஞானம்போய்ச்செனியாதவழியேதென்னிற்
பரவுமாகாயமொன்றிற்பற்றுதமற்றைநாளும்
விரவினதேர்க்கூடும்விதமிருவோருமாவார்.

(இ-ள்) பிரமஞானிகளும்-ஸ்வரூபஞானிகளும், கன்மப்பேதையர்போல-கர்மிகளானவஞ்ஞானிகளைப்போல—வாழ்ந்தால் - ஜீவித்திருந்தால்—திரமுறுமஞ்ஞானம்போய்-நிலையாகத்தோற்றியவதியாமை நசித்து—செனியாத-இனிப்பிறவாத, வழியேதெனில்-மார்க்கமியாதென்றால், பரவுமாகாசம்-வியாபித்திருக்குங்கனயானது, ஒன்றிற்பற்றுது ஒன்றிலுந்தோயாதுநிற்க, மற்றைநாளும் - பற்கறநான்குபூதங்களும், விரவினதோடுங்கூடும்-ஒன்றுடனொன்றுகலக்கும், விதம் - இவ்விதமாக, இருவோரும்- ஞானியஞ்ஞானிகளிருவரும், ஆவார் - ஆவார்—எ-று.

(இ-ம்) ஞானி யஞ்ஞானிகளின்கிரியை யொன்றுயினுங் கருத்து வேறென்பதாம். (௰௧)

(அ-கை) சீவன்முத்தர்களின் றரிசனமகிமை சொல்லியவர்கள் விதேகமுத்தரானவழி சொல்லத்தொடங்கல்.

சீவன்முத்தரைச்சேவித்தோர்சிவனயனெடுமாலான
மூவருமகிழநோன்புமுழுவதுஞ்செய்தசற்ம
பாவனமாகுமென்றுபலமறைமுழக்குமிப்பால்
மேவருஞ்சீவன்முத்தர்விதேகமுத்தியுநீகேளாய்.

(இ-ள்) சீவன்முத்தரை-சீவன்முத்தர்களை, சேவித்தோர்- தரிசித்தவர்கள், சிவன்-அரனும், அயன்-பிரமனும், நெடுமால்-திருமாலும், ஆன-ஆகிய மூவருமகிழ-மும்மூர்த்திகளுமகிழ்வுகூர, நோன்புமுழுவதுஞ்செய்து தவங்களனைத்துமுடித்த, சற்மபாவனமாகுமென்று-பவம்பரிசுத்தமானார்களென்று, பலமறைமுழங்கும்-அநந்தவேதங்களுமுறையிடும், இப்பால்-இனி, மேவருஞ்சீவன்முத்தர்- அறிதற்கரியசீவன்முத்தர்களடையும், விதேகமுத்தியும்-விதேகமுத்திப்பதத்தையும், நீகேளாய்-நீகேட்பாய்-எ-று. (௰௨)

சற்மபாவனமாகுமெஃப்படி ஞானதனுவாயினதெனக்கொள்க.



(அ-கை) கன்மத்திரயவொழிபுகூறல்

பஞ்சினைமூழித்தீப்போற்பலசன்மவிவிதவித்தாஞ்
சஞ்சிதமெல்லாஞானத்தழல்சுட்டுவெண்ணீறாக்கும்
மிஞ்சிலாகாமியந்தான்கிட்டாமல்விட்டுப்போகும்
விஞ்சினபிராரத்வத்தின்வினையனுபவித்துத்தீரும்.

(இ-ள்) பஞ்சினை-பஞ்சை, ஊழித்தீப்போல் - வடவாநலமெரிப்பதுபோல, பலசன்மம்-அநந்தபவங்களுண்டாகுதற்கு, விவிதவித்தாம் பலவிதவிதைகளான, சஞ்சிதமெல்லாம்-சஞ்சிதகன்மங்களனைத்தையும், ஞானத்தழல்-ஞானாக்கினியானது, சுட்டுவெண்ணீறாக்கும் - எரித்துவெண்மையாகியசாம்பலாக்கும், மிஞ்சில் அற்பமும், ஆகாமியந்தான் - ஆகாமியகன்மமானது, கிட்டாமல்விட்டுப்போகும்- நெருங்காமனீக்கும், விஞ்சின-மேலிட்ட, பிராரத்வத்தின்வினை - பிராரத்துவகன்மமானது, அனுபவித்துத்தீரும் - மூன்றுவிதமாகவனுபவித்து நீங்கும்-எ-று.

மூவிதமான் இச்சை யனிச்சை பரவிச்சையென்பனவாம் (௰௩)

(அ-கை) இருவினைநீங்குமேதுகூறல்.

பொறுமையாற்பிராரத்வத்தைப்புசிக்குநாட்செய்தகன்ம
மறுமையிற்றொடர்ந்திடாமன்மாண்டுபோம்வழியேதென்னிற்
சிறியவரிகழ்ந்துஞானிசெய்தபாவத்தைக்கொள்வ
ரறிபவரறிந்துபூசித்தறமெலாம்பறித்துண்பாரே.

(இ-ள்) பொறுமையால்-சாந்தத்தினால், பிராரத்வத்தை- பிராரத்தகன்மத்தைப், புசிக்குநாள்-அனுபவிக்குங்காலத்தில், செய்தகன்மம்-செய்யுங்கருமங்கள், மறுமையில்-மேற்பிறவியைக்கொடுப்பதற்கு, தொடர்ந்திடாமல்-தொடர்ந்துவராமல், மாண்டுபோம்-நசிக்கும், வழியேதென்னில்-மார்க்கமியாதென்றால், சிறியவரிகழ்ந்து-மூடர்களிகழ்ந்து, ஞானிசெய்த-ஞானவான்செய்யும், பாவத்தைக்கொள்வர்- பாவகன்மத்தைப்பெற்றுக்கொள்வார்கள், அறிபவர்-விவேகிகள், அறிந்து-சிவஸ்வரூபமென்றறிந்து, பூசித்து ஆராதித்து, அறமெலாம்-அவர்கள்செய்யுந்தருமங்களனைத்தையும், பறித்துண்பார்-கவர்ந்தனுபவிப்பார்கள்-எ-று. (௰௪)

(அ-கை) சரீரத்திரயவொழிபுகூறல்

அரியமெய்ஞ்ஞானத்தீயாலவித்தையாமூடனீறாமே
பெரியதூலமூங்காலத்திற்பிணமாகிவிழுமந்தநாசம்
மூரியசூக்குமசரீரவுலையிரும்புண்டநீர்போற்
றூரியமாய்விபுவாய்நின்றசொரூபத்திலிறந்துபோமே.

(இ-ள்.) அரியமெய்ஞ்ஞானத்தீயால்-அறிதற்கரியஞானாக்கினியினால் அவித்தையாமூடனீறும்-காரணசரீரநசிக்கும், பெரியதூலமும்-பரு

த்தூலசரீரமும்,காலத்தாற்பிணமாகிவிழும் - காலநியமப்படி பிரேதமாம், அந்நேரம்-அப்போது,உரியசூக்குமசரீரம் சாதனத்தாக்குரித்தானசூக்குமதேகமானது,உலையிரும்பு-கொல்லனுலையிற்காய்ந்தவயமானது,உண்ட நீர்போல்-கிரகித்தசலத்தைப்போல, துரியமாய்-துரியமாகவும்,விபுவாய்நின்ற-வியாபகமாகவுமிருந்த,சொரூபத்திலிறந்ததுபோம்-பிரமஸ்வரூபத்தினசிக்கும்—எ-று.

(இ-ச க-ம்) சஞ்சிதவினையுங்காரணசரீரமும்பரஞானத்தினாற்கெடுதலுமாகாமியவினையுஞ்சூக்குமதேசமு மந்தஞானத்திலயமாகுதலும் பிராரத்வகன்மமுந் தூலதேகமு நியமித்தகாலவளவி னீக்குதலுமாமென்பதாம். (௭௫)

(அ-கை.) விதேகமுத்தியினியல்புகூறல்.

கடமெனுமுபாதிபோனாற்ககனமொன்றானாற்போல
வுடலெனுமுபாதிபோனவுத்தாஞ்சீவன்முத்த
ரடிமுடி நடுவுமின்றியகம்புறமின்றிநின்ற
படிசிகழ்விதேகமுத்திப்பதமடைந்திருப்பாரொன்றும்.

(இ-ள்) கடமெனும் குடமென்கிற,உபாதிபோனால்-உபாதிநீங்கினால், ககனமொன்றானாற்போல-கடாகாயமுதலியநான்கு மேகமானதுபோல,உடலெனும்-மூன்றுதேகமென்கிற,உபாதிபோனவுத்தாம்-உபாதிநீங்கினக்ஷணம் —சீவன்முத்தர் - சீவன்முக்தரானவர், அடிமுடிநடுவுமின்றி-ஆதிமத்யாந்தரகிதராய், அகம்புறமின்றி-உட்புறமின்றி என்றுநின்றபடி நிசழ்- எப்போதுமிருந்தவண்ணம் விளங்குகின்ற, விதேகமுத்திப்பதம்-விதேகமுத்திப்பதத்தை, அடைந்திருப்பார், பெற்றிருப்பார்—எ-று. (௭௬)

(அ-கை.)இவ்வனுபவமெய்ஞ்ஞான்றும்விளக்குவதெனல்

சொல்லியமகனேயெங்குஞ்சூழ்வெளியிருக்கமண்ணைக்
கல்லியபின்புதோன்றுங்கிணற்றினுகாயம்போல
வெல்லையும்பிரமநூலாலுற்றதுபோலேதோன்று
மெல்லையினுமெப்போதுமேகமென்றிருந்திடாயே.

(இ-ள்.)சொல்லியமகனே-முன்னனுபவஞ்சொன்னபுத்திரா,எங்கும்-எவ்விடத்தும்—சூழ்வெளியிருக்க-சூழ்ந்தவாகாயமிருக்க,மண்ணை பூமியை,கல்லியபின்பு-அகழ்த்தபின்பு,தோன்றும்-உண்டானதுபோலத்தோற்றுகின்ற,கிணற்றினுகாயம்போல-கூபாகாசம்போல, எல்லையாம்பிரமம்-அநாதியாய்விளக்குகின்றபிரமஸ்வரூபமானது,நூலால்-ஆத்மஞானசாஸ்திரங்களால்,உற்றதுபோலேதோன்றும் - உதித்ததுபோலத்தோன்றும், எல்லையில்-பிரமானுபூதியான, நாய்-சுத்தசைதன்னியஸ்வரூபமானயாம்,எப்போதும்-எக்காலமும்,ஏகமென்றிருந்திடாய்-ஒன்றேயென்றிருப்பாய்—எ-று,

(இ-உ-க-ம்) இப்போதுதித்ததுபோலத்தோன்றியவனுபவஞ்சிருட்டிக்குமுன்னும் பின்னு நடுவுமான வெப்போதுமிருந்து நித்தியதிருத்தியாக விளங்கிய சச்சிதானந்தமேயன்றி இப்போதுதித்ததன்றென்பதாம். (௭௭)

(அ-கை) சத்தசத்தியினுண்மையைத்தெரிவித்தல்.

கானநீர்கிளிஞ்சில்வெள்ளிகந்தர்ப்பநகர்கநாவூர்
வானமைகயிற்றிற்பாம்புமலடிசேய்முயலின்கோடு
பீனமாந்தநிபுமாணிப்பிரபஞ்சமெல்லாம்பொய்யே
ஞானமெய்மகனேயுன்னைநம்மாணைமறந்திடாதே.

(இ-ள்) கானனீர்-கானற்சலம்போலவும்—கிளிஞ்சில்வெள்ளி-சுத்திகாரசிதம்போலவும்—கந்தர்ப்பநகர்- கந்தர்வநகரம்போலவும்—கநாவூர்-சொர்ப்பநநகரம்போலவும்—வானமை- ஆகாயநீலம்போலவும், கயிற்றிற்பாம்பு-ரச்சுசர்ப்பம்போலவும்—மலடிசேய்-வந்தியாபுத்திரன்போலவும்—முயலின்கோடு- சசவிஷாணம்போலவும்—பீனமாந்திபுமான்-பருத்ததாணுசோரனைப்போலவும்,இப்பிரபஞ்சமெல்லாம் பிரமத்திற்றோற்றுகின்றவிச்சகத்தனைத்தும்—பொய்யே-மித்தையேயாம்—ஞானமெய் சுத்தசைதன்னியமொன்றுமேயுண்மையாம், மகனே-மாணாக்கனே, உன்னை - இங்ஙனம்விளங்கியவுனது ஸ்வரூபசைதன்னியத்தை—நம்மாணை -நமதாணைப்படிக்கு—மறந்திடாதே- மறவாமலநுவாய்விளங்குவாய்—எ-று.

(இ-ம்.) எப்போதுஞ் சத்தான சுகபோதமிருக்கிறதேயன்றியசத்தான திரிசியங்களிலவென்பதாம். (௭௮)

தத்துவவிளக்கப்படலம்-முற்றுப்பெற்றது.

சிவமயம்.

# இரண்டாவது
# சந்தேகந்தெளிதற்படலம்.

(அ-கை) முற்படலத்திற் றத்துவமான வானந்த பிரஞ்ஞையை நிஷ்டாபிரஞ்ஞையால்விளக்கி யினிச்சொரூப பிரஞ்ஞையினுன் முற்கற்பனையாகத்தோற்றிய சிவேஸ்வரசகஞ் சிற்சுகாகாரமாக விளங்குவதை விளக்கும்பொருட்டுச் சந்தேகந்தெளிதலைக்கூறுகின்றார்.

நார்குழிபறித்துமெள்ள நாட்டியநெடியகம்ப
மூரமுறக்குத்திக்குத்தியுரப்பிக்குமுபாயம்போலப்
பரமமாஞ்சொரூபந்தன்னிற்பற்றியமனோவிருத்தி
திரநிலைபெறச்சந்தேகந்தெளிதலைமொழிகின்றேனே.

(இ-ள்) நரர்-மானிடர்கள்—குழிபறித்து- பள்ளங்கல்லி—மெள்ள நாட்டிய-மெள்ளவெடுத்துநட்ட—நெடியகம்பம் - நீண்டஸ்தம்பமானது—உரமுற- அசைவின்றித்திரமாகநிற்குப்பொருட்டு—குத்திக்குத்தி-குத்திக்குத்தி—உரப்பிக்கும் - பலப்படுத்துகின்ற—உபாயம்போல-யுக்தியைப்போல—பிரமமாஞ்சொரூபந்தன்னில்—பிரமஸ்வரூபத்தில்—பற்றியமனோவிருத்தி-பொருந்தியசித்தவிருத்தியானது, திரநிலைபெற-திரநிலைமையடையும்பொருட்டு, சந்தேகந்தெளிதலை-சந்தேகந்தெளிதலை, மொழிகின்றேன்-சொல்லுகின்றேன்-எ-று.

இத்திட்டாந்தந்தூணக நந்நியாயமெனக்கொள்க.

(ப-ம்.) காணல்லாதவிஷயங்களை நீக்கித் தானேயபிரமத்திற்கலந்தமனம் அப்பிரமவியாபகமான பூரணவிருத்தியிற் சஞ்சரிக்குமிடத்திற் சர்வம்பிரமமயமென்னுஞ் சாட்சாத்காரானுபவந் தடையின்றி விளங்குவதே, விவகரித்தும் விவகரியாதநிலையாதலின் அதற்குத் தடையாயுள்ளவைகளைக் களைதல்வேண்டுமென்பார், சொரூபத் தன்னிற்பற்றிய மனோவிருத்திதிரநிலைபெறச் சந்தேகந்தெளிதலென்றார்.

(இ-ம்) சித்தினிடத்துதயமாய்ப் பகிர்முகமின்றியச்சித்திற் கரைந்தமனமானது சென்றவிடமெல்லாஞ்சிதானந்தமாக ரமிக்கும்பொருட்டுச் சந்தேகந்தெளிதலைக்கூறத்தொடங்கினதாம். (௧)

(அ-கை) குருகுலவாசஞ்செய்யுந்தன்மையைக்கூறல்.

தற்கருத்துடையோனாகிஞானவானாகிநின்றோன்
மர்க்கடநியாயம்போலமகாபூதவிகாரந்தொட்டு
நிர்க்குணவிதேகமுத்திநிலைபரியந்தஞ்சொன்ன
சற்குருவினைவிடாமற்சந்ததமனுசரித்தான்.

(இ-ள்) தற்கருத்துடையோனாகி-பேரானந்தமானசிந்தையையுடையவனாய்—ஞானவானாகி சைதன்னியஸ்வரூபியாகி—நின்றோன்-இருந்தசிட்டனானவன்—மர்க்கடநியாயம்போல - மர்க்கட நியாயத்தைப்போல. மகாபூதவிகாரந்தொட்டு-பஞ்சபூதகாரியமான தூலதேகமுதல், நிர்க்குண-திரிகுணரகிதமான—விதேகமுத்திநிலைபரியந்தம்-விதேகவைவல்யமட்டும், சொன்னசற்குருவினைவிடாமல் - அருளியவாசாரியனைவிட்டுநீங்காமல்—சந்ததமனுசரித்தான் - சதாகாலமுந்தொடர்ந்துநின்றான்—எ-று. (௨)



(அ-கை) ஆசிரியர் சீடனை யனுபவம்வினாதல்.

சந்ததம்புருடன்றன்னைச்சாயைபோல்விடாமலன்பா
மைந்தனைநோக்கிச்சாட்சிமாத்திரமாய்நின்றோயோ
சிந்தையிலையமெல்லாந்தீர்ந்ததோதெளிவினுள்ளே
யந்தரங்கலந்ததுண்டோவனுபவமுரைசெய்வாயே.

(இ-ள்) சந்ததம்-எப்போதும், புருடன்றன்னை- ஓர்புருடனை—சாயைபோல்-விட்டுநீங்காதசாயையைப்போல—விடாமல்- ஆசாரியனைவிட்டுநீங்காமல்—அன்பாமைந்தனை-அன்புருவமாய்நிற்கின்றசீடனை, நோக்கி- அருட்கண்சாத்தி, சாட்சிமாத்திரமாய்நின்றோயோ-பிரத்யேகாத்மஸ்வரூபமாகநிற்கின்றாயோ, சிந்தையில்-மனதின்கணுள்ள, ஐயமெல்லாம்-சமுசயங்களனைத்தும், தீர்ந்ததோ-நீங்கினவோ, தெளிவினுள்ளே-தெளிவின்கண்—அந்தரம்-ஜீவேஸ்வரசகத்பேதம், கலந்ததுண்டோ-சேர்ந்ததுமுளதோ, அனுபவமுரைசெய்வாய்- உனதனுபவத்தைச்சொல்வாய்-எ-று.

(இ-ம்) பேதமின்றித் தெளிவாகச் சுவானுபவமாய் விளங்குகின்றாயோவென மூவகையாகவினாவினதாம். (௩)

(அ-கை) மூன்வினாமூன்றற்கும் விடைகூறல்.

எனவுரைத்தருளுமாசானிருபதம்வணங்கியெந்தாய்
சனனவன்காட்டின்மோகத்தமத்தெழுபேதப்பேய்க
ளுனகருணையவெற்பிலுபதேசவருக்கன்றோன்றி
மனவிழிதெரியஞானவான்கதிர்பரந்தாலுண்டோ.

(இ-ள்) எனவுரைத்தருளும்-என்றுகேட்டருளிய, ஆசானிருபதம்வணங்கி-தேசிகருபயபாதங்களைப்பணிந்து, எந்தாய்-என்னுடையபிதாவே—சனனவன்காட்டில் - வலிமையானபவாரணியத்திலிருக்கும்—மோகத்தமத்து-மோகாந்தகாரத்தில்—எழும் - தோன்றுகின்ற—பேதப்பேய்கள்-பேதங்களென்னும்பிசாசங்கள்—உனகருணையவெற்பில்-தேவரீரது கருணையென்னுமுதயகிரியில்—உபதேசவருக்கன்றோன்றி-பிரமோபதேசமென்னுஞ்சூரியனுதித்து, மனவிழிதெரிய அகக்கண்விளங்க.ஞானவான்கதிர்-மேலானசிற்பிரகாசமானது, பரந்தால்-வியாபித்தால், உண்டோ-இருக்குமோ—எ-று.

[ப-ம்] சாட்சிமாத்திரமாய் விளங்குகின்றதென்பார் உபதேசவருக்கன்றோன்றியெனவும் சிந்தையிலையமெல்லாந் தீர்ந்ததென்பார் மனவிழிதெரியுமெனவும் அந்தரமானபேத முதிக்கவில்லையென்பார் ஞானவான்கதிர்பரந்தாலுண்டோவெனவுங்கூறினார்.

(இ-ம்.) தனதனுபவத்திற் சந்தேகவிபரீதமின்றென்பதையறிவித்ததாம். (௪)

அ-கை சமாதியிற்றடையின்றியினுஞ் சகசத்திலவையின்றிநிற்பதற்கு வினவவேண்டுவதன்றெனல்.

மந்திரமூர்த்திதன்னான்மாற்றியபேய்போனது
மெந்திரமெழுதிக்கட்டியினிவராவகைசெய்வார்போன்
முந்தியுன்னுபதேசத்தான்மோகம்போனதுமையா
புந்திநின்றுணாக்கவின்னம்புகலும்விண்ணப்பமுண்டே.

(இ-ள்) மந்திரமூர்த்திதன்னால்-மாந்திரிகனால்—மாற்றியபேய்-நீக்கியபிசாசமானது—போனதும்-நீங்கினதும், எந்திரமெழுதிக்கட்டி-எந்திரஸ்தாபனஞ்செய்து, இனிவராவகை-மேல்வாராதவண்ணம்—செய்வார்போல்-செய்பவர்களைப்போல—முந்தி-முன்னமே—உன்னுபதேசத்தால்-தேவரீரனுக்கிரகத்தினால்,மோகம்போனதும்-மயக்கநீங்கினதும், ஐய-எனதாசிரியரே—புந்திநின்றுணாக்க-அறிவுநிலைபெறும்பொருட்டு—இன்னம்-மேலும், புகலும்விண்ணப்பமுண்டு அடியேன்கேட்கும் விண்ணப்பமுள்ளது-எ-று.

(இ-ம்)சகசத்துக்குத் தடையாயுள்ள சந்தேகங்களை நீக்கும்பொருட்டு வினவத்தொடங்கினதாம். (௫)

அ-கை. சீடன் றனக்கனுபவமான பிரமவஸ்து மனோவாக்குக்ககோசரமா, கோசரமாவென வறியுநிமித்த மன்னனக்கூறுஞ்சுருதிவாக்கியத்தை யிரண்டுசங்கையாக வினாதல்.

ஆகமப்பிரமாணத்தாலறியென்றும்வாக்குக்கெட்டா
தேகமாம்பிரமமென்றுமிதயத்தாலுணர்வாயென்றுஞ்
சோகமாமனதிற்கெட்டாச்சுயஞ்சோதியென்றுஞ்சொன்னீர்
மோகமாமிரண்டுசங்கைமுளைத்தனபறித்திடீரே

(இ-ள்,) ஏகமாம்பிரமம்-அத்துவிதபிரமத்தை, ஆகமப்பிரமாணத்தால்-வேதமுடிவானமகாவாக்கியப்பிரமாணத்தினால், அறியென்றும்-அறிவாயெனவும், வாக்குக்கெட்டாதென்றும்-வேதவாக்கியத்துக்கெட்டமாட்டாதெனவும், சுயஞ்சோதி-இச்சுயம்பிரகாசத்தை,இதயத்தாலுணர்வாயென்றும்-மனதினாலறிவாயெனவும், சோகமனத்திற்கு-துன்பமானமனதிற்கு, எட்டாதென்றும்-அறிதற்கரியதெனவும், சொன்னீர்-அருளினீர், மோகமாம்-மயக்கமாகிய,இரண்டுசங்கைமுளைத்தன இரண்டுசங்கைகளுளவாயின, பறித்திடீர்-அவைகளைக்களைந்திடீர்-எ-று. பிரமவஸ்து மனோவாக்குகளுக்ககோசரமுங் கோசரமுமாமென வேதங்கூறுவதை ஆசிரியர்கூறினதாகக்கொண்டு வினவினதென்க.

(இ-ம்) வெளிப்படை (௬)

அ-கை, முதற்சங்கையிற் பிரமஞ் சுருதிக் ககோசரமா மென்றதற் குத்தரங்கூறல்.



மற்றைமுப்பிரமாணத்தால்வஸ்துநிர்ணயங்கூடாதே
யுற்றதோர்விடயம்பூகமுபயமன்றாதலாலே
குற்றமாங்குணவிசேடங்கூடாமலிருக்கையாலே
யிற்றதுவாக்குக்கெட்டாதென்பதுமறிவாய்நீயே

(இ-ள்) மற்றைமுப்பிரமாணத்தால்-ஏனையமூன்றுபிரமாணங்களினாலும், வஸ்துநிர்ணயங்கூடாது-ஸ்வரூபநிச்சயத்தையறிதற் கூடாதாம், உற்றதோர்விடயம்-பிரத்தியட்சமெதிரிடுவதோர்விஷயமாதலானும், பூகம்-அனுமானங் காரியத்தைக்கொண் டறியப்படுங் காரணமாதலானும், உபயம்-உபமானமுபமேயமென்னுமிரண்டாதலானும், அன்றாதலால்-கூடாததாதலால், குற்றமாம்-அவைகளா லறியலாமென்பதும் பிழையேயாம், குணவிசேடம்-குணவிசேடங்களானவை, கூடாமலிருக்கையால்-சேராதிருக்கின்றபடியால், இற்றது-இத்தன்மையானவப்பிரமம், வாக்குக்கெட்டாதென்பதும்-சத்தமாகியவேதங்களுக்கெட்டாதென்பதும், அறிவாய்நீ-தெரிந்துகொள்வாய்-எ-று.

(இ-ம்) பிரமம் அகோசரமென்பதை யுறுதிப்படுத்து நிமித்தமாக மமுதலிய நான்குபிரமாணங்களினாலு மறியக்கூடாததெனவறிவித்ததாம். (௭)

(அ-கை) அச்சங்கையிற் பிரமஞ்சுருதிக் ககோசரமாமென்றதற் குத்தரம்,

வாக்கியந்தனக்கெட்டாதவஸ்துவென்றுரைத்தவேதம்
வாக்கியவிருத்தியாலவ்வஸ்துவைக்காட்டிற்றன்றோ
வாக்கியங்களிலேமானமாவதேதென்றாயாகில்
வாக்கியமிரண்டுமெய்யேமறைகள்பொய்யாநீகேளாய்.

(இ-ள்) வாக்கியந்தனக்கு-சத்தத்திற்கு, எட்டாதவஸ்துவென்றுரைத்த-எட்டாதபொருளென்றுசொன்ன, வேதம்-வேதமானது—வாக்கியவிருத்தியால்-மகாவாக்கியவிசாரத்தால், அவ்வஸ்துவை-அப்பிரமப்பொருளை—காட்டிற்று-காட்டியது, வாக்கியங்களில்-இவ்விரண்டுவாக்கியங்களில்—மானமாவதேதென்றாயாகில்-பிரமாணமாவதியாதென்றுகேட்பாயாகில், வாக்கியமிரண்டுமெய்யே-இவ்விரண்டுவாக்கியமுமுண்மையே; மறைகள்-வேதங்கள்; பொய்யா-அசத்தியமாகா, நீகேளாய்-அதைநீகேட்பாய்-எ-று. (௮)

அன்றோவென்பதை(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை.) பிரமஞ் சுருதிவாக்கியங்களுக் ககோசரமுங் கோசரமுமெனக்கூறுதல்,

தன்பதியல்லாப்பேர்சடமையல்லனல்லனென்று
ளன்பனைக்கேட்டநேரமவன்வெட்கிமௌனமானு

னென்பதுபோலநீக்கியிதன்றிதன்றெனச்சேடித்த
பின்பரப்பிரமந்தன்னைப்பேசாமற்பேசும்வேதம்

(இ-ள்.) தன்பதியல்லாப்பேர்களை-தனது நாயகனல்லாதவர்களை, அல்லனல்லனென்றாள்-இவனல்லனிவனல்லனெனக்கூறினாள்— அன்பனைக்கேட்டநேரம்-நாயகனைக்காட்டிக்கேட்டபோது—அவள்- அத்தலைவியானவள், வெட்கி-வெட்கமுற்று, மௌனமானாளென்பதுபோல பேசாதிருந்தாளென்பதைப்போல, இதன்றிதன்றென-இதுவல்லவிதுவல்லவென்று, நீக்கி-தள்ளி, பின் பின்பு, சேடித்த-விஞ்சின, பரப்பிரமந்தன்னை பரப்பிரமவஸ்துவை, வேதம்-வேதமானது, பேசாமற்பேசும்-சொல்லாமற்சொல்லும்—எ-று.

(இ-ம்.) சுருதிசத்தருபத்தாலறிவிக்காமல் அருத்தருபத்தாலறிவிக்குமென்பதாம்.

(அ-கை) இரண்டாஞ்சங்கையிற் பிரமமனத்திற்கெட்டு மெட்டாதென்பதற்குத்தரங்கூறுவான்றொடங்கி மனோவுற்பத்தியின் காரணங்கூறுகின்றார்,

முந்தியசங்கைதீரமொழிந்ததையறிந்துகொள்வாய்
பிந்தியசங்கைதீரப்பேசுமுத்தரநீகேளா
யிந்தியங்களுக்கிராசனிசயமாமதியெண்ணங்கள்
புந்தியுமனமுமென்றேபுறத்தகத்துலாவியாடும்.

(இ-ள்.) முந்தியசங்கைதீர-முதற்சங்கைதீரும்படி, மொழிந்ததை சொன்னதை—அறிந்துகொள்வாய்-தெரிந்துகொள்வாய், பிந்தியசங்கைதீர-இரண்டாஞ்சங்கைதீரும்படி—பேசுமுத்தரம்- சொல்லுமுத்தரத்தையும், நீகேளாய்-நீகேட்பாய், இந்தியங்களுக்கு-மனமுதலியவிந்திரியங்களுக்கு, இராசன்-தலைவனாக—இசயமாம்-ஞானமாம்-அதியெண்ணங்கள்-அகநினைவுகள், புந்திமனமுமென்று - புந்தியெனவும் மனமெனவும்—புறத்தகத்து-புறம்பிலுமுள்ளிலும், உலாவியாடும்-சஞ்சரிக்கும்—எ-று.

இ-ம், ஞானஸ்மரணமே மனமும் புத்தியுமாமென்பதாம். (௰)

(அ-கை) (இ-து)

உன்முகம்போற்கண்ணாடிக்குள்ளொருமுகங்கண்டாற்போற்
சின்மயவடிவின்சாயைசித்தப்போற்புத்திதோன்றும்
நின்மலவிருத்தியந்தநிழல்வழியாயுலாவுந்
தன்மநன்மகனேயித்தைத்தானன்றோஞானமென்பார்.

(இ-ள்.) உன்முகம்போல்-உனதுவதனத்தைப்போல, கண்ணாடிக்குள்-எதிரிட்டகண்ணாடிக்குள்ளே, ஒருமுகங்கண்டாற்போல்-ஒருவர்வ



தனங்கண்டதுபோல, சின்மயவடிவின்சாயை-சைதன்யவுருவச்சாயையே, சித்தப்போல்- அறிவைப்போல, புத்திதோன்றும்-புத்தியிற்பிரதிபலிக்கும், நின்மலவிருத்தி-நின்மலவிருத்தியானது- அந்தநிழல்வழியாய்- அச்சாயையின்மார்க்கமாக, உலாவும்-சஞ்சரிக்கும், தன்மநன்மகனே-தர்மருபியானசற்புத்திரா- இத்தைத்தானன்றோ- இவ்விருத்தியையன்றோ, ஞானமென்பார்- அறிவென்றுசாத்திரக்கள்சொல்லுவார்கள்—எ-று. (ப-ம்.) அந்தக்கரணப்பிரதிபலனஞ்சிதாபாசனென்பார் சித்தைப்போற்புத்திதோன்றுமெனவும்புத்தியிற்றங்குஞ்சிற்சாயையே விருத்தியென்பார்நின்மலவிருத்தியெனவும்அவ்விருத்திசிதாபாசனுக்கிடமாகவிளங்குமென்பார் அந்தநிழல்வழியாயுலாவுமெனவும் லோகாந்தகுந்தம்போலச் சிதாபாசாந்தவிருத்தியே ஞானமென்பார் இதைத்தானன்றோ ஞானமென்பாரெனவுங்கூறினார். (இ-ம்.) விருத்திஞானமுஞ்சிதாபாசனுமினையவெனக்கூறினதாம். (௰௧)

(அ-கை) (இ-து.)

உருக்கியதராநீர்நாநாவுருவங்களானாற்போல
விருத்திகள்கடபடாதிவிடயமாய்ப்பரிணமிக்கு
மருப்பலவிடயமெல்லாமாபாசன்றோற்றுவிக்கு
மிருட்டினில்விளக்குங்கண்ணுமில்லாமற்பொருள்காணாதே,

(இ-ள்.) உருக்கியதராநீர்- குகையில்வைத்துருக்கிய தராநீரானது நாநாவுருவங்களானாற்போல - பலவிதவடிவங்களானதுபோல, விருத்திகள்-விருத்திகளானவை, கடபடாதிவிடயமாய்ப் -ரிணமிக்கும்-கடம்படமுதலிய வாகாரங்களாகவேறுபடும், விடயமெல்லாம்-விடயங்களனைத்தையும், அருப்பலப் -அரும்பலமென்னப்பட்ட ஆபாசன்றோற்றுவிக்கும்-சிதாபாசன்றெரிவிக்கும், விளக்குங்கண்ணுமில்லாமல்-தீபமும்விழியுமின்றி, இருட்டினில்-இருளிலிருக்கும், பொருள்காணாது - வஸ்து தெரியமாட்டாது—எ-று. சிற்சாயையே சகத்தாகத்தோற்றுதலின் விருத்தியேகடபடாதிவிடயமாய்ப் பரிணமிக்குமென்றார். (௰௨)

(அ-கை.) (இ-து.)

எரிகின்றவிளக்கால்கண்ணாலிருட்பொருள்காணல்வேண்டுந்
தெரிகின்றபரிதிகாணச்சென்றிடிற்கண்ணேபோதும்
விரிகின்றசகத்தைக்காணவிருத்தியும்பலமும்வேண்டும் [ர்க்கே
புரிகின்றவிருத்தியொன்றேபோதுமெய்ப்பொருள்காண்போ

(இ-ம்.) எரிகின்றவிளக்கால்-பிரகாசிக்கின்றதீபத்தினாலும், கண்ணால்-விழியினாலும், இருட்பொருள்காணல்வேண்டும் - இருட்டின்கணுள்ளவஸ்துவைப்பார்க்கவேண்டும், தெரிகின்றபரிதி-தெரியாநின்றசூரி

ல், அசுரசம்பத்துண்டாகும்- அசுரசெல்வமுண்டாகும், அறிந்துகொள்-தெரிந்துகொள்வாய்——எ-று. (௬௬)

(அ-கை.) சித்தம்சமானசத்துவஞ்சேடிக்கின்மனஞ்சித்திலசைவின்றிநிற்குமெனல்.

மனதுசத்துவசொரூப மற்றிரண்டும் வந்துகலந்தன வவற்றைமாற்றினற்போந், தனதுசன்மார்க்கத்தைவிடாதிருந்தபோதுதாமதமுமிராசதமுஞ்சமிக்கும்பின்னைக், கனபரிணாமுஞ்சலனம்போம்போனக்காற்களங்கமற்றுநின்றவாகாயம்போலு, நினதுளமப்படியாமப்பிரமத்தொன்றாய்நிருவிகற்பசமாதியிலேநிற்குந்தானே.

(இ-ள்.) மனது-மனமானது, சத்துவசொரூபம்-சத்துவவடிவமாம், மற்றிரண்டும்-மற்றராசோ தமோகுணங்களாகியவிரண்டும், வந்துகலந்தன-வந்துசேர்ந்தவைகளாம், அவற்றை-அவ்விரண்டுகுணங்களையும், மாற்றினற்போம்-நீக்கிடினீங்கும், தனதுசன்மார்க்கத்தை-தனதுசன்மார்க்கமான சத்துவகுணத்தை, விடாதிருந்தபோது-விடாமலிருந்தபோது, தாமதமு மிராசதமுஞ்சமிக்கும்-தமோகுணமுமிராசோகுணமுநசிக்கும், பின்னை-பின்பு, கனபரிணாமம்-கனமானதிரிசியமாதலும் சலனம்-அதிற்சலனமடைதலும், போம் நீங்கும்- போனக்கால்-அவைநீங்கினால், களங்கமற்றுநின்ற-நிர்மலமாயிருந்த, ஆகாயம்போலும்-அம்பரத்தைப்போலும், நினதுளம்-உன்மனமானது, அப்படியாம். அவ்வண்ணமாம், அப்பிரமத்து-அப்பிரமஸ்வரூபத்தில், ஒன்றாய் ஏகமாய், நிருவிகற்பசமாதியிலேநிற்கும்- நிருவிகற்பசமாதியிலேநிலைபெற்றிருக்கும், எ-று. (௬௭)

(அ-கை.) (இ-து.)

களங்கமற்றகண்ணாடி தன்முன்வேறோர்களங்கமற்றகண்ணாடி காட்டும்போது, விளங்கியதன்மயமாகியபேதமாகிவிசற்பமின்றிநிருவிகற்பமானாற்போல, வளந்தறியப்படாவிபுவாய்ச்சத்தாய்ச்சித்தாயானந்தமாய்ப்பிரமத்தையிக்கியமான வுளந்தெளிந்தபடியிருந்தாலுலகமெங்கேயுலைவெங்கேயென்றுசங்கையொழித்திடாயே.

(இ-ள்.) களங்கமற்ற கண்ணாடி தன்முன்-நிர்மலமாகியகண்ணாடி முன், வேறோர்-மற்றொரு, களங்கமற்றகண்ணாடி-நிர்மலமாகியகண்ணாடியை, காட்டும்போது-காண்பிக்கும்போது, விளங்கியதன்மயமாகி-பிரகாசியாநின்றதனதுஸ்வரூபமாய், அபேதமாகி-பேதமிறந்ததாகி, விசற்பமின்றி-வேறுபாடின்றி, நிருவிசற்பமானாற்போல- ஒன்றானதுபோல், அளந்தறியப்படா-அளவிட்டறியக்கூடாத, விபுவாய் வியாபகமாகியும், சத்தாய்-சத்தாகியும், சித்தாய்-சித்தாகியும், ஆனந்தமாகியும் விளங்குகின்ற, பிரமத்து-பிரமஸ்வரூபத்தில், ஐக்யமானஉளம்-ஐக்கியமான



மானதி, தெளிந்தபடியிருந்தால்-பிரமமாகத்தெளிந்தவண்ணம்விளங்கினால், உலகமெங்கே- திரிஸ்யமானசகத்தின்று, உலைவெங்கேயென்று-அதைப்பற்றியசஞ்சலமின்றென்று, சங்கையொழித்திடாய்-சந்தேகங்களைநீக்குவாய்-எ-று (இ-ங-க-ம்.) சித்தம்சமானமனஞ்சித்தாகவேவிளங்கின்சகமாதலுமதிற்சலனமடைதலுமதற்கின்றெனவறிவித்ததாம்.

(அ-கை) முற்கூறியவுத்தரத்தினாற் சித்தம்சமானஞ் சித்தேயாயிற்றெனவறிந்து மேற்சடாய்சமானமனமுமதன்சொரூபமுமெவ்விதமாயினவென்பதையறிபுநிமித்தமனஞ்சித்திலிறக்கிற் சீவன்முத்தரொக்கனஞ்சஞ்சரிப்பரொனல்

ஏகமாய்மனமிறந்தாற்சீவன்முத்த ரிருக்குமட்டும்பிராரத்வமெதிறாலுண்பார், போகமானதுபுசித்துத்தொலைப்பதன்றோ புசித்தாலுமனந்தானும்போனதன்றே, சோகமாமனமிறந்தாற்போகமில்லைதோன்றுமெனின்முத்தரொன்றுசொலக்கூடாதே, மோகமாமிதுதெளியக்குருவேநன்றாய்மொழிந்தருளவேண்டுமென்றான்முழுதுமானோன்

(இ-ள்.) ஏகமாய் பிரமஸ்வரூபமாகி, மனமிறந்தால்-மனதுநசிக்கின் சீவன்முத்தரிருக்குமட்டும்-சீவன்முத்தர்களிருக்குமளவும், பிராரத்வம் பிராரத்வகன்மங்களை, எதிறாலுண்பார்-யாதினாலநுபவிப்பார்கள், போகமானது-போகங்களை, புசித்துத்தொலைப்பதன்றோ- அநுபவித்துநீக்கவேண்டுமென்றோ, புசித்தால்-அநுபவிக்கின், மனந்தானும்போனதன்றே-மனமிறந்ததன்றே, சோகமாமனமிறந்தால்-துன்பமாகியமனமிறக்கின், போகமில்லை- போகானுபவமில்லை, தோன்றுமெனில்-மனமிறக்குமாயின், முத்தரொன்று-சீவன்முத்தரொன்று, சொலக்கூடாதே உரைத்தல்கூடாதே, மோகமாமிது தெளிய- மயக்கமானவிச்சங்கை தெளியுமாறு——முழுதுமானோன்-யாவுமானசீடன்——குருவே- ஆசிரியரே நன்றாய்-தெளிவாக——மொழிந்தருளவேண்டுமென்றான்-சொல்லவேண்டுமென்றுகேட்டான்——எ-று. (௬௮)

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) அச்சங்கைக்குத்தரங் கூறுவான்றொடங்கி மனோநாசமிருவிதமாகக்கூறுகின்றார்.

மனநாசஞ்சொரூபமென்றுமரூபமென்றும் வகுத்துரைப்பாரிருவகையால்வருமிவற்றில், வினவாதசீவன்முத்தரிடத்திலொன்றும் விதேகமுத்தரிடத்திலொன்றுமேவுமைந்தா, தனதானசத்துவமாய்மனஞ்சேடித்துத்தாமதம்ராசதநசித்தல்சொரூபநாச, மனகாசத்துவந்தானுமிலிங்கதேகமடங்கும்போதடங்குவதேயரூபநாசம்.

(இ-ள்) மனநாசம்-மனோநாசமானது, சொரூபமென்றும்-உருவநாசமெனவும், அரூபமென்றும்-அருவநாசமெனவும், வகுத்துரைப்பார்-வகுத்துச்சொல்லுவார்கள், இருவகையாய்வருமிவற்றில்- இரண்டுவித

கேட்பாயாகில்—மாகர்த்தன்-மாகர்த்தனும்—மாபோகி- மாபோகியும், மாத்தியாகி-மாத்தியாகியுமாகிய—வகைமூன்றும்-மூன்றுவிதமாக வைக்கேளாய்-அச்சிவன்முத்தர்களிருக்கின்றபெருமைகேளாய்-எ-று.

(இ-ம்.) கர்த்தத்துவமின்றிய கர்த்தத்துவமான சிவன்முத்தருக்குப் போகர்கூடுந்தன்மை யெந்தனமென்ற வினுவிற்குத்தாங்கூறத்தொடங்கினதாம்.

அ-கை மாகர்த்தனிலக்கணங்கூறல். (௨௩)

செய்கையுஞ்செய்விக்கையுமற்றிருக்குங்காந்தச் சிலைமேலுமன்னிரும்புகள்சேடிக்குமாபோற், செய்கையுஞ்செய்விக்கையுமற்றிருக்குமென்முன் சடமானவுலகமெல்லாஞ்சேட்டைசெய்யு, மெய்கலந்கவிந்திரியவிகாரரூப விவகாரவிருத்திக்குவிருத்திதாறு, மெய்கலந்தமாதிக்குஞ்ச ட்சியேநான்வெயில்போலென்றுறைத்தவனே விபுமாகர்த்தன்.

(இ-ள்) செய்கையும்-தொழில்செய்தலும்—செய்விக்கையும்- தொழிற்செய்வித்தலும்—அற்றிருக்கும்-இல்லாதிருக்கிற— காந்தச்சிலைமேலுமன்-காந்தக்கல்லின்சந்நிதானத்தில்—இருப்புகள்-அயங்கள்,சேடிக்குமாபோல்-அசையுமாபோல, செய்கையுஞ்-செய்விக்கையும்,பிரோரிக்கியக்கள், அற்றிருக்கும்-இல்லாதிருக்கின்ற—என்முன்-எனதுசந்நிதியில்,சடமானவுலகமெல்லாம்-சடமாயுள்ளசகங்களனைத்தும்,சேட்டைசெய்யும்-அசைத்துக்கொண்டிருக்கும், மெய்கலந்த-தேகத்திற்சேர்ந்த, இந்திரிய-ஞானேந்திரியகன்மேந்திரிய, விகாரரூப-பேதருபங்களான, விவகாரவிருத்திக்கும்-பிரோகபிரோரியமான விருத்திகளுக்கும், விருத்திதாறும்-அவ்விருத்திகளடங்கித்தன்மயமான,மெய்கலந்தசமாதிக்கும்-உண்மைகலந்திருக்குஞ்ஸ்வரூபசமாதிக்கும், வெயில்போலென்று-சூரியவொளித்தைப்போலச் சர்வசாட்சியேநானென்று, உரைத்தவனே-ஸ்திரமானவனே,விபு-சர்வவியாபகமாகிய,மாகர்த்தன் மாகர்த்தனும்—எ-று.

(இ-ம்) அத்துவிதமான வெனது சந்நிதியிலடக்குந் தேகமுதலிய விவகாரங்களுக்கு மவைசளிறந்தநின்ற ஞானசமாதிக்குஞ் சாட்சியானேயென்றவைகளோடுங் கூடாமற் கூடியிருப்பவனே மாகர்த்தனென்பதாம்.

(அ-கை.) மாபோகி மாத்தியாகிகளினிலக்கணங்கூறல், (௨௪)

அறுசுவையிக்குணங்குற்ற மசுத்தஞ்சுத்த மபத்தியம்பத்தியவெனவுணுப்ந்திடாமற், பெறுமையுடன்கிட்டினைதைக் காட்டுத்திப்போற் போகங்கள்புசிப்பவன்மாபோகியாகுஞ், சிறிதுவலிதகட்டதைன்லியங்களைன்மை தீமையன் சரிஞப்புகச் செயல்போற்சித்தம்



வெறிதிருக்குமவனேமாத்தியாகியாவன்விரதமிப்மூன்றுர்ளவரோவிடுவ்ளோம்.

(இ-ள்.) அறுசுவையின்-ஷட்விதாசங்களின், குணங்குற்றம் - குணகுணங்கள், அசுத்தஞ்சுத்தம்-சுத்தாசுத்தங்கள், அபத்தியம்பத்தியமென-பத்தியபத்தியங்களென—உணுப்ந்திடாமல்-உணவை யாராய்ந்தறாமல், பொறுமையுடன்-சாந்தத்தோடும், கிட்டினதை-நேரிட்டதை, காட்டுத்தீப்போல்-காடாக்கினிபோல,போகங்கள்புசிப்பவன் போகங்களையனுபவிப்பவன், மாபோகியாகும்-மாபோகியாம்,சிறிதுவலிதுகள்-அற்பமகத்துக்கள்—தனதன்னியங்கள்-அன்னியான்னியங்கள்—நன்மைதீமைகள்-நன்றுதீங்குகளாகிய வினைகள்—சேரினும்-அடைந்தாலும், படிகச்செயல்போல் படிகத்தின்றன்மையைப்போல—சித்தம்-சித்தமானது—வெறிதிருக்குமவனே - பற்றின்றியிருப்பவனே, மாத்தியாகியாவான்-மாத்தியாகியாவான்—விரதமிப்மூன்று- இப்மூன்றுவிரதங்களும்—உள்ளவரோ- உடையவர்களே, விடுவ்ளோர்-முத்தியையுடைய சிவன்முத்தர்கள்-எ-று.

(இ-ம்) உணவின்ரசாரசங்களைப் பாராமற் றனதாரசமாக யாவையும்புசிப்பவனே மாபோகியெனவும் தன்னிடத்திற் றனக் கன்னியமானவைகளியாதுபற்றினுந் தான்பற்றின்றிச் சுயமாவிளக்குகின்றவனேமாத்தியாகியெனவுங்கூறினதாம். (௨௫)

(அ-கை) சிவன்முத்தன்விவகரித்துக்கொண்டிருக்க வல்லின் றிக்விருத்தியஞுண தெர்வனமெனவினுதல்,

(வேறு)

மெய்யுங்கொண்டுபிராரத்வந்தருவிதிவழிநின்றிடவு

முய்யுங்கன்மிகளுக்கனுகுணமாவுறுதொழில்செய்திடவுஞ்

செய்யுஞ்செய்கைமுடிந்தவனென்றுணாசெப்புவதெப்படியோ

நையுந்துன்பமகற்றியகுருவேநலமாவருள்வீரோ.

(இ-ள்.) மெய்யுங்கொண்டு-தேகத்தைத்தாங்கிக்கொண்டு,பிராரத்வந்தரு-பிராரத்துவகன்மங்கொடுக்கிற,விதிவழிநின்றிடவும்-நியதிமார்க்கத்தினிற்கவும்,உய்யுங்கன்மிகளுக்கு முமூட்சுக்களுக்கு, அனுகுணமா-அனுகூலமாக,உறுதொழில்செய்திடவும்- பொருந்தியசிரவணாதிகளைச்செய்துகொண்டிருக்கவும், செய்யுஞ்செய்கைமுடித்தவனென்று-கிருதகிருத்தியனென்று, உணாசெப்புவதெப்படியோ - சொல்லுவதெவ்வண்ணம்,நையுந்துன்பம்-வருந்தவந்துன்பத்தை, அகற்றியகுருவே-நீக்கியவாசாரியரே,நலமாவருள்வீர்- நலமாகச்சொல்வீர்—எ-று,

(இ-ம்.) வெளிப்படை. (௨௬)

(அ-கை) அவ்வினுவிற்குத்தரங்கூறல்-

ஆடவர்செய்தொழின்மூவகையாகுமவித்தைவசத்தாறுநா

வீடணைமமதையகந்தையுளார்க்கேயிகபரவிவகாரம்

வீடணுகுவமெனுமிச்சையுளார்க்கேவித்தடைப்பவெலாம்
பாடமைந்தொழிலாற் பலனுண்டோபரிபூரணையானால்.

(இ-ள்.) ஆடவர்செய்தொழில்-புருஷர்செய்கின்ற கிரியையானது, மூவகையாகும்-மூன்றுவிதமாம், அவித்தைவசத்துறுநாள் - அஞ்ஞானவசமாய்ச்செல்கின்றகாலத்தில், ஈடணை-ஈஷணாத்திரயமும், மமதை-மமதையும், அகந்தை-அகந்தையும், உள்ளார்க்கே-உள்ளவர்களுக்குள்ளே, இகபரவிவகாரம்-இகலோகபரலோகவிவகாரங்களுளவாம்—வீடணுகுவமெனுமிச்சையுளார்க்கு - முமுட்சுகளுக்கு, வித்தைபடிப்பவெலாம், சடசித்தைப்-பகுத்தறியுஞ் சாஸ்திரங்களைத்தேடுவதுமப்பியாசித்தலுளவாம், பரிபூரணையானால்-பரிபூரணமானவர்களுக்கு, பாடமைந்தொழிலால் - மிகுந்தசாஸ்திராப்பியாசத்தினால், பலனுண்டோ-பயனுளதோ—எ-று. (இ-ம்.) அஞ்ஞானதிசையிலுலகவிவகாரிகளுமுமுட்சுதிசையிற்சிரவணாதிவிவகாரங்களுமுளவாம், முத்திதிசையிற்பலவியாப்தியின்றிவிர்த்திவியாப்தியாகவிவகாரங்களைச்செய்வினைவையுஞ்செய்துஞ்செய்திலரென்பதாம். (௨௭)

(அ-கை.) சிவன்முத்தர்க்குலகவிவகாரங்களிலவாயினுஞ் சிரவணாதிவிவகாரங்கள் வேண்டாவோவெனவினாதல்.

குரவர்சிகாமணியேநீர்கேளீர்கூறினவழியொக்கும்
பரமுடனிகமுமிகழ்ந்தவரன்றோமுமுட்சுவர்மெய்ஞ்ஞானம்
விரவுமுயற்சியின்மீண்டவரதையினிவேண்டுவரோவேண்டார்
சிரவணமனனாதிகள்வேண்டாவோசித்தமுறைத்திடவே.

(இ-ள்) குரவர்சிகாமணியே-தேசிகசிரோரத்னமே, கேளீர்-கேட்டருள்வீர், நீர்கூறினவழியொக்கும்-நீவிரருளிச்செய்தமுறைசரியே, பரமுடன்-பரலோகவிச்சையோடும், இகமும்-இகலோகவிச்சையையுமிகழ்ந்தவரன்றோ-நீக்கினமுமுட்சுக்களலரோ; மெய்ஞ்ஞானத்தை, பழகுவர்-அப்பியாசிப்பவர்கள், விரவுமுயற்சியின்மீண்டவர்-கலக்கின்றமுயற்சியினின்றுநீங்கினவர்கள், அதை - அவ்விகலோகவிச்சையை, வேண்டுவரோவேண்டார்-விரும்புவர்களோ விரும்பார்கள், (ஆயினும்) சித்தமுறைத்திட-மனநிலைபெறும்பொருட்டு, சிரவணமனனாதிகள்வேண்டாவா-சிரவணமனனமுதலியவைகளும்வேண்டாவோ—எ-று. (௨௮)

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) அவ்வினாவிற்குத்தரங்கூறல்.

இளமகனேகேள்தத்துவமறியார்கேட்டல்செயக்கடனே
தளர்வறுசிந்தித்தலின்முயல்வார்சிலர்சந்தேகங்களுளார்
தெளிதலினிற்பார்விபரீதப்பேய்தீராவாதனையோ
வெளியுருவாயறிவாய்நிறைவாயினர்வேண்டுவதொன்றுண்டோ

(இ-ள்.) இளமகனே-விளங்காநின்றபுத்திரனே, கேள்-கேட்கக்கடவாய், தத்துவமறியார்-உண்மைஞானத்தைத்தெரியாதவர்கள், கேட்டல்செயக்கடன் - சிரவணஞ்செய்யவேண்டியதுகடமையாம்; சிலர்சந்தேகங்களுளார்-கேட்டவஸ்துநிச்சயத்திற்சந்தேகமுள்ளவர்களாகியசிலர், தளர்வறுசிந்தித்தலின்முயல்வார்- தளர்வற்றிருக்கும்படிமனனஞ்செய்தலின் முயற்சிகொள்வார்கள், விபரீதப்பேய்-ஒன்றையொன்றாகவறியும்பேய்த்தன்மையுள்ள, தீராவாதனையோர்- நீங்காதவாதனையையுடையவர்கள், தெளிதலினிற்பார்- நிதித்தியாசனத்தைக்கொண்டுசமாதியிலிருப்பார்கள், வெளியுருவாய்-பரமாகாசமாய், அறிவாய்-அகண்டபோதசஞானமாய், நிறைவாயினர்-பரிபூரணமானவர்கள், வேண்டுவதொன்றுண்டோ-விரும்புவதொன்றுளதோ—எ-று.

(இ-ம்) கேட்டன்முதலிய மூன்றுவிவகாரங்களுமஞ்ஞானமுதலியமூன்றுமுள்ளமட்டும்வேண்டுமேயன்றிமேல்வேண்டப்படுவனவல்லவென்றதாம். (௨௯)

(அ-கை) விவகாரநீங்கிற்சீவன்முத்தர்க்கெங்ஙனமகம்பாவமுண்டாதல் கூடுமெனவினாதல்.

ஐயாகேளீர்தத்துவஞானியுமஞ்ஞானிகள்போலச்
செய்யாநின்றேன்கண்டேனுண்டேன்சென்றேனெனலாமோ
பொய்யாம்விபரீதங்களவர்க்குப்போயினதென்றீரோ
மெய்யாம்பிரமவிசாரமிதன்றேவெளியாயுரையீரோ.

(இ-ள்.) ஐயாகேளீர்-எனதாசிரியரேகேட்டருளுவீர், தத்துவஞானியும்-மெய்யுணர்வுடையசீவன்முத்தனும், அஞ்ஞானிகள்போல-அஞ்ஞானிகளைப்போல, செய்யாநின்றேன்-இதைச்செய்கின்றேன், கண்டேன்-இதைப்பார்த்தேன், உண்டேன்-இதைப்புசித்தேன், சென்றேன்-இங்ஙனஞ்சென்றேன், எனலாமோ- என்றுசொல்லலாமோ, அவர்க்கு-அச்சீவன்முத்தர்களுக்கு—பொய்யாம்விபரீதங்கள்-அசத்தியமானபேதபாவனைகள்—போயினதென்றீரோ-நீக்கினதென்றருளினீரோ—மெய்யாம்-தத்துவமான—பிரமவிசாரம்-பிரமவிசாரமானது—இதன்றே-இஃதன்றே—வெளியாயுரையீர்-நன்றாகத்தெரியும்படிசொல்வீர்—எ-று.

(இ-ம்.) சீவன்முத்தரஞ்ஞானிகளைப்போலவிரிக்கவகினவர்களுக்கு விபரீதமெங்ஙனநீங்கிற்றெனவினவினதாம். (௩௰)

(அ-கை.) அவ்வினாவிற்குத்தரங்கூறல்.

ஓய்ந்தகருவிற்கண்டபழங்கதையோதுவன்வாதனையா
லாய்ந்தறிவுற்றவனப்படிசெப்புவனுபாசனுமாகான் (ன்
யாய்ந்ததனுடல்வேபளவுவிண்ணவன்மனிதனெனப்படுவோ
வீய்ந்தசிதாபாசன்போம்ளவும்விவகாரந்தொடரும்.

(இ-ள்) ஒப்ந்த-இந்திரியங்களொழிந்த—கனவிற்கண்டபழந்தை சொப்பனத்திற்கண்டபழங்கதையை—வாசனையால்-வாசனையினல்-ஒருவன்-சாக்கிரத்திற்சொல்லுவன் (அதுபோல) ஆய்ந்தறிவுற்றவன்வேமுக்கன், அப்படிசெப்புவன்-அந்தன்மையாகச்சொல்லுவான்—ஆபாசனுமாகான்-சிதாபாசனுகான்—மாய்ந்ததனுடல்வேமளவும்-பரித்தேகத்தகனமாகும்பரியந்தம்—விண்ணவன்-தேவனுயினேன்—மணிதனெனப்படுவான்-மனிதனென்றுசொல்லப்படுவான். (அதுபோல விய்ந்தசிதாபாசன் சித்துருவமாகநசித்தசிதாபாசன்—போயளவும்-விதேகமுத்தியையடையுமளவும்—விவகாரந்தொடர்ந்துவரும்-எ-று.

(இ-ம்.) சொர்ப்பனத்திற்கண்டகற்பிதத்தைச்சாக்கிரத்திற்சொல்வதுபோல வஞ்ஞானதிசையிற் சற்பிதமாயுள்ள வுலகவிவகாரத்தைஞானதிசையிற்சொல்வதையன்றி யுண்மையன்றெனினுமவைவிரிதகமுத்திபரியந்தந்தொடருமென்பதாம். (௱௧)

(அ-கை) சகத்விவகாரத்திற் சமாதிசெய்யினச்செயலுமோர்விவகாரமாதலிலவனெங்ஙன நிர்விவகாரியாவனெனல்,

ஆனலியாகுருவேகாண்பசத்தியமென்றுவ
நானுவிவகாரந்தயாலவோஞானசுகந்தருமோ
போனலன்றேநன்றுநிட்டைபுரிந்திடல்வேண்டாவோ
தானுநிட்டைபுரிந்தாற்செய்கைதவிர்ந்தவனெப்படியோ.

(இ-ள்.) ஆனலியாகுருவே-அப்படியானலென்பிதாவாகியவாசிரியரே—காண்பது-நிரியம்—அசத்தியமென்றுலும்-பொய்யாயினும், நானுவிவகாரம்-அதைப்பற்றிய லதொழில்கள்—தயாலவோ-துன்பத்தைத்தருபவைகளல்லவா-ஞானசுகந்தருமோ-சிதானந்ததைக்கொடுக்குமோ—போனலன்றே-அத்தொழினீங்கினலல்லவா—நன்றும்-நன்மையாம்—நிட்டை-ஞானவசனங்குப்பொருட்டுச்சமாதி—புரிந்திடல்வேண்டாவோ-செய்யவேண்டாமோ, தானுநிட்டைபுரிந்தால்-தன்பயமாகுஞ்சமாதிசெய்தால்—எட்படி-எவ்விதம்—செய்கைதவிர்ந்தவன்-தொழில்விட்டவன்-எ-று,

(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை.) அவ்வினவிற்குத்தரம். (௱௨)

தெரிதருமகனேயாரம்பத்தொடுதிரும்விவகார
முரியசமாதியும்விவகாரங்களுமுள்ளத்தொழிலன்றே
அரியபாம்பியும் ... (போ
வரியசமாதிக ...ரு ளானவர்வேறொரு தொழில்செய்தமுன்
...ர்பழகுவனேலவருருடனுமன்றே,

(இ-ள்.) தெரிதருமகனே-உண்மையறிகின்றபுத்திரா—உரியசமாதியும்-தனக்குரியநிட்டையும்—விவகாரங்களும்-சகத்தொழில்களும்—உள்ளத்தொழில்-மனோவிவகாரங்களாதலால், விவகாரம்-அகத்தொழில்கள். ஆரம்பத்தொடுதிரும்-சிரவணாதிகளாற்றீரும், அரியபரம்பொருளானவர்-அரியமானபிரமவஸ்துவானவர்கள், வேறொருதொழில்-மற்றொருகிரியை, செய்வதமுண்டோ-செய்வதுமுளதோ, அரியசமாதிகள்-அருமையானஞானநிட்டைகளை, பழகுவனேல்-அப்பியாசிப்பானுகில், அவன்-அவ்வப்பியாசி, ஆருடனுமன்று, அனுபவியல்லன்-எ-று சகத்விவகாரஞ்சமாதியினுஞ்சமாதிவிவகாரஞ் சாக்ஷாத்காரத்தினுநீங்குமெனக்கொள்க. (இ-ம்.) சித்தவிவகாரயானசமாதியுமப்பியாசிக்கையன்றியாருடனுக்கின்றென்பதாம், (௱௩)

(அ-கை) ஆருடர்களிலுஞ்சிலர்சமாதிமுதலியவற்றைச்செய்வதென்னென வினவுதலுக்குத்தரம்.

உத்தமகுருவேயாருடருமாயொருதொழிலற்றவருள்
சித்தமடங்குதியானுதிகள்சிலர்செய்குவதென்னென்று
விக்கலமருவும்பிராரத்வப்பிறிவெப்படியப்படியே
முத்தரும்வெகுவிதமாகுவரென்பது முன்னேசொன்னேனே.

(இ-ள்.) உத்தமகுருவே-நன்மையான தேசிகரே, ஆருடருமாய்-ஞானுபவமுள்ளவர்களுமாய், ஒருதொழிலற்றவருள்-ஒருகிரியையுமில்லாதவர்களுக்குள், சித்தமடங்கு-மனமடங்குகின்ற, தியானுதிகள்-சமாதிமுதலியவைகளை, சிலர்-சிலர்கள், செய்குவதென்னென்றல்-செய்வதென்னென்று கேட்பாயாகில், இத்தலமருவும்-இப்பூமியிற்பொருந்தும் பிராரத்வப்பிறிவு-பிராரத்வகன்மப்பகுப்பு, எப்படி-எவ்விதமோ, அப்படியே-அவ்விதமேயாம், முத்தரும்-சீவன்முத்தரும், வெகுவிதமாகுவரென்பது-நாநாவிதமாயிருப்பார்களென்பதை, முன்னேசொன்னேன்-முன்னமேசொன்னேன்-எ-று.

(அ-கை)(இ-தி)

நல்லவனேகேளுலகுபகாரஞானிகள்விவகார
மல்லதுவேறொருபெறுபேறும்மில்லைபசனுற்பிணியுமில்லை
வல்லசிருட்டிமுதற்பலதொழிலால்வருபுண்ணியபாவ
மெல்லவருக்குமனுக்கிரகஞ்செயுமீசனடைந்திலனே.

(இ-ள்.) நல்லவனேகேள்-நன்மையானமாணுக்கனேகேட்பாய், ஞானிகள்விவகாரம்-ஞானவான்களின்றொழில், உலகுபகாரமல்லது-லோகோபகாரநிமித்தியமேயன்றி, வேறொருபற்றொரு, பெறுபேறுமில்லை-அடையக்கடவதாயபயனொன்றுமில்லை, அதனுல்-அக்கிரியையினுல், பிணியுமில்லை-துன்பமுமில்லை, (அஃதெதனுலெனின்) வல்லசிருட்டிமுதல்-வல்லமையானசிருட்டியாதி, பலதொழிலால்-நாநாவிதகிருத்தியங்களினல், வருபுண்ணியபாவம்-வாராநின்றதருமாதருமம், எல்லவருக்கும்

த்தைநசிக்கி னதிற்றோன்றியசிவன் சிவமாவனேயன்றி யேனையசிவர் களாகாரொன்பதாம். (ருக)

(அ-கை.) முன்பதினொன்றீசனுக்கொப்பென்றீ ரக்கனமா மினவர்ம இமை யிவனுக்கேனின்றெனவினுதல்.

இவனயன்மால்சிவனுமியவீசரொடெப்படியொப்பாகுஞ்
சிவன்முதன்மூவருமகிலசிருட்டித்திதிநாசங்கள்செய்வா
ரவர்பிறர்மதிகளுமுக்காலங்களுமறிவார்விபுவாவார்
தவமிகுகுருவேயிவனுக்கவைபோற்சற்றுங்காணேனே.

(இ-ள்.) இவன்-இந்தஞானி— அயன்மால்சிவனுமிய - பிரமவிஷ்ணுருத்திராதிய—ஈசரோடு-மும்மூர்த்திகளுடன், எப்படியொப்பாகும்-எவ்விதஞ்சமானமாவன்—சிவன்முதன்மூவரும் - உருத்திரன்முதலியமும்மூர்த்திகளும்— அகிலம்-சகத்தை—சிருட்டி- உண்டாக்குதலும்—திதி-இரட்சித்தலும், நாசங்கள்- அழித்தலும்—செய்வார்-செய்வார்கள்— அவர்- அவ்வீஸ்வரர், பிறர்மதிகளும்-பிறரதினைவயும்—முக்காலங்களும்-திரிகாலங்களையும்— அறிவார்-தெளிவார், விபுவாவார்- வியாபகமாவார்கள்—தவமிகுகுருவே- தவத்தின்மிகுந்தவாசிரியரே, இவனுக்கு-இந்தஞானிக்கு— அவைபோல்- அவற்றைப்போல, சற்றுங்காணேன்-எவ்வளவும்பார்த்திலன்—எ-று.

(இ-ம்.) இதுவிப்படை (சும)

(அ-கை) அஃவிதவிற்குத்தரம்,

தடத்தநீர்நிலாத்திரிபெரியுபயமுந்தழுவுமூர்தனைக்காக்குங்
குடத்தநீர்விளக்கினிலொளியிரண்டுமோர்குடும்பமாத்திரங்காக்கு
மடுத்தமைந்தனேஞானியுமீசனுமறிவினற்பிறிவில்லைக் [ல்
கெடுத்தமாயையின்குணங்களான்மேலென்றுங்கீழென்றும்பிரிவாமா

(இ-ள்) தடத்தநீர்-தடாகத்துசலமும்—நிலாத்திரிபெரி-பகல்வர்த்தியாகிய—உபயமும்-இரண்டும், தழுவுமூர்தனைக்காக்கும்-பொருந்தியவூரையிரட்சிக்கும்—குடநீர்- கடத்துச்சலமும்—விளக்கினிலொளி-தீபப்பிரகாசமுமாகிய—இரண்டும்-உபயமும், ஓர்குடும்பமாத்திரங்காக்கும் - ஒருகுடும்பத்தைமாத்திரமிரட்சிக்கும்— அடுத்தமைந்தனே-சத்துக்களையடைந்தபுத்திரா—ஞானியும் - ஞானவானும்—ஈசனும்-ஈஸ்வரனும், அறிவினற்பிறிவில்லை-ஞானத்தினாலேவேறுபாடில்லை, கெடுத்த-பிரமகத்திசெய்த, மாயையின்குணங்களால் - மாயையின்றன்மைகளால், மேலென்றுங்கீழென்றும்-தாழ்வென்றும் உயர்வென்றும், பிரிவாம்-வேறாகும்—எ-று.



(இ-ம்) ஏரிநீரூரையுங் கடநீரில்லத்தையுங் காக்குமிடத்திற் சிறிதே பெரிதென்னுந் தொழிற்பேதமேயன்றிக் காக்குந்தன்மையொன்றாவதுபோல ஈசனுக்குஞ் ஞானிக்கும் மாயையவித்தைகளாற் றாழ்ச்சியுமிருக்கினுமறிவின்றன்மையிலொப்பாவரொன்பதாம். (சுக)

(அ-கை.) (இ-து.)

நாரின்மன்னனைச்சித்தரைப்போலவேநாரணன்முதலான
சுரர்கண்மாயையவல்லவரணிமாதிகதொக்கமாதவமிக்கோர்
தரணிமானிடர்க்கவைகளில்லாமையாற்றாழ்வுளராலும்
பிரமபாவனையாலிவரவரெனும்பேதமொன்றிலைபாராய்.

(இ-ள்) நாரில்-மானிடரில்—மன்னனை-அரசனைப்போலவும்—சித்தரைப்போல-சித்தர்களைப்போலவும்—நாரணன்முதலான - திருமான்முதலிய—சுரர்கள்-தேவர்கள்—மாயைவல்லவர்-மாயையின்வல்லமையுடையவர்களாதலால்—அணிமாதிகதொக்க - அணிமாமுதலியவட்டசித்திகளிறைந்த—மாதவமிக்கோர்-மகாதவத்தின்மிகுந்தவர்களாவர்—தரணிமானிடர்க்கு-பூமியிலுள்ளமனிதர்களுக்கு—அவைகளில்லா மையால்-அவைகளில்லாமையால்—தாழ்வுளராலும்-தாழ்வையுடையவர்களாலும்—பிரமபாவனையால் - பரமதிருஷ்டியினால்—இவர்-இவர்கள்மானிடரெனவும்—அவர்- அவர்கள்தேவர்களெனவும்—பேதமொன்றிலைபாராய்-வேறுபாடொன்றிலையெனக்காண்பாய்-எ-று.

(இ-ம்) மானிடரிற் சித்தருக்குள்ளமகிமைகண் மற்றவர்களுக்கின்றாயினு மம்மானிடத்தன்மையிலொப்பாவதுபோலச் சித்தருவமான திரிமூர்த்திகளுஞ் சீவன்முத்தர்களுந் தேவத்தன்மை மானிடத்தன்மைகளால் வேற்றுமையுள்ளோராயினுஞ் சித்தத்தன்மையிலொப்பாவரொன்பதாம். (சுஉ)

(அ-கை) அணிமாதிகளீசனதாயி னறிஞனுக் கெங்கனமுண்டாயிற்றெனி லவரைநோக்கி யுபாசனை செய்ததினலாமெனக்கூறல்.

முத்திநல்கியசற்குருவேபலமுனிகளுக்கணிமாதி
சித்திபூமியிற்கண்டிருக்கவுமந்தச்செல்வமீசனதென்றீர்
புத்திபொருத்திடவுரைத்தருளென்றிடிற்புகழுமீசனைவேண்டிப்
பத்திசெய்திடுந்தவத்தினல்யோகத்தாற்பலித்ததென்றறிவாயே

(இ-ள்) முத்திநல்கிய-வீடருளிச்செய்த—சற்குருவே-ஞானதேசிகரே—பலமுனிவர்களுக்கு- அநந்தமிருடிகளுக்கு—அணிமாதிசித்தி-அணிமாமுதலியவஷ்டசித்திகளுண்டாயிருப்பதை—பூமியிற்கண்டிருக்கவும்-இவ்வுலகத்திற்பார்த்திருக்கவும்— அந்தச்செல்வம்-அச்செல்வமானது—ஈசனதென்றீர் - ஈஸ்வரனதென்று சொன்னீர்—புத்திபொருத்திட-அறிவிலொவ்வும்படிக்கு—உரைத்தருள் - சொல்லவேண்

டும்—என்றிடில்-என்றுகேட்பாயாகின்—புகழுமீசனைவேண்டி - து
தியாநிச்சவீஸ்வரனைவிரும்பி—பத்திசெய்திடுந் தவத்தினுல் - பத்தி
ந்துசொல்வாய்—எ-று.

(இ-ம்.) வெளிப்படை.

(சரு)

(அ-கை.) முன்புள்ள ஞானிகளைப்போலவிவர்களுக்கணிமாதிகளே
னில்லையென வினுதல்.

சிவசொரூபமாந்தேசிகமூர்த்தியேசித்திமுத்திகளிரண்டுந்
தவமுளோரடைகுவரெனிலவர்கள்போற்சகலருமடைவரோ
வவர்கள்பூருவஞ்சித்தியுஞானமுமடைந்தகிங்கண்டோரிய
யிவர்கண்ஞானிகளென்றிடிற்சித்திகளிவர்க்கிலாவகையேதோ.

(இ-ள்) சிவசொரூபமாம் - சிவாகாரமாகிய—தேசிகமூர்த்தியே-
குருமூர்த்தியே—சித்திமுத்திகள்-அணிமாதிசித்தியுமோட்சமுமாகிய
—இரண்டும்-உபயத்தையும்—தவமுளோர்- தவத்தையுடையவர்கள்
—அடைகுவரெனில்-அடைவார்களென்றால்—அவர்கள்போல- அத்
தவத்தனைப்போல—சகலருமடைவாரோ - அனைவருமடைவார்களா,
அவர்கள்-அத்தவமுடையவர்கள்—பூருவம்- முன்புள்ள—சித்தியும்-
ஞானமும் - முத்தியும்— அடைந்ததுங்கண்
டோம்-பெற்றதுமாகமப்பிரமாணத்தாற்பார்த்தோம்—இவர்கள் ஞா
னிகளென்றிடில்-இவர்களை ஞானவான்களென்றுசொன்னால்—சித்திக
ள்-அணிமாதிசித்திகள்—இவர்க்கிலாவகையேது-அவர்களுக்கில்லாத
விதமியாதினுல்—எ-று.

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) அவ்வினுவிற்குத்தரம். (சச)

காமியத்தவங்காமியமொன்றையுங்கருதிடாத்தவமென்றும்
பூமியிற்றவமிருவகைசித்தியும்போகமுந்தருமைந்தா
காமியவற்றிலொன்றியற்றினுலொன்றையேயடைகுவரித்தேர்வை
யாமுனாத்தவவ்விரண்டையுமியற்றினுரன்றுளபெரியோரே.

(இ-ள்) காமியத்தவம் -காமியதபசெனவும்—காமியமொன்றை
யுங்கருதிடாத்தவமென்றும்-நிஷ்காமியதபசெனவும்—பூமியிற்-உலக
த்தில்—தவமிருவகை-தவமிரண்டுவிதமாம்—சித்தியும்- காமியதபத்
சித்தியையும்—போகம்-நிஷ்காமியதபமுத்தியையும்—தரும்-கொடு
க்கும், மைந்தா-யாணுக்கா, காமியவற்றில்- ஆகாதின் றவிவ்விரண்டில், ஒ
ன்றியற்றினுர்-ஒன்றையப்பியாசஞ்செய்தவர்கள்—ஒன்றையேயடை
குவர்-அவ்வொன்றினையேயடைகுவார்கள்—இதுதேர்வை - இதுநிச்ச



யமாம், அன்றுளபெரியோர்-அப்போதுள்ளமகான்கள், யாமுனாத்த-
நாம்சொன்ன-அவ்விரண்டையுமியற்றினுர்- அக்காமியத்தவ, நிஷ்கா
மியதவமென்னுமிரண்டினு முயற்சிசெய்தார்கள்—எ-று.

(இ-ம்.) முன்னுள்ள ஞானவான்களிற்சிலரிரண்டுதவத்தையுமனுஷ
ட்டித்தமையாற் சித்திமுத்திகளிரண்டையும்பெற்ருர்களென்பதாம்,

(அ-கை.) இ-து,

அனகமைந்தனேமுத்திஞானத்தையேயடைந்தனரல்லாமற்
சனகன்மாபலிபகிரதன்முதலினேர்சித்திகள்படித்தாரா
வினியசித்தியைவிரும்பினுர்சிலர்சிலரிரண்டையுமுயன்றுர்கண்
முனிவர்சித்திகள்விநோதமாத்திரந்தருமுத்தியைத்தாராவே

(இ-ள்) அனகமைந்தனே-கள்ளங்கமற்றவனே, சனகன்-சனகராசன், மா
பலி-மகாபலிச்சக்கிரவர்த்தி, பகிரதன்-பகிரதராசன், முதலினேர்-ஆதி
யானவர்கள், ஞானத்தை-ஞானத்தையப்பியாசித்து, முத்தி-மோட்சத்
தை, அடைந்தனரல்லாமல்-பெற்ருர்களேயன்றி, சித்திகள்படித்தாரா
அணிமாதிசித்தியையப்பியாசஞ்செய்தார்களா, சிலர்-சில முனிவர்கள்
இனிய சித்தியைவிரும்பினுர்- இனிமையானவணிமாதிசித்தியைமாத்தி
ரம்விரும்பினுர்கள், சிலர்-சிலமுனிவர்கள் இரண்டையுமுயன்ருர்கள்
சித்திமுத்திகளிரண்டையுமப்பியாசித்தார்கள், முனிவர்சித்திகள்-முனி
வரப்பியாசித்தவணிமாதிசித்திகளானவை, விநோதமாத்திரந்தரும்-கா
லம்போக்கும் விளையாட்டைமாத்திரங்கொடுக்கும், முத்தியைத்தாரா -
மோட்சத்தைக்கொடுக்கமாட்டாது—எ-று.

(இ-ம்.) யோகத்தினுலணிமாதிகளைப்பெற்றுமவைகளாற்பயன்படா
மற்பின்னர் ஞானப்பேற்றினுன்முத்தியைப்பெற்ருர்களாதலாலச்சித்
திகளைஞானிகள் விரும்பவில்லையென்பதாம். (சரு)

(அ-கை) சித்திகளிற்பயனின்றென்பதுதெரிந்துஞ்சிலஞானிகளேன
தைவிரும்புகின்ருர்களெனவினுதலுக்குத்தரம்.

யோகஞானமேமுத்தியைத்தருமெனிமொழிந்தசித்திகள்வேண்டி
யோகமாயுடல்வருந்தினுர்சிலசிலமுத்தர்களேனென்ருற்
போகமாய்வரும்பிராரத்வகன்மங்கள்புசித்தன்றேநசித்தேகு
மாகையாலந்தச்சித்திகள்பிராரத்வமாகுமென்றறிவாயே

(இ-ள்)யோகஞானமே-ஐக்கியமாவத்துவிதஞானமே, முத்தியைத்
தருமெனில்-மோட்சத்தைக்கொடுக்குமாயின், ஒழிந்தசித்திகள்-அது
நீங்கியவணிமாதிசித்திகளை, வேண்டி-விரும்பி, மோகமாய்- ஆசையுற்
று, சிலசிலமுத்தர்கள் சிலசிவன்முத்தர்கள், உடல்வருந்தினுர்- தேகம்
வருத்தமுற்ருர்கள், ஏனென்ருல்- அவ்வாறுவருந்தியதியாதினுலென்னி
ல், போகமாய்வரும்-அனுபோகமாய்வருகின்ற, பிராரத்வகன்மங்கள்
பிராரத்வகன்மங்களானவை, புசித்தன்றேநசித்தேகும், புசித்தல்லவா

கெட்டுப்போம், ஆகையால்-ஆகலால், அந்தச்சித்திகள்-அவர்கள்பெற்ற வணிமாதிசித்திகள், பிராரத்வமாகுமென்று-இச்சாபிராரத்வமாகுமென்று, அறிவாய் - அறிந்துகொள்வாய் எ-று.

(இ-ம்.) சித்தியைவிரும்புவ தபிராரத்வகன்மமென்பதாம், (௪௭)

(அ-கை.) ஐயந்தெளிவித்தவாசிரியனா யன்பின்வியந்துதுதித்தல்,

இலக்கமாயிரஞ்சுருதிபாலுஞ்சுத்தலென்மனமசையாமற்
பிலக்கவேண்டுமென் றருட்குருவேயகப் பிராந்திபோய்த் தெளிவானேன், னலக்கமானகண்ணாடியையடிக்கடிதுலக்கினுற்பழுதன்றே
யலக்கண்மாற்றியதேவரீரெனக்குரையமுதக்கடெவிட்டாவே.

(இ-ள்.) இலக்கமாயிரஞ்சுருதிபால்-அளவற்றவேதங்களினலும், ஊகத்தால்-யுத்தியினலும், என்மனம்-என்மனமானது, அசையாமற்பிலக்கவேண்டுமென்று- சலனமின்றிஸ்திரமாயிருக்கவேண்டுமென்று, அருட்குருவே-அனுக்கிரகஞ்செய்யுந்தேசிகரே, அகப்பிராந்திபோய்-மனதின்கணுள்ளமயக்கம்நீங்கி, தெளிவானேன்-தெளிவையடைந்தேன்து லக்கமானகண்ணாடியை-விளக்கமானகண்ணாடியை, அடிக்கடிதுலக்கினால்-இருப்பவிளக்கினால், பழுதன்றே- குற்றமல்லவே, அலக்கண்மாற்றிய-பவத்துன்பநீக்கிய, தேவரீர்-சுவாமிகள், எனக்குரை-அடியேனுக்கருளிய, அமுதங்கள் உபதேசாமுதங்கள், தெவிட்டா-புசிக்கப்புசிக்கத் தெவிட்டாவாம்—எ-று.

(இ-ம்.) வெளிப்படை. (௪௮)

(அ-கை.) பிரயசிரேஷ்டியான சிவேஸ்வரசகத்விவகாரங்களறிஞனும் பிராரத்வமென்றதிற்கிடனதற்குவித்தாகவுசுபத்திசிருஷ்டியினலன்றி கிடக்கின்றசஞ்சிதத்தைக்கெடுக்கும்பொருட்டஃது நசிக்குமென்ற விரண்டுவகையில் யாதுண்மையெனவினுதல்.

கைதவங்களைச்சாத்திரஞ்சொல்லுமோகருணையாலெனையாளு
மையனேகுருவேயெவராகிலுமனுபவித்தாலன்றிச்
செய்தகன்மங்கள்விடாதென்றவசனமுஞ்செனமசஞ்சிதம்வேவதி
யைஞானத்திச்சுடுமென்றவசனமுந்துணிவதெப்படிநானே.

(இ-ம்.) கைதவங்களை-அசத்தியங்களை, சாத்திரஞ்சொல்லுமோ-நூல்களுரைக்குமோ, கருணையால்-கிருபையினால், எனையாளும்-அடியேனையாளாகின்ற, ஐயனேகுருவே-என்னாண்டவனாகியவாசாரியரே, எவராகிலும்-யாவராகிலும், செய்தகன்மங்கள்-செய்தசெநபீசயாகிய சஞ்சிதவினைகளை அனுபவித்தாலன்றி-புசித்தாலல்லது, விடாதென்றவசனமும்-நீங்காதென்றவாயமும், வேவ-அஃதுரீருக்குப்படி, ஐயஞானத்தீ-பரிசுத்தமானஞானக்கினியானது- சுடுமென்றவாக்கியமுமாகியவிரண்டையும், நான்-அடியேன், துணி



வதெப்படி-தெளிவதெவ்விதம், எ-று (இ-ம்) சஞ்சிதகன்மமனுபவித்தாற்றீரும் ஞானத்தாற்றீருமென்றவசனத்தில்யாதுறுதியெனவினவினதாம். (௪௯)

(அ-கை.) அவ்வினவிற் குத்தரம்,

சிவபேதங்களளவில்லைமைந்தனேசெய்கையுமளவில்லை
யாவவாமவாதிகாரங்களறிந்துபக்குவநோக்கிப்
பூவலர்ந்தபின்பலங்கள்காட்டுவனபோற் பூருவஞ்சித்தாந்தங்
காவல்வேதங்களிரண்டையும்வசனிக்குங்காண்டமூவகையாலே

(இ-ள்.) மைந்தனே-மாணாக்கனே, சிவபேதங்கள் சிவர்களுடையவேறுபாடுகள், அளவில்லை-மட்டில்லை, செய்கையுமளவில்லை- அவர்செயலுமட்டில்லை, ஆவவாம்-அவரவர்களுக்காவனவாகுமாதலால், அவரவரதிகாரங்களறிந்து-அவரவர்களினதிகாரந்தெரிந்து, பக்குவநோக்கி-பருவம்பார்த்து, பூ-மலரானது, அலர்ந்து-விகசித்து- பின்-பின்பு, பலங்கள்காட்டுவனபோல்-பயனைக்கொடுப்பதுபோல, காவல்வேதங்கள்-நம்மைக்காக்கின்றசுருதிகள், காண்டமூவகையால்-கர்மகாண்டம்பத்திகாண்டஞானகாண்டமென்னுமூன்றபகுப்பினால், பூருவம்- பூருவபட்சவாக்கியமும், சித்தாந்தம்-சித்தாந்தவாக்கியமுமாகிய, இரண்டையும்வசனிக்கும்-இரண்டுவகையையுஞ்சொல்லும்—எ-று- (இ-ம்.) சீடனதுபக்குவத்திற்கேற்கப்பூருவபட்சஞ்சித்தாந்தமெனவிரண்டாகவேதங்கூறுமென்பதாம். (௫௰)

(அ-கை.) (இ-து.)

ஆனபாவிகளடைவனநரகங்களவசியமானலுந்
தானமந்தரவிரதவோமங்களாற்றவிருமென்பதுபொய்யோ
வீனமாம்பலசன்மசஞ்சிதவினையெத்தனையானலு
ஞானமாக்கனல்சுடுமென்றமறைமொழிநம்பினல்வீடுண்டே.

(இ-ள்.) ஆனபாவிகள்-கொடிதானபாவிகள், அடைவனநரகங்கள்-நரகங்களையடைவது, அவசியமானலும்-உண்மையானலும், தானம் தானங்களினலும், மந்திரம்-மந்திரங்களினலும், விரதம்-நோன்புகளினலும், ஓமங்களால்-யாகங்களினலும், தவிருமென்பது-ஒழியுமென்பது, பொய்யோ-அசத்தியமோ, ஈனமாம்-இழிவாகிய, பலசன்மம்-அனந்தசநநத்தைக்கொடுக்கும், சஞ்சிதவினை-சஞ்சிதகன்மம், எத்தனையானலும்-எவ்வளவுசேர்ந்திருக்கினும், ஞானமாக்கனல்-ஞானக்கினியானது, சுடுமென்ற-எரிக்குமென்ற, மறைமொழி - வேதவாக்கியத்தை, நம்பினல்-நம்புவானானல், வீடுண்டு- முத்தியுண்டாகும்—எ-று.

(இ-ம்.) அனுபவித்துத்தீருமென்ற பூருவபக்ஷத்தைநீக்கியறிவினற்கெடுமென்றசித்தாந்தத்தைக்கொண்டறிவைவிளக்கினதனற்சஞ்சிதங்கெடுமென்பதாம். (௫௧)

(அ-கை) சஞ்சிதத்தைக் கெடுக்கு ஞானமிருக்கக்கன்மத்தைவிரும்புவ தென்னெனவினுதல்.

என்மனந்திருக்கோயிலாத்தினங்குடி யிருந்தருள் குருமூர்த்தி
சென்மசஞ்சிதவினையை வேரறுத்திடுந் தேவரீர்மெய்ஞ்ஞானந்
தன்மயந்தருமகிமையைவிபுதர்சகத்துளோரறியாமற்
கன்மமாங்குழியினில்விழுந்தழிகின்றகாரண முரையீரோ.

(இ-ள்.) என்மனம்-அடியேனிதயாம்பாமே, திருக்கோயிலா-சிறந்தகோயிலாக, தினம்-எப்போதும், குடியிருந்தருள்-குடிகொண்டிரா நின்ற, குருமூர்த்தி-தேசிகமூர்த்தியே - சென்மசஞ்சிதவினையை-பவவிருட்சமானசஞ்சிதகன்மத்தை, வேரறுத்திடும்-மூலத்தோடுகெடுக்கின்ற, தேவரீர்மெய்ஞ்ஞானம்-சுவாமிகள்போதிக்கு முண்மைஞானமானது,தன்மயந்தரும்-தனதுஸ்வரூபத்தைக்கொடுக்கும், மகிமையை-பெருமையை,விபுதர்-வானவரும்,சகத்துளோர்-உலகத்தாரும், அறியாமல்-தெரியாமல், கன்மமாம்-கிரியையாகிய, குழியினில்-படுகுழியில்,விழுந்தழிகின்ற-விழ்ந்துகெடுகின்ற, காரணமுரையீர் - காரணத்தைச்சொல்வீர்—எ-று.

(இ-ம்) வெளிப்படை. (ருஉ)

(அ-கை) (இ-து) அவ்வினாவிற்குத்தரம்.

அழிவிலாதசற்பதந்தனைமைந்தனேயகமுகத்தவர்சேர்வார்
வழிநடப்பவர் பராமுகமாகினுமலர்ந்தகண்ணிருந்தாலுங்
குழியில்விழ்வர்காணப்படிவெளிமுகங்கொண்டுசாமிகளானோர்
பழிதரும்பிறவிக்கடலுழலுவார்பாகதியடையாரே.

(இ-ள்.) அழிவிலாத-கெடாத,தற்பதந்தனை - பிரமபதத்தை,மைந்தனே-புத்திரா, அகமுகத்தவர் சேர்வார்- அந்தர்முகத்தையுடையவர்களடைவார்கள்; வழிநடப்பவர்-மார்க்கத்திற்செல்பவர்கள். பராமுகமாகினேத்திரமிருந்தினும், மலர்ந்தகண்ணிருந்தாலும்-விகசிதமான குழியில்வீழ்வர்காண்-பள்ளத்தில்விழுவார்கள், அப்படி-அவ்வண்ணம், வெளிமுகங்கொண்டு-பகிர்முகத்தினுல், காமிகளானோர்-இச்சையையுடையவர்கள்,பழிதரும்- பழியைக்கொடுக்கின்ற,பிறவிக்கடலுழல்வார் - பவசமுத்திரத்திற்சுழலுவார்கள்,பாகதி-முத்தியை, அடையார்-பெறமாட்டார்கள்—எ-று.

(இ-ம்) அகமுகமின்றிப்பகிர்முகமாகச்செல்லுதலேகன்மங்களிற்செல்லுதற்கேதுவென்பதாம்,

(அ-கை.) சிவச்செயலிவை சிவச்செயலிவையெனத்தெளியுநிமித்தஞ்சீவன்பகிர்முகமாதலீசன்செய்விக்குஞ்செயலையன்றிச்சீவர்களென்செய்வார்களென்ற வினாவிற்குத்தரம்.

சிறந்தநன்மையுந்தீமையுமீசனர்செய்விக்குஞ்செயலன்றே
பிறந்தசீவர்களென்செய்வாரவர்கள்மேற்பிழைசொலும்வகையேதோ
சிறந்ததேசிகமூர்த்தியேயென்றிடிற்சுருதிநூற்பொருண்மார்க்க
மறந்தமூடர்கள்வசனிக்கும்பிராந்திகாண்மைந்தனேயதுகேளாய்.

(இ-ள்) சிறந்தநன்மையும் - சிறப்பானநன்கும், தீமையும்-தீங்கும் ஈசனர்-ஈசனைவர், செய்விக்குஞ்செயலன்றோ - செய்விக்குஞ்செய்கையல்லவா, பிறந்தசீவர்கள்-சனித்தசீவர்கள், என்செய்வார்-என்னசெய்வார்கள், அவர்கள்மேல் - அச்சீவர்கள்மேல், பிழைசொலும்-குற்றஞ்சொல்கின்ற, வகையேதோ-வகையென்ன, சிறந்ததேசிகமூர்த்தியேயென்றிடில்-சகலபற்றுக்களையும்விடுத்த வாசிரியரேயென்று கேட்பாயாகில், சுருதிநூற்பொருண்மார்க்கம்- வேதசாஸ்திரார்த்தவழியை, மறந்தமூடர்கள் - மறந்தவஞ்ஞானிகள், வசனிக்கும்பிராந்திகாண்-சொல்கின்றமயக்கமாம், மைந்தனே-புத்திரனே, அதுகேளாய்-அதைக்கேட்பாய்-எ-று. (ருச)

(அ-கை) (இ-து)

நிகழ்ந்தவீசனர்சிருட்டியுஞ்சீவனர்சிருட்டியும்வெவ்வேறே
சகந்தனிற்பொதுவீசனர்சிருட்டிகள்சராசரப்பொருளெல்லா
மகந்தையாமபிமானங்கள்கோபங்களாசைகளிவையெல்லா
நிகழ்ந்தசீவனர்சிருட்டிகளாகுங்காணிமலனர்செயலன்றே.

(இ-ள்) நிகழ்ந்தவீசனர்சிருட்டியும்-விளங்கிய வீஸ்வரசிருட்டியும், சீவனர்சிருட்டியும்-சீவசிருட்டியும், வெவ்வேறு-வேறுவேறாம் சகந்தனில்-உலகத்தில், பொது-பொதுவாகிய, சராசரப் பொருளெல்லாம்-தாபரசங்கமங்களனைத்தும், ஈசனர்சிருட்டிகள்-ஈஸ்வரசிருட்டிகளாம், அகந்தையாம்-அகந்தையாகிய, அபிமானங்கள் - அபிமானங்களும், கோபங்கள்-துவேஷங்களும், ஆசைகள்- இராகங்களுமாகிய. இவையெல்லாம்-இவைகளனைத்தும், நிகழ்ந்த-விளங்கிய,சீவனர்சிருட்டிகளாகுங்காண்-சீவசிருட்டிகளாம், நிமலனர்செயலன்று - நின்மலனாவீஸ்வரசிருட்டிகளல்ல-எ-று.

(இ-ம்.) ஈஸ்வரசிருட்டி சீவசிருட்டிகளிவையெனப் பகுத்துக்கூறினதாம். (ருரு)

(அ-கை.) (இ-து.)

மூவராம்பரஞ்சிருட்டிகளுயிர்க்கெலாமுத்திசாதனமாகுஞ்
சீவனாதசிருட்டிகடங்களைச்செனிப்பிக்கும்பிணியாகுந்
தாவராதிகணசித்திடவொருவர்க்குஞ்சநந்தனையாவாங்
கோபயாதிகணசித்திடிற்பந்தமாங்கொடும்பிறவிகள்போமோ.

(இ-ள்.) மூவராம்பரஞ்சிருட்டிகள்-மும்மூர்த்திகளானவீஸ்வரசிருட்டிகளானவை, உயிர்க்கெல்லாம்-சீவர்களனைவர்க்கும், முத்தி-வீடடைதற்கு, சாதனமாகும்-சாதனமாம், சீவனாதசிருட்டிகள் சீவசிருட்டிகளானவை, தங்களைச்செனிப்பிக்கும்பிணியாகும்-சீவர்களைப்பிற

ட்பிக்கின் றசஞ்சிதகோசமாம், தாவராதிகணசித்திடில் - ஈஸ்வரசிருட்டியாகிய தருமாமுதலியபஞ்சபூதபௌதிகவடிவங்களைசிக்கின், ஒருவர்க்கும் ஒருவர்க்காவது, சராசரங்களையாவாம்-பவங்கணிக்காவாம்—தாக்கின், பந்தமாம்-பந்தமான, கொடும்பிறவிகள்-கொடியசனநங்கள் போம்-நசிக்கும்-எ-று.

(இ-ம்.) ஈஸ்வரசிருட்டியான பஞ்சபூதபௌதிகமுதலிய தத்துவங்கள் முத்திக்குச் சாதனமுஞ் சிவசிருட்டியான காமக்குரோதாதிகள் பவத்திற் கேதுவுமாமென்பதற் குதிகூறினதாம். (௫௬)

(அ-கை.) (இ-அ)

ஈசர்காரியப்பிரபஞ்சத்தொழிபவுமெவர்பவமொழிந்தார்க
டேசகாலதேகாதிகளிருக்கவுஞ்சிவகாரியமோக
நாசமாகிப்பவ்விவேகத்தினுயிரொடுஞானமுத்தர்களானார்
பாசமோகங்கள்பசுக்களின்செயலன்றிப்பசுபதிசெயலன்றே.

(இ-ள்.) ஈசர்காரியம் - ஈஸ்வரசிருட்டியானபஞ்சபூதபௌதிகங்கள், பிரபஞ்சத்தொழிபவும்-சுற்றத்திற்கெடவும்—எவர்பவமொழிந்தார்கள்-யாவர்பிறவியையொழிந்தவர்கள்—தேசகாலதேகாதிகள் - தேயமுங்காலமுந் தேகமுமுதலிய வீஸ்வரசிருட்டிகள்—இருக்கவும்- இருக்குமபோதே—சிவகாரியமோகம்-சிவசிருட்டியானகாமமுதலியவைகள்—நாசமாகி நசித்து—அவ்விவேகத்தின்- அவ்விவேகத்தினால்—உயிரொடுஞானமுத்தர்களானார்-சீவன்முத்தர்களானார்களாதலால்—பாசமோகங்கள்-காமம்வெகுளிமயக்கங்கள்—பசுக்களின்செயலன்றி- சீவச்செயலேயன்றி, பசுபதிசெயலன்று-ஈஸ்வரன்செயலல்ல-எ-று.

(இ-ம்.) ஈஸ்வரசிருட்டியிருக்கச் சிவசிருட்டி நசிக்கி னப்போதே வீட்டைதலாற் காமமாதிகள் சிவச்செயலே யன்றிச் சிவச்செயலன்றென்பதாம். (௫௭)

(அ-கை.) (இ-த)

அச்சுவத்தமென்ரெருமரமதிலிரண்டரும்பறவைகள்வாழு
நச்சுமங்கொருபறவைபமரக்கனிநன்றுநன்றெனத்தின்னு
மெச்சுமங்கொருபறவைதின்னுதெனவியந்தெய்ப்பொருளாக
வைச்சுமாமறைசிவனையுமீசனையுமவகுத்தவாறறிபாயே

(இ-ள்.) அச்சுவத்தமென்ரெருமரம்-அரசென்றபேருள்ளவொருவிருட்சம்—அதில்-அத்தருவில்—இரண்டரும்பறவைகள்-இரண்டுபட்சிகள்—வாழும்-வாழ்ந்துகொண்டிருக்கும்— அங்கு-அவ்விடத்து—நச்சும்-விரும்புகின்ற—ஒருபறவை-ஒருபட்சியானது—அம்மரக்கனி அத்தருவின்பலத்தை—நன்றுநன்றெனத்தின்னும்- நல்லதுநல்லதென்றுபுசிக்கும்—அங்கு-அதன்கண்—மெச்சும் -மெச்சப்பட்

ட—ஒருபறவை-ஒருபட்சியானது—தின்னுதென- புசியாதென்று—வியந்தெய்ப்பொருளாகவைச்சு - குறிப்புப்பொருளாகவைத்து—சிவனை-சீவனையும், ஈசனை-ஈசனையும்—வகுத்தவாறு-பகுத்தவண்ணம், அறிவாய்-தெரியாய்—எ-று.

அச்சுவத்தமென்பதற்கிழானமாயாவிருட்சமெனக்கொள்க.

(இ-ம்) மாயையில்வாழ்கின்ற சீவேஸ்வரர்களின் ருநகத்துவமிதென்பதைத்துக்கூறினதாம். (௫௮)

(அ-கை.) (இ-த)

இந்தச்சிவனால்வருமறுபகையெலாமிவன்செயலல்லாம
லந்தத்தேவனால்வருமென்றமூடர்கணரகதியடைவார்க
ளிந்தச்சிவனால்வருமறுபகையெலாமிவன்செயலல்லாம
லந்தத்தேவனாலன்றெனும்விவேகியேயமலவீடடைவாரே.

(இ-ள்) இந்தச்சிவனால்-இச்சீவனால்—வரும் - உண்டான—அறுபகையெலாம்-காமமுதலியபகைகளாறும்—இவன்செயலல்லாமல்-இவன்சிருட்டியேயன்றி—அந்தத்தேவனால்-அவ்வீசனால்—வருமென்று-உண்டாமென்ற—மூடர்கள்-அறிவிலர்கள்—அதோகதியடைவார்கள்-நரகத்தையடைவார்கள்—இந்தச்சிவனால் - இச்சீவனால்—வரும்-உண்டாகும்—அறுபகையெலாம்- சட்பகைகள் முதலியவனைத்தும், இவன்செயலல்ல மல்- இச்சிவசிருட்டியேயன்றி—அந்தத்தேவனால்- அவ்வீசனால்—அன்றெனும்- வந்ததன்றென்னும்—விவேகியே விவேகிகளே—அமலவீடடைவார் - நின்மலமானமோட்சத்தையடைவார்கள்-எ-று.

(இ-ம்) காமமாதிகளை யீஸ்வரசிருட்டியெனக்கருதாமற் சிவசிருட்டியெனக்கொண்டவற்றை விசாரத்தாற்கெடுக்கின் முத்தியுண்டாமென்பதாம். (௫௯)

(அ-கை) முன்பீஸ்வரசிருட்டி பொதுவென்றமையாலவரும்பொதுவாகவேண்டுமே யங்ஙனமாயிற்சிலர்களிடத்திற்பட்சபாதம் தருவானேனென்றவினாவிற்குச்சரம்.

நலமெய்ம்மையனேயெல்லவர்க்குந்தெய்வநாயகன்பொதுவானுஞ்
சிலனாவாழ்வித்துஞ்சிலரொடுகோபித்துஞ்செய்வதேனென்றுயேற்
குலவுமைந்தனைத்தந்தைபோற்சிட்டரைக் குளிர்ந்துதுட்டரைக்காய்வன், கலைகளல்வழிவரச்செயுந்தண்டமுங் கருணையென்றறிவாயே,

(இ-ள்.) நலமெய்ம்மையனே உண்மையான நல்லவாசிரியரே—எல்லவர்க்கும் அனைவர்க்கும்—தெய்வநாயகன் -ஈஸ்வரன்—பொதுவானால்-பொதுமையானால்—சிலரைவாழ்வித்தும்-சிலரைவாழ்வுறவும்—சிலரொடுகோபித்தும் - சிலரைத்தன்பமுறவும்—செய்வதேனென்றுயேல்-செய்வதென்னவென்றுகேட்டாயாகின்—குலவுமைந்தரை- குலவாநின்றபுத்திரர்களை—தந்தைபோல்-பிதாவைப்போல, சிட்டரை

க்குளிர்ந்து- சற்சனருக்கின்பஞ்செய்து—துட்டனாக்காய்வன் - துர்ச னருக்குத்துன்பஞ்செய்வன்—கலைகள்-சாஸ்திரங்கள்சொல்லும், நல் வழிவா - சன்மார்க்கத்தைபடைய—செய்யுந்தண்டமும்-சீவர்களைச் செய்யுஞ்சிட்சையும்—கருணையென்றறிவாய் - கிருபையென்றுணர் வாய்—எ-று.

(இ-ம்.) சீவர்கள் சுகப்படும்பொருட்டு வருத்தின வஃதும் கருணை யேயன்றிப் பட்சபாதமன்றென்பதாம். (சுஎ)

(அ-கை,) அங்ஙனமாயி னீசன்யாவரையுமே னிரட்சிக்கவில்லையெ னவருஞ்சங்கைக்குத்தரம்,

மணிவிலங்கறுமைந்தனேகற்பகமரங்கனல்புனன்மூன்றுந்
தனையடைந்தவர்வறுமையுஞ்சீதமுந்தாகமுந்தவிர்த்தாளு
மனையவீசனுமடைந்தவர்க்கருள்செய்வாரகன்றவர்க்கருள்செய்யா
ரினையகுற்றங்களெவர்குற்றமாகுமென்றெண்ணிநீயறிவாயே.

(இ-ள்) மணிவிலங்கறும்-சம்சாரநிகளநீக்கிய—மைந்தனே - புத்திரா—கற்பகமரம்-கற்பகவிருட்சமும்—கனல் -அக்கினியும்—புனல்-சலமும்—மூன்றும்- இவைமூன்றும்—தனையடைந்தவர் - தம்மைச் சேர்ந்தவர்களது—வறுமையும்-தரித்திரத்தையும்,சீதமும்-குளிரையும், தாகமும்-தாகத்தையும்—தவிர்த்தாளும்- நீக்கியிரட்சிக்கும், அனைய-அத்தன்மையனவாகிய,ஈசனும்-ஈஸ்வரனும்,அடைந்தவர்க்கு- தம்மையடைந்தவர்களுக்கு,அருள்செய்வார்-கிருபைசெய்வார்—அகன்றவர்க்கு-அடையாதவர்களுக்கு,அருள்செய்யார்- கிருபைசெய்யார், இனையகுற்றங்கள்-இத்தன்மையானகுற்றங்கள்—எவர்குற்றமாகுமென்று-யாவர்குற்றமாமென்று—எண்ணி-ஆலோசித்து—நீயறிவாய்-நீ தெரிந்துகொள்வாய்—எ-று,

(ம் இ) கற்பகவிருட்சமுதலியவற்றைச்சார்ந்தவர்க்குத் துன்பநீங் கி யின்பமுண்டாவதுபோல விசனைச்சார்ந்தவர்களுக்குப் பவசுத்துன்பநீங்கி வீட்டின்பமுண்டாவ தன்மையெனவறிந் தவனைச்சார முயற்சிசெய்யாத திவன்குற்றமேயெனவறிகவென்பதாம். (சுஅ)

(அ-கை) ஞானமுண்டாகச்சீவன் முயற்சிக்குமரபுகூறல்.

ஒன்றுகேண்மகனேபுமான் முயற்சியாலுரைத்துமானிடர்க்கீச
னன்றுசெய்யவேகாட்டிய நூல்வழிநடந்துநல்லவர்பின்னே
சென்றுதுட்டவாசனைவிட்டுவிவேகியர்ச்செனித்துமாயையையத்தள்ளி
நின்றஞானத்தையடைந்தவர்பவங்கள்போநிச்சயமிதுதானே,

(இ-ள்) மகனே-புத்திரா,ஒன்றுகேள்-ஒருவசனங்கேட்பாய்,புமான் முயற்சியால்-புருஷப்பிரயத்தினத்தினால்,ஈசன் -ஈஸ்வரன்-மானிடர்க்கு-மநிதர்க்கு,நன்றுசெய்ய-நன்மையைச்செய்ய, உரைத்து-சொல்லி



காட்டிய-காண்பித்த, நூல்வழிநடந்து-சுருதிமார்க்கத்திற்போய்,நல்லவர்பின்சென்று-சத்துக்கள்வாக்கியப்படி யவர்பின்சென்று, துட்டவாதனைவிட்டு-அசுத்தவாதனையை நீக்கி, விவேகியாய்-சிற்சடங்களைப் பகுத்தறியும்விவேகத்தையுடையவனாய்,செனித்தமாயையைத்தள்ளி சற்பனையாகவுதித்த சடமானமாயையை நீக்கி, நின்ற-விலட்சணமான கூடஸ்தனாயிருந்த,ஞானத்தை-பிரமசைதன்னியத்தை,அடைந்தவர்-பெற்றவர்களுடைய,பவங்கள்போம்- பிறவிகணீங்கும், இதுதான் இதுவே, நிச்சயம்-சத்தியமாம்—எ-று.

(இ-ம்.)சீவன் றனதுமுயற்சியினு லீஸ்வரானுக்கிரகம்பெற்றுஅவர் வாக்கியமான வேதார்த்தமுடிவைக் குருமுகமாக விசாரித்ததனால்விவேகமுண்டாயஞ்ஞானநீக்கிஞானமுதயமாகிற்பவநீக்குமென்பதாம்

(அ-லக) எதினாலிந்தஞானமுதிக்குமென்ற வினாவிற்குத்தரம்.

இந்தஞானந்தான்வருவதெப்படியெனிலிடைவிடாவிசாரத்தால்
வந்தடைந்திடும்விசாரந்தானேதெனின்மனுதியாஞ்சரீரத்தி
லிந்தநானெவன்சித்தெதுசடமெதுவிரண்டுமொன்றாக்கூடும்
பந்தமேதுவீடேதெனவுசாவுதல்விசாரமென்றறிவாயே

(இ-ள்.) இந்தஞானந்தான்-இப்பிரமஞானமானது, வருவதெப்படியெனில்-உதிப்பதெவ்வண்ணமென்று கேட்பாயாகில்,இடைவிடா விசாரத்தால்-இடையறுதவாத்மவிசாரணையால்,வந்தடைந்திடும்-வரும்,விசாரந்தான்-விசாரணையாவது,ஏதெனில்-யாதெனில்,மனுதியாஞ் சரீரத்தில்-மனுஷசரீரதேகத்திலிருக்கின்ற, இந்தநானெவன் - இந்த நான்யாவன்-சித்தெது-சித்தென்பதியாது,சடமெது-சடமென்பதியாது,இரண்டுமொன்றாய்க்கூடும்-சித்துசடமாகியவிரண்டுமொன்றாகக் கூடப்பெற்ற, பந்தமேது-பந்தம்யாது, வீடேது-அதனைவிடப்பெற்ற முத்தியாதென,உசாவுதல் விசாரித்தல்,விசாரமென்றறிவாய் - விசாரணையென்றறிந்துகொள்வாய்—எ-று.

(இ-ம்) சிற்சடவிலக்கணங்களைப் பகுத்தறியும்விசாரமே ஞானமுதிப்பதற்குமூலமென்பதாம். (சுகூ)

(அ-கை.)கன்மமுக்கியமென்னுங்கொள்கைநீக்கும்பொருட்டுஞானமுதிப்பதற்குச் சற்கருமமிருக்க விசாரமியாதுக்கென்ற வினாவிற்குத்தரம்.

போனசன்மங்கடமிலனுட்டித்தநற்புண்ணியபரிபாக
ஞானமாகுமேவிசாரமெனென்றிடினுமூலாத்பிடக்கேளா
யானபுண்ணியமீசுரார்ப்பணஞ்செயினசுசிபோஞ்சுசியாகு
மானதம்பினைவிசாரித்துஞானத்தைமருவுமென்றறிவாயே

(இ-ள்.) போனசன்மங்கடமில்-முன்சநநங்களில்,அனுட்டித்த-அப்பியாசஞ்செய்த, நற்புண்ணியபரிபாகம்-சற்கருமபரிபாகத்தால்,ஞா

ண மாகுமே-ஞானமுதிக்குமே, விசாரமேனென்றிடில்-விசாரணை யா தக்கென்றுயாவில், நாமுனாத்திடக்கேளாய்-யாஞ்சொல்லுதுங்கேட் பாய், ஆனபுண்ணியம்-அத்தன்மையானசற்கருமத்தை, ஈசுரார்ப்ப ணஞ்செயின்-ஈஸ்வரப்பிரீதிசெய்யில், அசுசிபோம்-அசுத்தநீங்கும், சுசி யாகும்-சித்தசுத்திவரும், மானதம்-மனது, பினை-பின்பு, விசாரித்து-சி ற்சடவிசாரஞ்செய்து, ஞானத்தைமருவுமென்று-சைதன்யபதத்தையடை யுமென்று, அறிவாய்-தெரிவாய்-எ-று,

(இ-ம்) நிஷ்காமமாகச்செய்யுஞ்சற்கருமஞ்சித்தசுத்தியையும்விசார ம் ஞானத்தையுங் கொடுக்குமாதலால்-விசாரமேவேண்டுமென்பதாம்.

(அ-கை) பலபேற்றையுந் தரத்தக்க வலியுள்ளகன்மம்ஞானத்தைத் தாராதோ விசாரம்யாதிக்கெனவினுதல்,

பத்தியும்வயிராக்கியமும்பரலோகமுமணிமாதி
சித்தியுந்தவநிட்டையும்யோகமுந்தியானமுஞ்சாரூப
முத்தியுந்தரும்விசித்திரகருமங்கண்மோகமாத்திரந்தள்ளும்
புத்தியுந்தாலருமையோவிசாரமேன்புண்ணியகுருமூர்த்தி

(இ-ள்) பத்தியும்-ஈஸ்வரபத்தியையும், வயிராக்கியமும்-நிராசையை யும், பரலோகமும்-சுவர்க்காதிலோகங்களையும், அணிமாதிசித்தியும்-அ ணிமாமுதலியவஷ்டசித்திகளையும், தவநிட்டையும்-தவமுள்ளசமாதி யையும், யோகமும்-இயமாதிபஷ்டாங்கயோகங்களையும், தியானமு ம்-மூர்த்தியாதிதியானங்களையும், சாரூ முத்தியும்-சாரூபமுத்தி யையும், தரும்-கொடுக்கின்ற, விசித்திரகருமங்கள்-பலசத்தியுள்ளகன் மங்களானவை, மோகமாத்திரந்தள்ளும்- அஞ்ஞானத்தைக்கொடுக்கி ன்ற, புத்தியுந்தால்-அறிவையுங்கொடுப்பது, அருமையோ-அரியகதா விசாரமேன்-விசாரணையாதுக்கு, புண்ணியகுருமூர்த்தி - தருமஸ்வ ரூபமானவாசிரியரே—எ-று,

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) அவ்வினுவிற்குத்தரங்கூறுவான் றொடங்கித் திட்டாந்தங் கூறல். (௬௫)

வேடமாதியபேர்களையறியவேவேண்டினுன்மகனேகேள்
கூடமாமவர்சுபாவங்கள்சிலங்கள்குறிகளாய்ந்தறியாம
லோடியுங்குதித்துந்தலைகீழ்நின்று முயர்ந்தகம்பத்தேறி
யாடியும்பலகன்மங்கள்செய்யினு மவருண்மைதெரியாதே.

(இ-ள்) வேடமாதியபேர்களை - மாறுவேடங்கொண்டவர்களை, அ றியவேண்டினுல்-அவர்யதார்த்தவடிவத்தையறியவிரும்பினுல், மகனே கேள்-மாணாக்கனேகேட்பாய், கூடமாம்-இரகசியமான, அவர்சுபாவங்க ள்-அவர்களுடையகுணங்களையும், சிலங்கள்- நடைகளையும், குறிகள்-



அடையாளங்களையும், ஆய்ந்தறியாமல்-ஆராய்ந்தறியாமல், ஓடியும்-ஓ டியும், குதித்தும்-குதித்தும், தலைகீழ்நின்றும்-தலைகீழாகநின்றும், உயர் ந்தகம்பத்தேறி-உன்னதமானஸ்தம்பத்திலேறி, ஆடியும்- ஆடியும், ப லகன்மங்கள்செய்யினும்-இவ்வாறானபலகன்மங்கள்செய்தாலும், அவ ருண்மைதெரியாது-அவர்களதுயதார்த்தவடிவந் தெரியமாட்டாது- எ-று. (௬௬)

(அ-கை) தாஷ்டாந்தங்கூறல்,

இன்னவாறந்தப்பிரமத்தையறிவிக்குமிலக்கணத்தால்வேதஞ்
சொன்னஞானமும்விசாரத்தால்வருமன்றிச்சுருதிநூல்படித்தா
லுமன்னதானங்கடவங்கண் மந்திரங்களாசாரங்கள்யாகங்க
ளென்னசெய்யினுந்தன்னைத்தானறிகின்றறிவைகளால்வாராதே.

(இ-ள்) இன்னவாறு-இத்தன்மையைப்போல, பிரமத்தையறிவிக்கு ம்-பிரமஸ்வரூபத்தைத்தெரிவிக்கும், இலக்கணத்தால்- லட்சணத்தால் வேதஞ்சொன்ன-சுருதிசொல்லிய, ஞானமும்-பிரமஞானமும், விசார த்தால்-விசாரணையினுல், வருமன்றி-வருமேயல்லாமல், சுருதிநூல்-வே தசாஸ்திரங்களை, படித்தாலும்-வாசித்தாலும், அன்னதானங்களும்-த வங்கள் - தவங்களும், மந்திரங்கள்-மந்திரங்களும், ஆசாரங்கள் - ஆ சாரங்களும், யாகங்கள் - வேள்விகளுமாகியவிவைகளில், என்னசெ ய்யினும்-எக்கருமங்களைச்செய்தாலும், தன்னைத்தானறிகின்றது-ஆத் மாவாகியதன்னைத்தெரிந்துகொள்வது, இவைகளால்-இக்கன்மங்களால் வாராது-வரமாட்டாது—எ-று,

(இ-உ-க-ம்) ஒருவனுண்மையைத்தெரிவிக்குஞ்சத்தியுணர்வுக்கேய ன்றித்தொழிற்றன்மைபோல ஞானத்தையறிவிக்குஞ்சத்திவிசாரத்தி ற்கேயன்றிக்கன்மத்துக்கின்றென்பதாம், (௬௭)

(அ-கை) ஞானமுதிப்பதற்குநீங்கவேண்டியவஞ்ஞானங் கருமத் தாலன்றிவிசாரத்தாலேநீங்குமெனல்.

துளக்குதர்ப்பணமழுக்கறக்கைக்கொண்டுதுலக்கிறுற்போமன்
றிவிளங்குபுத்தியாலுலகிலார்துலக்கினர்விமலதேசிகமூர்த்தி
களங்கமாகுமஞ்ஞானமும்மப்படிகருமத்தாற்கழுவாம
லுளங்குறித்தஞானத்தினுலேப்படியொழியுமீதருள்வீரோ

(இ-ள்) துளக்குதர்ப்பணம்-விளக்காநின்றசெம்புக்கண்ணுடியினு ள்ள, அழுக்கற-களங்கமற, கைக்கொண்டு-காங்கொண்டு, துலக்கிறுற் போமன்றி-விளக்கினுற்போமேயல்லாமல், விளங்கும்புத்தியால்-விள ங்காநிற்றவறிவினுல், உலகில்-சகத்தின்கண், ஆர்துலக்கினர்-எவர்விளக் கினர்கள், விமலதேசிகமூர்த்தி-நின்மலமானகுருமூர்த்தியே, களங்கமா கும்-களங்கமாகிய, அஞ்ஞானமும்-அஞ்ஞானத்தையும், அப்படி- அவ்

வண்ணம், கருமத்தால்-கன்மத்தினால், கழுவாமல்-சுத்திபண்ணாமல். உளக்குறித்த-மனதிற்குறிக்கப்பட்ட, ஞானத்தினால் - அறிவினால், எப்படியெழியும்-எங்ஙனநீங்கும், ஈதருள்வீர், இதைச்சொல்வீர்—எ-று.

(அ-கை) ஞானமுதிப்பதற்கஞ்ஞானத்தைநீக்குதல் விசாரத்தாலன்றிக் கன்மத்தாற்கூடாவெனல்.

தர்ப்பணத்தினிற்களிம்புவாஸ்தவாலஞ் சகசமாதலின்மைந்தா
கற்பளிங்கினிற்கருநிறஞ்சகசமாக்கறுத்ததன்றாரோபந்
தற்பணத்தினிலழுக்கறவேண்டினாற்சாதனைத்தொழில்வேண்டுங்
கற்பளிங்கிலாரோபமேகறுப்பெனக்கண்டிடமனம்போதும்.

(இ-ள்) தர்ப்பணத்தினில்-செம்புக்கண்ணாடியில், களிம்பு-களிம்பாகிய வாஸ்தவமலம்-உள்ளவழுக்கானது, சகசமாதலின் - சுபாவமாதலால், மைந்தா-மகனே, கற்பளிங்கினில்-படிகக்கல்லிற்றோற்றிய, கருநிறம்-கருமைநிறமானது, சகசமாக்கறுத்ததன்று-சுபாவமாகக்கறுத்ததன்று ஆரோபம்-கற்பிதமாம், தர்ப்பணத்தினில்-செம்புக்கண்ணாடியில், அழுக்கறவேண்டினால்-களங்கமறும்படிவிரும்பினால், சாதனைத்தொழில்வேண்டும்- கருவிகளாற்செய்யுஞ்செயல்வேண்டும், கற்பளிங்கினில்-படிகக்கல்லிற்றோன்றிய, கறுப்பு-கருநிறம், ஆரோபமேயென - கற்பிதமேயென்று, கண்டிட-பார்த்திட, மனம்போதும்-மனமேபோதும்—எ-று.

(அ,கை) அதற்குபாயங்கூறல்.

இக்குமப்படி சச்சிதானந்தத்திலிடர்சடம்பொய்மூன்றுந்
தங்குமாயையின்கற்பிதமன்றியே சகசவாஸ்தவமன்றே
பங்கமாகுமஞ்ஞானத்தைக்கருமங்கள்பகைசெயாதுறவாக்குந்
தங்கஞானமேகருமவஞ்ஞானத்தைச்சுடுகிறநெருப்பாமே.

(இ-ள்-) இங்குப்-இத்தாஷ்டாந்தத்திலும், அப்படி-அத்திஷ்டாந்தத்தைப்போல, சச்சிதானந்தத்தில்-அஸ்திபாதிப்பிரியத்தில், இடர்சடம்பொய்-அனார்தசடதுக்கமாகிய, மூன்றும்-மூன்றும், தங்கும்-தங்காநின்ற, மாயையின்கற்பிதமன்றியே- மாயாகற்பிதமேயல்லாமல், சகசவாஸ்தவமன்று-சுபாவமாயுள்ளதன்று, பங்கமாகுமஞ்ஞானத்தை-பழுதாகுமஞ்ஞானத்தை, கருமங்கள்-கன்மங்களானவை, பகைசெய்து-பகைபண்ணாமல், உறவாக்கும்-நட்பாக்கும், அங்கஞானமே-மேலானஞானமே, கருமவஞ்ஞானத்தை-கன்மரூபமாகியவஞ்ஞானத்தை, சுடுகின்ற நெருப்பாம்-எரிகின்றவக்கினியாம்—எ-று,

(இ-ரு-க-) செம்பிற் களிம்புபோல வாத்மாவுக்கஞ்ஞானஞ்சகசமாயிருக்கிறது பளிங்கிற் பஞ்சவன்னம்போலப்பிராந்தியாதலாலங்ஙனந்தோற்றுங் கன்மசம்பந்தமானவஞ்ஞானத்தைக்கெடுப்பதுவிசாரரூபமான ஞானமேயாமென்பதாம்,

(௬௰)



(அ-கை) முற்கூறியதைவற்புறுத்தல்.

மனைக்குள்வைத்தபண்டங்களைமறந்தவன்வருடநூறழுதாலு
நினைத்துணர்ந்தபின்கிட்டுமெப்படியிந்தநிருமலவான்மாவு
மநர்த்தமானதன்மறதியைக்கெடுக்குந்தன்னறிவினாற்காணும்
கனத்தகன்மங்கணூறுகஞ்செய்யினுங்காணுமோகாணாதே

(இ-ள்.) மனைக்குள் - வீட்டிற்குள், வைத்தபண்டங்களை - வைத்தவஸ்துக்களை, மறந்தவன்-மறந்துவிட்டவன், வருடநூறழுதாலும்-நூறுவருடமாற்றினும், நினைத்து - முன்வைத்தவிடத்தை ஞாபகஞ்செய்து, உணர்ந்தபின்கிட்டும் - அறிந்தபின்கிடைக்கும், அப்படி - அதைப்போல், இந்தநிருமலவான்மாவும் - இந்தநிருமலமானவாத்மனுங், அநர்த்தமான - பிரயோசனமில்லாத, தன்மறதியைக்கெடுக்கும், தன்னறிவினாற்காணும் - தனதறியாமையைப்போக்கும், தன்னறிவினாற்காணுயல் - தனதறிவினாற்றரிசிக்கப்படாமல்- கனத்தகன்மங்கள் - கனமானகன்மங்களை; நூறுகஞ்செய்யினும் - அநேகயுகஞ்செய்தாலும், காணுமோ-காணப்படுமோ, காணாது - காணப்படாது—எ-று,

(இ-ப்) ஞாபகத்தால்மறதிநீங்கின் முன்வைத்தபொருள் வெளிப்படுமல்லது தொழிலால்வெளிப்படாததுபோல விசாரஞானத்தாலஞ்ஞானநீங்கின் முன்னுள்ளபிரமப்பொருள்வெளிப்படுமல்லது கன்மத்தால்வெளிப்படாதென்பதாம், (௭௧)

(அ-கை பிரமசுகத்தைவிசாரஞானங் கொடுக்குமென்றவேதமஞ் சுகத்தைக் கன்மமுங்கொடுக்குமென்பதியாதெனவினுதல்

நன்மையாங்குருவேசுகந்தருவது ஞானமேயெனும்வேதந்
தன்மபாவமிச்சிரங்களாற்றேவர்கடருவிலங்குகண்மாந்தர்
சென்மமாகுவசாதியாசாரமே செய்தவஞ்சுகமன்று
கன்மகாண்டத்தில்விதிப்பதேன்விதித்துளகாரணமுரையீரோ

(இ-ள்) நன்மையாங்குருவே -நன்மையாகியவாசிரியரே, சுகந்தருவது-பிரமானந்தத்தைக்கொடுப்பது, ஞானமேயெனும்- அறிவேயென்கின்ற. வேதம் - சுருதியானது , தன்மம் - புண்ணியகன்மங்களால், தேவர்கள் - தேவர்களும், பாவம் - பாவகன்மங்களால், தருவிலங்குகள் - விருட்சமுதன்மிருகமீறாகிய வைவகைத்தோற்றமும்; மிச்சிரங்களால் - மிஸ்ரகன்மங்களால், மாந்தர் - மனிதர்களுமாகிய, சென்மமாகுவ-சென்மமாவனவென்றும், சாதியாசாரமே-வன்ணாச்சிரமதருமப்படி, செய்தவஞ்சுகமென்றும் - செய்கிறதவமேசுகமெனவும், கன்மகாண்டத்தில்-கிரியாகாண்டத்தில், விதிப்பதேன்- விதித்ததென்ன, விதித்துள - அங்ஙனம்விதியாநின்ற, காரணமுரையீர் - காரணத்தைச்சொல்வீர்—எ-று,

(இ-ம்) வெளிப்படை,

(அ-கை.) அங்ஙனம் விதித்த வேதத்தி னபிப்பிராயம் வேறெனக் கூறல், (௭௨)

இளமுமன் னுகர்பிள்ளைநோய்க்கிரங்கியேதீம்பண்டமெதிர்காட்டிக் கனமருந்தகளொளித்தவைத்தழைக்கின்றகருணையார்தாய்போல மனையறங்கள்செய்மகங்கள்செய்நன்றென்ற மலர்ந்தவாசகஞ்சொல் லு,நினைவுவேறுகாண்சுவர்க்ககாமிகளந்சதிர்ணயந்தெரியாரே.

(இ-ள்) இளமுமன் னுகர் - நாடோறமன்னைப்புசிக்கின்ற, பிள் ளைநோய்க்கு - குழந்தையின்வியாதிக்கு, இரங்கி - இரக்கமுற்று, கனமருந்தகளொளித்துவைத்து - கனமானவௌழதங்களை மறைத் துவைத்து, தீம்பண்டமெதிர்காட்டி - தித்திப்புள்ளவஸ்துக்களையெ திரோகாண்பித்து, அழைக்கின்ற - அக்குழந்தையைக் கூப்பிடுகின்ற கருணையார்தாய்போல - கிருபையுள்ள மாதாவைப்போல, மனைய றங்கள்செய் - இல்லறதருமங்களைச்செய், மகங்கள்செய்- யாகங்களை ச்செய், நன்றென்று - அஃது நன்மையென்று, மலர்ந்தவாசகம்-விக சிதமானவேதவாக்கியம், சொல்லு நினைவுவேறுகாண்-சொல்லுகின்றக ருத்தவேறாகும், சுவர்க்ககாமிகள்-சுவர்க்க விருப்பமுள்ளவர்கள், அந் ததிர்ணயந்தெரியார் - அக்கருத்தினின்ணயத்தையறியார்கள்—எ-று,

(ப-ம்,) மன்னுகர் பிள்ளையென்பதனுல் - விடயத்தைநுகருமறி விலியென்பதும் - நோயென்பதாற் பிறவிந்துன்பமென்பதும் இ ரக்கியென்பதனு வருளுற்றென்பதும் தீம்பண்டங்காட்டி யென்பத னுல் சுவர்க்காதிபதங்களைக் காட்டுமென்பதும் மருந்தை யொளித்து வைத்தென்றதனுல்- ஞானமுகத்தை யொளித்துவைத்தெனவும் அ ழைக்கின்றதாயென்றதனுல்- அவ்வமுதத்தைக் கொடுக்க வேதம் வி ளக்குமென்பதுங் கொளக்கிடந்தன.

(இ-ம்.) வேதம் இகவின்பத்தை நீக்குவான் பரவின்பத்தைக் கூறி யஃது நீங்கினபின் னிஃதையுநீக்கிப் பரமசுகமாகும்பொருட் டங்ங னங்கூறினதென்பதாம்.

(அ-கை) வேதம் போகபோக்கியங்களை யனுபவிக்க விதிபாதென் பதற்குவமைகூறல். (௭௩)

போகமாருயிர்கண்டதையுண்பதும்புணர்வதுமியல்பேகா ணுகமங்களுஞ்சுபாவத்தைவிதிக்குமோவத்தனைதெரியாதோ காகமேகறுத்திடுநெருப்பேசுடுகசந்திடுவேம்பேநீ வேகவாயுவேயசையெனவொருவரும்விதித்திடல்வேண்டாவே.

(இ-ள்.) போகமாருயிர்-போகத்தைப்புசிக்கின்றசீவர்களுக்கு— கண்டதை-பார்த்ததை, உண்பதும்-அருந்தலும்—புணர்வதும்- பொ



ருந்தலும்—இயல்பேகாண்-சுபாவமேயாம்—ஆகமங்களும்- வேதங்க ளும், சுபாவத்தைவிதிக்குமோ-சுபாவத்தைநியமிக்குமோ—அத்தனை தெரியாதோ- அவ்வளவுதெரியாதா, காகமேகறுத்திடு-காக்கையேநீக றுத்திடுவாய், நெருப்பேசுடு-அக்கினியேநீசுடுவாய், வேம்பே- நிம்ப மே, நீகசந்திடு-நீகைப்பாய்; வேகவாயுவே- அதிவேகமுள்ளகாற்றே அசையெனா-நீசலிப்பாயென்று, ஒருவரும்-ஒருவரும், விதித்திடல்வே ண்டாமே-நியமிக்கவேண்டுவதில்லையே—எ-று.

விலக்குமெனப் பாடமன்று விதிக்குமென்பதே பாடமெனக் கொள்க.

(ப-ம்) அறிவின்மையா னுயிர்கட்கியல்பான அருந்தல் பொருந்த லென்னும் வாசனையை வேதம் விலக்குமேயன்றி விதிக்குமோ வென் பார் (போகமாருயிர்கண்டதையுண்பதும் புணர்வதுமியல்பேகா-ணு கமங்களுஞ்சுபாவத்தைவிதிக்குமோவெனக்கூறினர்.

(இ-ம்) வேதம் போகபாக்கியமேபயனுன கன்மத்தை விலக்கின தேயன்றி விதித்ததன்றென்பதாம். (௭௪)

(அ-கை.)

கன்மகாண்டவாக்கியம் பூருவபட்சமெனப்பதற்குத்திகூறல்.

கள்ளுமூனுநீவிரும்பினுன்மகங்கள்செய்காமத்தின்மனதானுற் கொள்ளும்பெண்டொடுகலவிசெய்யெனிலிவன் குறையெலாந் தொ டானென்றே, தன்னும்வேதத்தின்சம்மதஞ்சகலமுந் தவிர்வதேகருத் தாகும், வின்னுமிவ்விதியென்னெனிற்பூருவநியமாம்விதியன்றே.

(இ-ள்) கள்ளுமூனும்-மதுவையுமாமிசத்தையும், நீவிரும்பினுல்- நீ யுண்ணவிச்சித்தால், மகங்கள்செய்- யாகங்களைச்செய்துபுசிப்பாய்— காமத்தின்மனதானுல் - காமவேட்கையுண்டானுல்—கொள்ளும்பெ ண்டொடு விவாகஞ்செய்யுமனைவியோடும்—கலவிசெய்யெனில் - பு ணர்ச்சிசெய்வாயென்றுல், இவன் இக்காமி, குறையெலாந்தொடா னென்று-மற்றவைகளைத்தொடானென்று—தள்ளும்-நீக்கும், வேதத்தின்சம்மதம்-வேதத்தினுடையசம்மதமானது, சகலமுந்தவி ர்வதே-அனைத்துநீக்குவதே, கருத்தாகும்-அபிப்பிராயமாகும், வின் னுமிவ்விதி-சொல்லாநின்றவிக்கன்மகாண்டவிதி—என்னெனில்- என் னெனின்—பூருவநியமாம்விதி - பூருவபட்சமாக நியமித்தவிதி யாம்—எ-று. (௭௫)

(அ-கை) இவ்விதி பூர்வபட்சமென்பதை வற்புறுத்தல்,

மதுவிறைச்சிகளுண்ணென்றசுருதிபின்மணந்துபாரெனல்பாராய் மிதுனவிச்சையும்புத்திரோற்பத்தியால்விரும்பென்றவிதிபாரா யிதையும்விட்டொழிபதிநயிட்டிகவன்னிக்கெழ்ச்சியற்றதும்பாரா யதையறிந்துகன்மக்கவாசைகளொழிந்தாலநந்தமடைவாயே.

(இ-ள்,) மதுவிகூறச்சிகள்-மதும மிசங்களை, உண்ணென்றசுருதி-புசியெச்சவேதமானது, பின்-பின்பு, மணந்தபானெனல்பாராய்- ஆ மனைவியோடுபுணர்ச்சியின்பமும்—புத்திரோற்பத்தியால்- மகப்பே றுண்டாம்பொருட்டு, விருட்பென்றவிதியாராய்- இச்சிட்பசயென்றவி திலையப்பார், இதையும்விட்டொழி-இவ்விதியையும்விட்டொழிந்த, யதி சந்நியாசிக்கும், நயிட்டிகவன்னிக்கு-நைஷ்டிகட்பிரமசாரிக்கும், இக ழ்ச்சியற்றதம்பாராய்-நிந்தையில்லாததம்பார், அதையறிந்து-உக்கரு த்தையுணர்ந்து, கன்மங்கள்-கன்மங்களின்மேல்வைத்த, ஆசைகளொ ழிந்து-இச்சைகள்நீங்கி, ஆனந்தமடைவாய்-ஞானத்தினுற் பிரமானந் தத்தையடைவாய்—எ-று.

(ப-ம்) இல்லறதன்மஞ் செய்யாமையாற்றுறவிக்கும்பிரமசரிதனு க்கு மிழிவின்மையைப்பாரென்பார், - யதிநயிட்டிகவன்னிக் கிகழ்ச்சி யற்றதும் பாராயெனக்கூறினர் (இ உ ச-ம்) வேதங் கன்மகாண்டத்தி ற்கூறுப்வன்றைச்சிரமதன்மங்கள் அநேகவுண்டாகும் போகவின்பங் களனைத்தும்பின் றுன்பங்களாகவருத்தலக்கண் டவற்றை விடுத்து ப்பரமசுகத்தைத்தேடவேண்டுமென்ப சதனபிப்பிராயமாதலா லிவற் றையொழித் தச்சுகத்தைத்தேடல்வேண்டுமெனபதாம்,

(அகை) முற்கூறியவண்ண ஞான மஞ்ஞானத்துக்குச் சத்துரு வாயினுஃதிஃதொடுஞ்சேர்ந் தொருதொழிலைச் செய்யலாமோ வென வினுதல், (எச)

உலகமானவஞ்ஞானமுங்கருமமுமுறவென்றவழிகூடும்
பலவுமானவஞ்ஞானமுமானமும்பகையென்பதுனதாறு
னிலவிலேமறுப்போலவஞ்ஞானமுநிமலஞானத்தோடே
துலவிநின்றிந்தச்சிருட்டிகள்செய்யவுங்கூடுமோகுருமூர்த்தி

(இ-ள்) உலகமானவஞ்ஞானமும்-சகத்துருவயான வறியாமையும், கருமமும்-கன்மமும், உறவென்றவழிகூடும்-நட்பென்றமார்க்கமொ க்கும், பலவுமானவஞ்ஞானமும் - நாநாவிதமானவஞ்ஞானமும், ஞா னமும்-ஏகமானஞானமும், பகையென்பது-சத்துருவென்பது, உள தாலுல்-உள்ளதாலுல், நிலவிலேமறுப்போல- சந்திரனிடத்திற்களங்க மிருப்பதுபோல, அஞ்ஞானமும் - அஞ்ஞானமானது, நிமலஞானத் தோடு-களங்கமற்றஞானத்தோடு, குலவிநின்று-சேர்ந்திருந்து, குரு மூர்த்தி-தேசிகரே, இந்தச்சிருட்டிகள்செய்யவுங்கூடுமோ-இந்தச் சிரு ட்டியாதிகளைச்செய்யவுங்கூடுமோ—எ-று.

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை.) அவ்வினுவிற் குத்தரக்கூறல். (எஎ)

சொருபஞானமும் விருத்திஞானமுமென்று சோதிஞானமுமிர ண்டாஞ், சொருபஞானமேவிருத்தியின்ஞானயாய்த் தோன்றும்வே



றில்லைமற்றா, சொருபஞானமஞ்ஞானசத்துருவென்றுசுழுத்தியிற்க ண்டாயே, சொருபஞானத்தின்மருவுமஞ்ஞானத்தைச்சுடும்விருத்தி யின்ஞானம்.

(இ-ள்) சோதிஞானமும்-சுயம்பிரகாசமானசைதன்னியமே—சொ ரூபஞானமும்- சொரூபஞானமெனவும், விருத்திஞானமென்று -வி ருத்திஞானமெனவும், இரண்டாம்-இருவகையாம், சொரூபஞானமே தோ சொரூபஞானமே, விருத்தியின்ஞானமாய்-விருத்திஞானமாய், தோ ன்றும் - தோன்றுமேயன்றி, மற்றா-மாறுக்கா, வேறில்லை-மற்றொ ன் றில்லையாம், சொரூபஞானம்-ஸ்வரூபஞானமானது, அஞ்ஞானச த்துருவென்று-அஞ்ஞானத்துக்குப்பகையென்று, சுழுத்தியிற்கண்டா ய் - சுழுத்தியவத்தையிற் பார்த்தாய், சொரூபஞானத்தின்மருவும்-ஸ் வரூபஞானத்திற் கூடியிருந்த, அஞ்ஞானத்தை - அறியாமையை, வி ருத்தியின்ஞானம் - சமாதியிலுதித்தவிருத்திஞானமானது, சுடும்-எ ரிக்கும் - எ-று,

(ப-ம்) சுத்தசைதன்னியமென்பார் -சோதிஞானமெனவும்-பாஞா னமென்பார் - சொரூபஞானமெனவும்-விசாரஞானமென்பார்விருத் திஞானமெனவும் -சுழுத்தியிலறிவின்மையின்வசமாகாமற்றுனறிவா கவிருந்ததை யெதிரிட்டுக்காணின்றதென்பார் சொரூபஞானமஞ் ஞானசத்துருவென்று சுழுத்தியிற்கண்டாயே யெனவும் சமாதியிலு தயமான விவ்வறிவினலஞ்ஞான நசிக்குமென்பார் சொரூபஞானத் தின்மருவுமஞ்ஞானத்தைச்சுடும்விருத்தியின்ஞானமெனவுங்கூறினர்.

(இ-ம்) ஆத்மசங்கற்பமானவறிவிற்குண்டானவறியாமையவ்வறிவி லுதயமானவனுபூதியினற்கெடுமென்பதாம். (எஅ)

(அ-கை.) காரணத்தாற்கெடாதவஞ்ஞானங்காரியத்தா லெங்ஙனங் கெடுமென்றவினுவிற்குத்தரம்.

சுருத்திமாயையைச்சுழுத்தியிற்சுடாதசொரூபஞானந்தானே
விருத்திஞானமாய்ச்சுட்டதெப்படியெனில் வெய்யிலாலுலகெங்கும்
பரித்தசூரியன்சூரியகாந்தத்திற்பற்றியக்கினியாகி
யெரித்தவாறுபோற் சமாதியில்விருத்தியா லெரிக்குமென்றறிவாயே

(இ-ள்) சுருத்திமாயையை- சடமாகியவஞ்ஞானத்தை சுழுத்தியி ல்- சுழுத்தியவத்தையில், சுடாதது-கெடுக்காததான - சொரூபஞானந் தானே-சொரூபஞானமே, விருத்திஞானமாய்-விருத்திஞானரூபமா ய் - சுட்டதெப்படியெனில்-எரித்ததெங்ஙனமெனின், சூரியன் - சூரி யனெனவன், உலகெங்கும்- சகத்திலெவ்விடத்தும், பரித்த-வியாபித் த, வெய்யிலால்-உஷ்ணகிரணத்தினுலெரிக்காமல், சூரியகாந்தத்திற்ப ற்றி-சூரியகாந்தக்கல்லிற்பற்றி, அக்கினியாகி-வன்னிஸ்வரூபமாய், எ ரித்தவாறுபோல் சகலவஸ்துக்களையுந்தகித்ததன்மையைப்போல, ச

மாதியின்-திட்டையின் கணுதிக்கும், விருத்தியால்-பூரணவிருத்திஞானத்தினுல், எரிக்குமென்றறிவாய்-திரிசியரூபயானவஞ்ஞானத்தைக்கெடுக்குமென்றுணர்வாய்-எ-று.

(இ-ம்) காரணமானகிரணத்தாற்கெடாதபொருள் காரியமானவக்கினியாற்கெடுவதுபோலசொரூபஞானத்தாற்கெடாதவஞ்ஞானமதிசயமான பூரணவிருத்திஞானத்தாற்கெடுமென்பதாம், (எக)

(அ-கை) விருத்திஞானமந்தக்கரணகாரியமாதலினதைக்கருமமெனப்படாதோவென வினுதல்.

அருளுடையனேதிரிவிதகாரணத்தாலாகியதொழிலெல்லாங்
கருமமல்லவோவிருத்திஞானமுமந்தக்கரணகாரியமன்றோ
வுரியகன்மமஞ்ஞானத்தைக்கெடுக்குமென்றோதினுலாகாதோ
பெரியஞானமென்றதற்கொருபேர்பட்டபெருமையையுரையீரோ.

(இ-ள்) அருளுடையனே - அனுக்கிரகஞ்செய்யாநின்றவெனதாசிரியரோ, திரிவிதகாரணத்தால்-மனம்வாக்குக்காயமென்கிறமுக்கரணக்களால், ஆகியதொழிலெல்லாம்- உண்டானகிரியைகளனைத்தும், கருமமல்லவோ-கன்மமல்லவா, விருத்திஞானமும்-பூரணவிருத்திஞானமும், அந்தக்கரணகாரியமன்றோ-அந்தக்கரணத்தின்காரியமன்றோ, உரியகன்மம்-அறியாமைக்குரியகன்மமானது, அஞ்ஞானத்தைக்கெடுக்குமென்று-அஞ்ஞானத்தை நசிப்பிக்குமென்று, ஓதினுலாகாதோ - உரைக்கினுலாகாதா, பெரியஞானமென்று-கனமானஞானமென்று, அதற்கு-அக்கன்மத்திற்கு, ஒருபேரிட்ட- ஓர்நாமந்தரித்த, பெருமையையுரையீர்-மகிமையைச்சொல்வீர்—எ-று,

(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை) அவ்வினுவிற்குத்தரம். (அஉ)

விருத்திஞானமந்தக்கரணத்தொடுவிருத்தியாயினுமைந்தா
வொருத்திமக்களே தங்களிற்பகைக்கின்றகொலைசெய்குங் கண்டோமே
கருத்தனுவியபுருடதந்திரங்களாங்கருமங்களவைபோல
வருத்தஞானமோபுருடதந்திரமன்றுவஸ்துதந்திரமாமே

(இ-ள்) விருத்திஞானம்-விருத்திஞானமானது, அந்தக்கரணத்தோடு - மனத்தினுடைய, விருத்தியாயினும் - விருத்தியானாலும், மைந்தா மாணக்கா, ஒருத்திமக்களேதங்களில் - ஒருமாதாவின்புத்திரர்கள் தங்களுக்குள்ளே, பகைக்கின்றது-கொலைசெய்கின்றது, உலகெங்குங்கண்டோம்-சகமெங்கும்பார்த்தோம்—கருமங்கள்-கன்மங்களானவை—கருத்தனுவிய - அகம்பாவமுள்ள—புருடதந்திரங்களாம் புருடதந்திரங்களேயாம், அவைபோல - அவற்றைப்போல், வருத்தஞானம்-அகமகிழ்ச்சியுள்ளஞானமானது, புருடதந்திரமன்று-புருடதந்திரமன்றும், வஸ்துதந்திரமாம் - வஸ்துவினதுதந்திரமாம்-எ-று.



(இ-ம்) விருத்திஞானமுங்கன்மமுமந்தக்கரணகாரியமாயினும்புருடதந்திரத்தான் மனதிலுதிக்குங்கன்மத்தை வஸ்துதந்திரத்தினுன்மனதிலுதிக்கும் பூரணவிருத்திஞானங்கெடுக்குமாதலினவ்விருத்திஞானங் கன்மமாகா வென்பதாம். (அக)

(அ-கை) போனகன்மங்களென்ற செய்யுண்முதலிதுகாறுங்கன்மமானது ஞானமுதிப்பதற் கேதுவன்றெனவதைவிசாரஞானத்தாணீக்கி மேலவ்விசாரஞானத்தையுநீக்குவான் றொடக்கியஃதையோகஞானமும் விவேகஞானமுமென விருதிறனுகக் கூறுகின்றார்.

வருத்தகன்மங்கள்செய்யவுந்தவிரவுமற்றொன்றாக்கவுங்கூடு
மிகுத்தஞானமப்படியன்றுதியானமும்விவேகஞானமும்வேறே
செகத்திலொன்றையொன்றுவிவன்பாவிக்குந் தியானங்கற்பிதயோக
முகஸ்தமாய்க்கண்டஞானமேவாஸ்தவமோகமாய்மயங்காதே

(இ-ள்) வகுந்தகன்மங்கள்-புருடர்களால்வகுக்கப்பட்ட கன்மங்களானவை, செய்யவும் - செய்தற்கும் - தவிரவும்-ஒழிதற்கும், மற்றொன்றுக்கவும்-மற்றொருவிதமாகச்செய்தற்கும், கூடும் - ஆம்-மிகுத்தஞானம் - பூரணஞானமானது, அப்படியன்று - அத்தன்மையுடையதன்று தியானமும்- தியானமும்,—விவேகஞானமும்-விவேகஞானமும்,—வேறு -வேறாகும்—செகத்தில் - உலகத்தின்கண், —ஒன்றையொன்று-ஒருவஸ்துவைமற்றொருவஸ்துவாக-—இவன்பாவிக்கும்- இப்புருடன்பாவிக்கின்ற—கற்பிதயோகம்-கற்பனையோகமானது, தியானம்-தியானமாம், முகஸ்தமாய்க்கண்டஞானமே-பிரத்தியட்சமாகத்தரிசித்தஞானமே, வாஸ்தவம்-உண்மையானவிவேகஞானமாம், மோகமாய்மயங்காது-மோகமாகாது-எ-று.

(இ-ம்) யோகஞானங் கற்பிதமான பரோட்சமும் விவேகஞானமுண்மையான வபரோட்சமுமாமென்பதாம். (அஉ)

(அ-கை.) (இ-து)

கண்டறிந்தஞானங்கேட்டதனைக்கருதுபாவனையோகம்
கண்டபேர்சொலக்கேட்டதுமறந்துபோங்கண்டதுமறவாதே
கண்டவஸ்துமெய்தியானவஸ்துக்கள்பொய்கருவியஞ்ஞானத்தை
கண்டவக்கணங்கொல்வதுஞானமேகருமமன்றறிவாயே

(இ-ள்) கண்டறிந்தஞானம்-அனுபவமாகப்பார்த்துணர்ந்ததுஞானமாம், கேட்டதனை-கேட்டதை- கருதுபாவனை-தியானிக்கின்றபாவனையானது, யோகம்-யோகமாம், கண்டபேர்சொல- பார்த்தவர்கள் சொல்ல, கேட்டது-கேட்டபொருள், மறந்துபோம்-மறதியாம், கண்டதுமறவாது-பார்த்ததுமறக்காது, கண்டவஸ்து-பார்த்தபொருளானது, மெய் உண்மையாம், தியானவஸ்துக்கள்-பாவிக்கின்றபொருள்களானவை, பொய் மித்தையாம், கருவி கோபித்து, அஞ்ஞானத்தை-அறியா

மையை, கண்டவக்கணம்-பார்த்தவந்தக்ஷணத்தில், கொல்வதுஞானம்
கெடுப்பதுஞானமேயன்றி, கருமமன்று-கன்மமன்று, அறிவாய்-இத
னையுணர்வாய்-எ-று.

(இ-ம்) தியானயோகங் கேட்டவண்ணம் பாவித்தலும் விவேகஞா
னம்பாவித்தவண்ணங்காண்டலுமாதலா லிஃதேயுண்மையென்பதாம்.

(அ-கை) தியானயோகங் கற்பிதமெனி னஃதிலுதிக்கு முத்தியுங்
கற்பிதமன்றோவென்னும் வினாவிற்குத்தரம்.

சருவமுத்தியைத்தருகின்றதியானமுஞ்சத்தியமன்றென்றால்
சருவமுத்தியுஞ்சத்தியமன்றென்றுசங்கியாதேநீகே
ளுருவங்கேட்டவன்றியானிக்கும் பொழுதிலவ்வுருவம்வாஸ்தவமன்
றே; யுருவமாகும்பொழுதுகண்ணாற்கண்ட வுருவம்வாஸ்தவமாமே

(இ-ள்) சருவமுத்தியை -சருவம்பிரமமயமென்னும் வீட்டை, தரு
கின்றதியானமும்-கொடுக்கின்றதியானத்தையும், சத்தியமன்றென்
றால்-உண்மையன்றென்றுசொன்னால், சருவமுத்தியும் -அதீதியானத்
தினால்வரும்பூரணானுபவமும் -சத்தியமன்றென்று, உண்மையன்றெ
ன்று, சங்கியாதே - சங்கைசெய்யாதே, நீகேள் - நீகேட்பாய்—உரு
வம்-பிரமஸ்வரூபத்தை—கேட்டவன்- கேள்வியுற்றவன்—தியானிக்
கும்பொழுதில்-சிந்திக்கும்பொழுதில்—அவ்வுருவம்-அத்தியானரூப
மாகியஸ்வரூபம், வாஸ்தவமன்று-உண்மையன்று—உருவமாகும்ப
பொழுது - தானந்தஸ்வரூபமாகும்போது, கண்ணாற்கண்டவுருவம்
ஞானதிருஷ்டியினாற்பார்த்தஸ்வரூபமானது, வாஸ்தவமாம்-உண்மை
யாம்-எ-று.

(இ-ம்) பாவனைகற்பிதமும் அதினின்றதைக் காணக்கொழாநின்ற
பாவிப்பவனுண்மையுமாதலா லப்பாவனை மித்தையே யதனா லுதய
மாகுமுத்தி சத்தியமேயாமென்பதாம்.

(அ-கை.) பொய்க்கு மெய்யையுதிப்பிக்குஞ்சத்தி யேதென்றவி
னாவிற்குத்தரம். (அச)

சடமதாகியதியானமெய்யாகியசர்வமுத்தியைநல்குந்
திடமகானதெப்படியெனிலவாவர்தியானமேபிறப்பாகு
முடல்மாசையாற்றியானிக்கிற்தியானித்தவுடல்களாகுவர்மைந்தா
தொடர்பவங்கெடச்சொருபமேதியானிக்கிற்சொருபமாகுவர்மெய்

(இ-ள்) சடமதாகியதியானம்-வித்தையாகியதியானமானது, மெய்
யாகிய-சத்தியமாகிய, சர்வமுத்தியை-பரிபூரணமானகைவல்யத்தை [யே
நல்கும்-கொடுக்கின்ற, திடமதானதெப்படியெனில்- வலியையுடைத்
தானதென்னமென்றுகேட்டில், அவரவர்-அவரவர்களுடைய, தியான



மேபிறப்பாகும்-தியானமேசநநமாம், உடலமாசையாற்றியானிக்க-
தேகவிச்சையினாற்சிந்திக்க, தியானித்தவுடலமாகுவர்- சிந்தித்தவடிவ
மாவார்கள்—மைந்தா-பாலகா, தொடர்பவங்கெட-தொன்றுதொ
ட்டுவருகின்ற பவங்கெடும்பொருட்டு—சொருபமேதியானிக்க -ஆத்
மஸ்வரூபத்தைசிந்திக்க, சொருபமாகுவர்-அச்சொருபமே யாவார்க
ள், மெய்யே-உண்மையாய்—எ-று.

(ப-ம்) தியானஞ் சிற்சடவுருவ மாகுமென்பார் தியானித்தவுடல்க
ளாகுவரெனவும் சொருபமாகுவரெனவுங்கூறினர். (அரு)

(இ-ம்) தியானத்திற் காரணவுருவஞ் சத்தும் காரியவுருவ மசத்து
மாதலினதற் கச்சத்தையதிவிக்கும்வல்லமையுண்டாயிற்றென்பதாம்.

(அ-கை) தியானத்திற் கச்சத்திபிருக்க விசாரஞானமியாதுக்கென்
றவினாவிற்குத்தரம்.

பிரமரூபத்தைத்தியானித்தபேர்களும்பிரமமாகுவரென்றால்
நாசரீரமாக்குரவனேவிசாரமேன்ஞானமேனென்னாதே
பரமபாவனைபரோக்ஷமாம்பின்பந்தப்பரோக்ஷமேயபரோக்ஷந்
திரவிசாரமாஞானமேமுத்தியாந்தீர்வையீதறிவாயே.

(இ-ள்,) பிரமரூபத்தை-பிரமஸ்வரூபத்தை, தியானித்தபேர்களும்
சிந்தித்தவர்களும், பிரமமாகுவரென்றால் - அப்பிரமமேயாவார்களெ
ன்றுசொன்னால், நாசரீரமாக்குரவனே-மானிடவடிவங்கொண்டவெ
னதாசிரியரோ, விசாரமேன்-விசாரமியாதினுக்கு, ஞானமேன்-ஞான
மியாதினுக்கு, என்னாதே-என்றுகேளாதே, பரமபாவனை-பிரமத்தியா
னமானது, பரோக்ஷமாம்-பரோட்சஞானமாம், பின்-பின்பு, அந்தப
ரோட்சமே-அப்பரோட்சஞானமே, அபரோட்சம் - அபரோட்சஞா
னமாதலால், திரவிசாரமாம்-திடமானவிசாரத்தினலுதிப்பதாம், ஞான
மே-அந்தவபரோட்சஞானமே, முத்தியாம்-முத்தியாம், ஈது - இது
வே, தீர்வையென்றறிவாய்-தீர்ப்பென்றுணருவாய்—எ-று.

(இ-ம்) தியானத்தின்காரியம் யோகமுங் காரணம் விசாரஞானமு
மாதலா லவ்விசாரஞானமேவீடடைதற்குவேண்டுமென்பதாம். (அசு)

(அ-கை) முன்பு தியானயோகத்தை நீக்கி மேல் விசாரஞானத்
தைநீக்குவான் விருத்திஞானமிருக்கிற் சுபானுபவ மெங்ஙனங்கூடு
மென்றவினாவிற்குத்தரம்.

வீடதாம்பரிபூரணசொருபத்தில்விருத்திஞானமுங்கூடிச்
சேடமாகினலகண்டமாமனுபவசித்தியெப்படியென்றாற்
சாடிநீர்மண்ணைப்பிறித்தகேற்றும்பொடிதானுமண்ணேமாயு
மூடிஞானமுமறிவிலாமையைக்கெடுத்தொக்கவேகெடுந்தானே.

(இ-ள்) வீடதாம்-முத்தியாகிய—பரிபூரணசொருபத்தில் - பூரண
மாகியபிரமஸ்வரூபத்தில்—விருத்திஞானமுங்கூடி - விருத்திஞான

முஞ்சேர்ந்த—சேடமாகினும்- விசேடமானும்—அகண்டாகாரமனுப வசித்தி அகண்டாகாரவனுபவஞ் சித்திப்பது—எப்படியென்றால்-எ ன்னையெனின், சாடிநீர்மண்ணை-தாழியிலிருக்குஞ்சலத்திலுள்ள சேற் றைத்தானுட்—மண்ணுமாயும்-அச்சேற்றோடுங்கெடும்— ஊடி- பகைத்து, ஞானமும்-விருத்திஞானமும்—அறிவிலாமையைக் கெடு த்து-அஞ்ஞானத்தைக்கெடுத்து—ஒக்கவேகெடும்- தானுங்கூடவேநசி க்கும்—எ-று.

(இ-ம்) விசாரஞான மறிவுதயமாம்பொருட் டறிவின்மையைக்கெ டுத்துத்தானுங்கெடுவதேயன்றிச் சேடிக்கமாட்டாதென்பதாம்.

(அ-கை) கைதவங்கொன்றசெய்யுண்முசவிரகர முசபர் சிரு ட்டியாலுண்டான சஞ்சிதம் பரஞானத்தாற் கெடுமெனவு மதனாலு ண்டான மனோகாயமான கன்மத்தை யதன்காரணமான விசாரஞா னங்கெடுத் தஃது மிதனோடுங்கெடு மெனவுங்கூறி யிச்செய்யுளின் அவ்வனுபவமுள்ள சீவன்முத்தரிலக்கணங்கூறல்.

இந்தநிச்சயமுத்தருள்ளனுபவமிருப்பதெப்படியென்றும்
சிந்தையற்றபூமண்டலவிராசனுஞ்சிசுவும்போற்சுகமாவர்
பந்தமுத்திகண்மறந்தபோமுண்டென்றபலர்சொலினகையாவ
ரந்தரத்தையுண்டுமிழ்ந்ததோர்சொருககனுமவர்களைநகையாரோ.

(இ-ள்) இந்தநிச்சயம்-இந்தநிச்சயமானது—முத்தருள் சீவன்முத் தருக்குள்ளே—அனுபவம்- அனுபவமாக—இருப்பதெப்படியென் றால்- இருக்கின்றதெவ்வண்ணமென்றால்—சிந்தையற்ற- பகைவருண மாறுகின்றசக்கரவர்த்தியையும்—சிசுவும்போல்- பாலகனையும்போல், சுகமவர் சுகஸ்வரூபராயிருப்பார்கள்—பந்தம்-பந்தமானது—மறந் துபோம்-கெட்டுப்போயதாம்—முத்தி-வீடானது—உண்டென்று - இப் போதுளதாமென்று—பலர்சொல்லில்- அநேகருரைக்கில்—நகையா வர்-சிரிப்பார்—ஓர்சொருகு-ஒருமசகமானது—அந்தரத்தை-ஆகாயத் தை—உண்டுமிழ்ந்ததென்று-விழுங்கிக்கக்கிற்றென்றும், அவர்களை நகையாரோ-அவர்களையார் நகையார்கள்—எ-று,

(ப-ம்.) சுவானுபூதி யெய்போது மொருதன்மையாக விளங்குமென் றதனக்கு அறியாமையாற் பந்தமு மதனிவர்த்தியானவீடு மிப்போ துண்டான தென்றென்பார் பந்தமுத்திகண்மறந்தபோமுண்டென் று பலர்சொலி னகையாவரெனக்கூறினர்.

(இ-ம்) அறிவறியாமையின்றி முன்னுள்ள சத்தாமாத்திரமாக விள ங்கிச் சுகித்திருப்பவனேசீவன் முத்தனென்பதாம். (அஅ)



(அ-கை) மத்தியி லவாந்தரமாகத்தோற்றுங் கற்பனையின் மயக்கா மைக்கோர்கதைகூறல்.

மலடிமைந்தனுந்தாணுவிற்புருடனும்வான்மலர்முடிசூடி
யிலகுநற்சர்ப்பநகரிலேசுத்திலைகயிராசிதம்விலைபேசிக்
கலகமாயினரிடையினிற்சயிற்றராக்கடித்திருவருமாண்டா
ரலகையாயினரெனும்விவகாரத்தையறிந்தவன்மயக்கானே.

(இ-ள்) மலடிமைந்தனும்-வந்தியாபுத்திரனும்—தாணுவிற்புரு டனும்-குற்றியின்மகனும்—வான்மலர் - ஆகாயத்தாமரைப்பூவை— முடிசூடி-சிரசிற்தரித்து, இலகுகந்தர்ப்பநகரில்-விளக்காநின்றகந்தர் வநகரத்தில், சுத்திகையிராசிதம்-ஜிளிஞ்சில்வெள்ளியை, விலைபேசி கல மிட்டு, கலகமாயினர்-பிணக்கடைந்தார்கள், இடையினில் - நடுவில், கயிற்றராக்கடித்து-ரச்சுசர்ப்பந்தீண்டி; இருவரும்-முன்சொன்னவிர ண்டுபேர்களும், மாண்டார்-இறந்து, அலகையாயினர்-பேயாயினர்க ளென்னுமிவ்விவகாரத்தை என்னின்றகதையின் ஞியாயத்தை, அறிந்த வன்மயங்கான்-தெரிந்தவன்மயக்கமாட்டான்-எ-று,

(இ-ம்) கற்பனையின்மூலந்தெரிந்தவ னதனிடத்தின் மயக்காரென் பதாம். (அகூ)

(அ-கை.) இதுகாறுங் காரியோபாதியான வவித்தையினு லுண் டான மயக்கத்தைநீக்கி மேற்காரணோபாதியானமாயையினு லுண்டா குமயக்கத்தைக் களைதற்பொருட் டஃது மித்தையாதலி னதனால்வரு ம் பலப்பிராப்திகளு மித்தையென்றகற்றி நீ சுவானுபூதியாகவிளங்கு வாயெனக்கூறல்.

மாயையென்பதுபொய்யெனிலதுபெற்றவகையெலாம்பொய்யாமே
தாயையன்றிமக்களுக்கொருபிறவியுஞ்சாதியும்வேறுண்டோ
சேயசொர்க்கமுநாகமுநன்மையுந்தீமையும்பாராமற்
றூயசத்துச்சித்தானந்தபூரணசொரூபமாயிருப்பாயே.

(இ-ள்) மாயையென்பது- மாயையென்றுசொல்லப்படுவது—பொ ய்யெனில் மித்தையென்றால்—அதுபெற்றவகையெலாம்—அதினுண் டானபொருளனைத்தும்—பொய்யாம்- மித்தையேயாம்—தாயையன் றி-மாதாவைத்தவிர—மக்களுக்கு-புத்திரருக்கு—ஒருபிறவியும்-ஓர்பி றப்பும்—சாதியும்-குலமும்—வேறுண்டோ-வேறுளவோ—(ஆதலா ல்) சேயசொர்க்கமும்-செவ்விதானசுவர்க்கமும்—நாகமும்- நரகமு ம்—நன்மையும்-நன்கையும்—தீமையும்-தீங்கையும்—பாராமல்- பா ர்க்காமல்—தூய-பரிசுத்தமான—சத்துச்சித்தானந்த - சச்சிதானந்த மாகிய—பூரணசொரூபமாயிருப்பாய் - பரிபூரணஸ்வரூபமாகவிருப் பாய்—எ-று,

(இ-ம்) மாயைமித்தையாதலி னதன்காரியங்களனைத்து மித்தையே யாமென்பதாம். (கூ0)

(அ-கை) மாயாகாரிய மித்தையாயின் பிரமன்முதலிய வனைத்துமி த்தையாமே அங்ஙனங்கூறிற் குற்றம்வாராவோவென வினுதல்,

பங்கயாசனன்முதற் பலதேவரும்பாருளபெரியோருங்
கங்கையாதியாந்தீர்த்தமுந்தேசமுங்காலமுமறைநாலு
மங்கமாறுமந்திரங்களுந்தவங்களுமசத்தியமெனச்சொன்று
லெங்களுயகனேயதனாற்குற்றமில்லையோமொழியீரே.

(இ-ள்.) பங்கயாசனன்முதல்- பிரமதேவனுதியான—பலதேவரும்-சமஸ்ததேவர்களும்—பாருளபெரியோரும்- பூமியின்கணுள்ள மகான்களும்—கங்கையாதியாம்-பாகீரதிமுதலிய—தீர்த்தமும்- தீர்த்தங்களும்—தேசமும்-நாடுகளும்—காலமும்-திரிகாலங்களும், மறை நாலும்-வேதங்களுநான்கும்—அங்கமாறும்-சாத்திரங்களாறும்—மந்திரங்களும்-பிரணவாதிமகாமந்திரங்களும்,தவங்களும்-தபசுகளும்—அசத்தியமெனச்சொன்னுல்- மித்தையென்றுரைக்கில்—எங்களுயகனே-எம்முடையவாண்டவனே, அதனுல்-அங்ஙனஞ்சொல்லுவதனுல்,குற்றங்களில்லையோ-பிழைகளில்லையோ,மொழியீர்-சொல்வீர்—எ-று.

(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை.) அவ்வினுவிற்குத்தரம். (௧௧)

சொர்ப்பனந்தனிற்கண்டதைப்பொய்யென் றுசொல்வதுபிழையானு
லற்பமாயையிற்றோன்றியசகங்களையசத்தெனல்பிழையாமே
சொர்ப்பனந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்லலாமெனின்
மைந்தா, வற்பமாயையிற் றோன்றியசகமெலா மசத்தியமெனலாமே

(இ-ள்) சொர்ப்பனந்தனில்-கனவினில்—கண்டதை - பார்த்ததை, பொய்யென்று-மித்தையென்று சொல்வதுபிழையானுல்- சொல்லுவது குற்றமாயின், அற்பமாயையில்-சிறுமையான மாயையினிடத்தில், தோன்றிய உண்டான—சகமெலாம்-உலகங்களனைத்தும்— அசத்தெனில்-மித்தையென்றுல்—பிழையாம்-குற்றமாம்,சொர்ப்பனந்தனில்- கனவில்—கண்டதை-பார்த்ததை—பொய்யென்று-மித்தையென்று, சொல்லலாமெனில்-உரைக்கலாமெனின்—மைந்தா-புத்திரா—அற்ப மாயையில்-சிறுமையான மாயையினிடத்தில்—தோன்றியசகங்களை- உண்டானவுலகமனைத்தையும்—அசத்தியமெனலாம் - மித்தையென் றுரைக்கலாம்—எ-று.

(இ-ம்) சொர்ப்பனம்போல மாயாகாரியமான சகசீவ பரங்களை மித்தையாதலி னவைகளினியல்பைக் கூறுதலாற் குற்றமில்லை யென்பதாம்.

(அ-கை) சத்தசத்தினுண்மை யிஃதெனக்கூறல். (௧உ)

பொய்யைமெய்யென்றசூடர்புண்ணியமென்று புராணங்கூப்பிடுமா
லுங்,மெய்யைமெய்யென்றஞானிக்குக்குற்றங்கள்விதித்தசாத்திரமு
ண்டோ, பொய்யதேதெனினுமரூபங்களாம்பூதமாயையாமை
மெய்யதேதெனிற்சச்சிதானந்தமாய்வியாபிக்குமான்மாவே.

(இ-ள்)பொய்யைமெய்யென்ற-மித்தையைச்சத்தியமென்ற,மூடர் அறிவிலாரை,புண்ணியமென்று-தருமவான்களென்று,புராணங்கூப்பி டுமாலுல்-அஷ்டாதசபுராணங்களுமுறையிடுமாயின், மெய்யைமெய் யென்ற-உண்மையையுண்மையென்ற ஞானிக்கு-ஞானவான்களுக்கு குற்றங்கள் விதித்த-குற்றங்களைநியமித்த, சாத்திரமுண்டோ-நூல்களு முளவோ, பொய்யதேதெனில்-மித்தையாவதேதெனில்,நாமரூபங்க ளாம்- நாமரூபவடிவங்களான,பூதமாயையை-பஞ்சபூதபெளதிகங் களையேயாம்,மெய்யதேதெனில்-சத்துவம்யாதெனில், சச் சிதானந்தமாய் -சச்சிதானந்தஸ்வரூபமாக, வியாபிக்கும்-வியாபித்தி ருக்கும், ஆன்மாவே-ஆத்மஸ்வரூபமேயாம்—எ-று.

(இ-ம்) ஆத்மானுத்மாவினிலக்கணங்கூறினதாம், (௧௩)

(அ-கை) மாயையின்றன்மையிஃதெனத் தோன்ற வறுவகையாகவி னுதல்.

மாயையென்பதேதுடையாரெப்படிவந்ததுவருவானேன்
மாயையென்பதுபிரமத்தின்வேறெனின்வஸ்துவுமிரண்டாமே
மாயையென்பதும்பிரமமுமொன்றெனின்வஸ்துவும்பொய்யாமே
மாயையென்றமேகங்களுக்கொருசண்டமாருதகுருமூர்த்தி,

(இ-ள்)மாயையென்றமேகங்களுக்கு-மாயையென்றமுகில்களுக்கு ஒருசண்டமாருதகுருமூர்த்தி-ஒப்பற்றபெருங்காற்றுகியதேசிகமூர்த் தியே,மாயையென்பதேது-மாயையென்றுசொல்லுவதியாது,உடைய ரார்-அதனையுடையவரியாவர்,எப்படிவந்தது-எவ்விதமுதயமாயிற்று வருவானேன் - உண்டானகாரணமென்ன,மாயையென்பது - மாயை யென்றுசொல்லுவது,பிரமத்தின்வேறெனில் - பிரமத்துக்குவேருன தென்றுரைக்கின், வஸ்துவுமிரண்டாமே - வஸ்துவுந்துவிதமாமே,மா யையென்பதும்-மாயையென்றுரைக்கப்படுவதும்,பிரமமும்-பிரமமெ ன்றுரைக்கப்படுவதும், ஒன்றெனில்-ஏகமென்றுன், வஸ்துவும்பொய் யாமே-மாயாவஸ்துவைப்போலப்பிரமவஸ்துவுமசத்தியமாமேஇதனை யருள்வீர்—எ-று.

(இ-ம்) மாயையினுருவமும் அஃதுடையவர்களையும் அதனுற்பத் தியும் அஃதுதித்தற்குக்காரணமும் அஃது பிரமத்திற்குப்பின்னமாயி ன் வஸ்துதுவிதமாமேயெனவும் அபின்னமாயின்வஸ்துவு மித்தையா மேயெனவும் அதனுண்மையைத்தெரிய வினுவினதாம். (௧௪)

(அகை) அவைகளின்முதனுன்குவினுவிற்குத்தரங்கூறல்.

அதனையின்னதென் றுரைத்திடப்படாமையாலவாச்சியவடிவாகு
மிததைக்குளதடலியானுலருமெய்யெனுமவருடையோர்கள்

கதையிலாதபொய்வந்ததிப்படியென்றுகண்டபேரிலைமைந்தா
விதனமாயையேன்வந்ததென்றூற்புத்திவிசாரமற்றதனாலே

(இ-ள்) அதனை-அம்மாயையை, இன்னதென்று - இத்தன்மையுள்ள
தென்று, உரைத்திடப்படாமையால்-சொல்லக்கூடாமையால், அவாச்
சியவடிவாகும்-அவாச்சியவுருவமாம், இது தனக்குளது-இஃதெனக்கு
ள்ளது, உடலியான்-இத்தேகநான், உலகுமெய்- இச்சகஞ்சத்தியம், எ
னுமவருடையோர்கள் - என்னின்றவவர்களையதனையுடையவர்கள், க
தையிலாதபொய்- காரணமில்லாதமித்தையானமாயை, வந்ததிப்படி
யென்று-உதித்ததிவ்விதமென்று, கண்டபேரிலை-பார்த்தவர்களில்லை-
மைந்தா-மகனே, விதனமாயை-துன்பமயமானமாயையானது, என்வ
ந்ததென்றால்-என்றோன்றிற்றெனில், புத்திவிசாரமற்றதனால் - ஆத்ம
ஞானவிசாரஞ்செய்யாததினால்வந்தது-எ-று,

(ப-ம்) உருவமருவ முருவாருவமென மாயையைப் பகுத்துச்சொ
ல்லக்கூடாததென்பார் அவாச்சியவடிவெனவும் தேகாதிப்பிரபஞ்சத்
தையுண்மையென்றுகொள்பவரோ அம்மாயை யுடையவரொன்பார்உட
லியானுலகுமெய்யெனுமவருடையோர்களெனவும் மித்தையாகத்தோ
ன்றன்மாத்திரமேயன்றியுற்பத்தியில்லையென்பார் பொய்வந்ததிப்ப
டியென்றுகண்டபேரிலையெனவும் அதனைத்தோன்றுதல்யாதினாலெ
னவிசாரிக்கும்விசாரமின்மையே அதனுற்பத்திக்குக் காரணமென்பா
ர் மாயையேன்வந்ததென்றூற்புத்திவிசாரமற்றதனாலேயெனவுங்கூறி
னர்.

(இ-ம்) மாயையினுருவமும் அதனையுடையவர்களையும் அதனுற்ப
த்தியும் அஃதுதித்தற்குக்காரணமுமிவையெனக்கூறினதாம் (௬)

(அ-கை) ஐந்தாம்வினாவிற்குத்தரம்.

அருவமாகுமாயாவித்தைகள்விளையாடுமுன்றெரியாவே
யுருவமாம்பலகந்தர்ப்பசேனையாயுதித்தபின்வெளியாகும்
பிரமசத்திகளனந்தமாமதைக்கண்டுபிடித்திடல்கூடாதே
பரவுபூதங்கள்கண்டனுமானத்தாற்பலருக்கும்வெளியாமே

(இ-ள்) மாயாவி - இந்திரசாலஞ்செய்பவன், விளையாடுமுன்-விளை
யாடுதற்குமுன்பு, அருவமாகும்-தோன்றாமையாயுள்ள, வித்தைகள்-
வித்தையாசத்திகள், தெரியாவே-தோன்றாவாம், உருவமாம்-வடிவங்
களாகின்ற—பலகந்தர்ப்பசேனையாய் - அநந்தகந்தர்வசேனைகளாக
உதித்தபின்-உண்டானபின்பு—வெளியாகும் - அச்சத்திகள்விளக்க
மாகும், (அவைபோல) பிரமசத்திகள்-பிரமத்தினதுசத்திகள்—அனந்
தமாம்-அனேகமாம், அதை-அச்சத்திகளை, கண்டு-பிடித்திடல் கூடாது
பார்த்தல்கூடாததாம், பரவுபூதங்கள் கண்டு-விரியும்பஞ்சபூதங்களைப்பா



ர்த்து, அனுமானத்தால் - அனுமிதிப்பிரமாணத்தால், பலருக்கும்வெ
ளியாம்-யாவர்க்குமஃதுளதென்றுவிளங்கும்-எ-று.

(இ-ம்) மித்தையால் சகந்தோன்றுதலின் அதனைத்தோற்றுவிக்கு
மித்தையானமாயாசத்தி யொன்றுளதெனவுணரவேண்டுமென்பதாம்

காரியங்களுஞ்சத்திய காரமுங்காணுமற்றதுமாயம்
பாரினின்றமாயாவியுஞ்சேனையும்பார்ப்பவர்கண்காணும்
வீரியந்திகழ்வித்தையாயினசத்திவெளிப்படாததுபோலப்
பேரியற்பிரமத்துக்குமூலருக்கும்பிறிதுசத்திகளுண்டே

(இ-ள்) சத்தி-சத்தியினது—ஆகாரமும்-ஆகாரமானபிரமமும்—கா
ரியங்களும், சிவேஸ்வரசகத்தாகியகாரியங்களும், காணும்-தோன்றும்,
அது-அம்மாயாசத்தியானது, மாயம்-மாயமாயிருக்கும்—பாரினின்
று-பூமியின்கணிருந்த—மாயாவியும்-மாயாவித்தைசெய்பவனும், சே
னையும்-அவனாற்காட்டப்பட்டபடைகளும், பார்ப்பவர்கண்காணும்-கா
ண்பவர்கண்ணிற்குத்தோன்றும், வீரியந்திகழ்-கெம்பீரமாய்விளங்குகி
ன்ற—வித்தையயினசத்தி-வித்தையாகியசத்தியானது, வெளிப்படா
து-தோன்றாது, அதுபோல-அதைப்போல, பேரியற்பிரமத்துக்கும்-ம
கத்துவமுள்ளபிரமஸ்வரூபத்துக்கும், உலகுக்கும்-சகத்துக்கும்—பிறி
துசத்திகளுண்டு-மத்தியிற்சிலசத்திகளுளவாம்—எ-று.

(இ-ம்) பிரமத்திற்கும்பிரபஞ்சத்திற்குமத்தியினவாந்காமாசத்தோ
ன்றுகின்றமாயைசனியேயோர்முதலாகிப்பிரமத்திற்குவேறுபட்டிரா
ததனால்வஸ்துவிரண்டாகமாட்டாதென்பதாம் (௭)

(அ-கை) ஆறாம்வினாவிற்குத்தரம்

சத்திசத்தனைத்தவிரவேறன்றுகாண்சத்தனுமாயாவி
வித்தைகாட்டியவிந்திரசாலப்போய்வித்தவானும்போலப்
புத்திமைந்தனேசத்திமானகியபூரணவான்மாவின்
வஸ்துநிர்ணயஞ்சொன்னதிஷ்டாந்தத்தின்வழிகண்டுதெளிவாயே

(இ-ள்) சத்தி- சத்தியானது—சத்தனைத்தவிர-சத்தனைவிட—வே
றன்றுகாண்-வேறன்றாம்—சத்தனும்- சத்தனுகிய—மாயாவி-வித்தை
செய்வான்—வித்தைகாட்டிய- வித்தையைக்காண்பித்த—இந்திரசால
ம்போய்-இந்திரசாலநீங்கி—வித்தவானும்போல-வித்தவானுமாறபோ
ல—புத்திமைந்தனே- அறிவுள்ளமகனே—சத்திமானகிய-சத்தனுகி
ய—பூரணவான்மாவின்-பரிபூரணவாத்மாவின்—வஸ்துநிர்ணயம்-ஸ்
வரூபநிச்சயத்தை—சொன்னதிஷ்டாந்தத்தின்-சொல்லியதிஷ்டாந்த
த்தினுடைய—வழிகண்டு-பார்க்கத்தைப்பார்த்து—தெளிவாய்- தெளி
ந்துகொள்வாய்—எ-று

(இ-ம்) சத்தனைத்தவிர சத்தியென்றோர்வஸ்துவேறின்மையானும்

(இ-ம்) குருவாக்கியப்படி யுண்மையான சச்சிதானந்த ஸ்வரூப
மே தானுகச்சிந்திக்கில் தன்மயமாதலு மில்லாததான மாயாசத்தியி
ல்லாததாகவே நீங்குதலுமா மென்பதாம். (௱௨)

(அ-கை.) மூன்றாம்விஞவிற் குத்தரங்கூறல்.

மேவுமண்ணிலவ்வியத்தமேவியத்தமாம்விவகரித்திடவேண்டி
ஞவினுன்மண்ணைக்குடமென்பாக்குடமெப்பதுநாவாலே
பவுமைருபங்களைமறந்துமண்பார்ப்பதேபரமார்த்தஞ்
சிவபேதகற்பிதங்களைமறந்துநீசின்மயமாவாயே.

(இ-ள்) மேவும்-பொருந்தாநின்ற,மண்ணில்-மிருத்துவில், அவ்விய
த்தம்-மறைப்பட்டிருந்தசடசத்தி, வியத்தமாம்-வெளிப்படும்,விவகரித்
திடவேண்டில்-விவகரிக்குநிமித்தம்,நாவினுல்-நாக்கினுல், மண்ணை-
அம்மிருத்துவை, குடமென்பார்-குடமென்றுசொல்லுவார்கள், அக்கு
டம்-அக்கடநாமம், நசிப்பதும்-மண்ணுகவிருப்பதும், நாவாலே-நாக்
கினுலேயாம், பாவும்-கற்பனையாகவழங்குகின்ற, நாமருபங்களை மற
ந்து-நாமருபவடிவங்களைநினையாது, மண்பார்ப்பதே- மிருத்துவாகப்
பார்ப்பதே, பரமார்த்தம்-உண்மையாம், (அங்ஙனம்) சிவபேதகற்பித
ங்களைமறந்து-சிவேஸ்வரசகத்தென்னும் வேறுபாடுகளைநீக்கி,நீசின்ம
யமாவாய்-நீசின்மாத்திரமாவாய்—எ-று.

(இ-ம்) கடத்தை மண்ணென்றறியின் கடமென்பதுநசித்து அது
மண்ணாக விளங்குவதுபோலச் சிற்சத்தியைச் சித்தெனக் காணின்
அச்சத்திநீங்கியது சித்தாகவிளங்குவதே மாயாநிவர்த்தியாகிய முத்
தியென்பதாம்.

இஃதுமேற்கூறு மஷ்டவிதானந்தத்திலொன்றான வத்துவிதானந்
தமெனக்கொள்க. (௱௩)

(அ-கை) அச்சத்திகணின்னுவிடத்த மதன்காரியமான பிரிசிய
நீங்காமையா னஃதுநீக்குமுபாய மனுக்கிரகிக்கவேண்டுமென்ற வி
னவிற்குத்தரம்.

பூரிக்குங்கனசச்சிதானந்தத்திற்பொய்சடந்துயர்மூன்றுந்
தூரத்தாயினுந்தோன்றுபாழ்விபரிதந்தடைப்படுசெப்படியென்று
னீரிற்றோன்றுந்தன்னிழறலைகிழதாய்நின்றலையினுநேராய்ப்
பாரிற்றோன்றியதன்னைநோக்கிடலந்தப்பாழ்நிழல்பொய்யாமே

(இ-ள்) பூரிக்கும்-பூரணமாயிருக்கின்ற, கனசச்சிதானந்தத்தில்-க
னமானசச்சிதானந்தஸ்வருபத்தில்—பொய்சடந்துயர்- அனர்தசட
துக்கமாகிய—மூன்றும்-திரிவிதமும், தூரத்தாயினும் - இலவாயினும்,
தோன்றுபாழ்விபரிதம் - தோன்றுகின்றபாழாகியவிபரீதத்தை—ந
டைப்படுசெப்படியென்றால்- கெடுப்பதெவ்விதமென்னில்—நீரிற்றோ



ன்றுந்தன்னிழல்-சலத்திற்பிரதிபலித்துத்தோன்றுநின்றதனதுசாயை
யானது—தலைகிழதாய்நின்று-தலைகீழாயிருந்து—அலையினும்- சலிக்
கினும்—நேராய்-செவ்விதாய்—பாரிற்றோன்றிய-பூமியிற்றோன்றிய
தன்னைநோக்கிடல்-தனதுருவத்தைப்பார்க்கில், அந்தப்பாழ்நிழல்-அத்
தப்பாழானசாயையானது, பொய்யாம்-மித்தையாம்-எ-று.

(இ-ம்) தன்னைத்தரிசிக்கிற் றனதுசாயையான திரிசியந் தானுகவே
நீக்குமென்பதாம். (௱௪)

(அ-கை) (இது)

ஞானக்காரணமறிவுகாண்காரியநாமருபப்பேர்க
ளானதெப்படியழிந்ததெப்படியெனவாய்குதல்பலனன்றே
மானமைந்தனேதீர்க்கசொற்பனசகம்வந்ததுப்பாராமற்
போனதுநினையாமலுன்போதமாய்ப்பூர்ணமாயிருப்பாயே.

(இ-ள்.) காரணம்-காரணமானது—ஞானமறிவுகாண்-ஞானத்தை
யறியுமறிவாம்,காரியம்-காரியமானது,நாமருபப்பேர்கள்-நாமருபமா
ன சிவேஸ்வரசகங்களாம், ஆனதெப்படி யழிந்ததெப்படியென-இவை
யுற்பத்திநாசமெவ்வணமென்று, ஆய்குதல்-விசாரித்தல், பலனன்
று-பயனன்றும், மானமைந்தனே-பெருமையுள்ளபுத்திரா,தீர்க்கசொ
ற்பனசகம்-நீண்டகனவாகியவுலகங்கள்,வந்ததும்பாராமல் உதித்ததை
யும்விசாரியாமல், போனதுநினையாமல் - நசித்ததையும்விசாரியாமல்,
உன்போதமாய்-உனதுஞானமாயும், பூர்ணமாயிருப்பாய்- பரிபூரண
ஸ்வரூபமாயுமிருப்பாய்—எ-று.

(இ-ம்) காரணமான சின்மாத்திரமாகத்தான்விளங்கின் காரியமான
யாவு மஃதாகவேவிளங்குமென்பதாம். (௱௫)

(அ-கை) சிந்திக்குமுறையு மதினுதிக்கு மத்துவிதானந்தமுங் கூறல்,

அசத்திலெம்மட்டுண்டம்மட்டும்பாருமுகமாகினுயம்மட்டு
நிசத்திலுள்விழிப்பார்வையாயிப்படிநிரந்தரப்பழக்கத்தால்
வசத்திலுன்மனநின்றுசின்மாத்திரவடிவமாகிடின்மைந்தா
கசத்ததேகத்திலிருக்கினுமானந்தக்கடல்வடிவாவாயே.

(இ-ள்) அசத்தில்-திரிசியமானமித்தையில்,எம்மட்டுண்டு-எவ்வ
ளவுகாலமிருந்தனையோ—அம்மட்டும்- அவ்வளவுகாலமும்—பாரமு
கமாகினுய்-பகிர்முகமானுய்—அம்மட்டும்- அவ்வளவாக—நிசத்தில்-
நிருக்கானகத்தில்—உள்விழிப்பார்வையாய்-அந்தர்முகதிஷ்டியாய்—
இப்படி-இவ்விதம்—நிரந்தரப்பழக்கத்தால்- இடைவிடாதவப்பியாசத்
தினுல்—உன்மனம்-உன்மனமானது, வசத்திநின்று- உனதுவசமாக
விருந்து, சின்மாத்திரவடிவமாகிடின்- சைதன்னியஸ்வருபமானுல்—
மைந்தா-மகனே—கசத்ததேகத்தில்- வெறுக்கப்பட்டசரீரத்தில்—இ
ருக்கினும்-நீயிருந்தாலும்—ஆனந்தக்கடல்வடிவாவாய்- பிரமானந்த
சாகரஸ்வருபமாவாய்—எ-று,

(இ-ம்.) இங்ஙனஞ்சிந்தித்தச் சித்துருவமாவானுயி னவ்வுருவமான வானந்தஸ்வரூபமே தானுமவினங்குவனென்பதாம்.

(அ-கை) மாயை யவித்தைமுதலிய சடபாவநீங்கிச் சிற்சத்தியாகி (ருசு)
ய சிற்பாவமாத்மாவிற்கனாந் தஸ்தானமின் பவ்வாத்மா சச்சிதானந்த ஸ்வரூபமென்றுணர்த்தின வாசிரியனைநோக்கி யங்ஙன மாயின சத் தையுஞ் சித்தையும்போல வானந்தமே னதனிடத்திற் காணப்படவி ல்லையெனவினவுதல்.

தானன்றிவேறொன்றுமில்லாதபூரணச்சச்சிதானந்தருணமா, யூனின் றவுயிர்தோறுமொன்றுமென்றாலதொக்கின்றபடிகண்டிலே.னுறென் றசிவன்கள் சத்தானவகையொக்குஞானங்கள்வெளிகண்டதா,மான ந்தமிவைபோலவெளியாகவுதியாத வடைவேதகுருநாதனே,

(இ-ள்) குருநாதனே-தேசிகனே,தானன்றி-தன்னைத்தவிர,வேறொ ன்றுமில்லத-இதரவஸ்துக்களில்லாத பூரண-பரிபூரணமாகிய,சச்சிதா னந்தருணமாய்-சச்சிதானந்தசுபாவமாய்,ஊனின்ற-தேகத்தின்கண் ணிருந்த,உயிர்தோறும்-ஜீவர்கடோறும்,ஒன்றுமென்றால்-ஏகமாயி ருக்குமென்னில், அது-அச்சச்சிதானந்தமானது,ஒக்கின்றபடிகண்டி லேன்-ஒத்திருக்கும்வண்ணம்பார்த்திலேன்,நானென்றசீவன்கள்-அக ம்பாவமுள்ளஜீவர்கள், சத்தானவகையொக்கும் - சத்தென்கிறவழி யைப்போல-இவற்றைப்போல,ஆனந்தம்-ஆனந்தமானது,வெளியாகவு தியாத-வெளியாகத்தோன்றாத, அடைவேது-கிரமமேது—எ-று,

(அ-கை) அவ்வினாவிற் குத்தரங்கூறல்,

உருவங்களிரதங்கள்பரிசங்களொருபூவிலொன்றுமென்றாலுமே கரணங்களோரொன்றிலோரொன்றுதெரியுங்கணக்கன்றிவாராதுகா ணருமந்தசச்சிதானந்தச்சுபாவங்களான்மாவின்வடிவாகினும் பிரபஞ்சமயமாம்விருத்திபேதத்தினாற்பேதங்களாமைந்தனே

(இ-ள்) உருவங்கள் வடிவங்களும், இரதங்கள்-சுவைகளும்,பரிசங் கள்-பரிசங்களும்,ஒருபூவில்-ஒருமலரில்,ஒன்றுமெனறாலும்-ஒன்றா யிருக்குமெனினும், கரணங்களோரொன்றின்-இந்திரியமொவ்வொன் றிற்கு,ஓரொன்றுதெரியுங்கணக்கன்றி-ஒவ்வொருவிடயந்தெரியுங்கண க்கேயல்லாமல்,வாராதுகாண்-தெரியமாட்டாது,(அதுபோல)அரும ந்த-அருமருந்தன்ன சச்சிதானந்தச்சுபாவங்கள்-சச்சிதானந்தவியல் புகள், ஆன்மாவின்வடிவாகினும்-ஆத்மஸ்வரூபமானாலும்-பிரஞ்ச மயமாம்-சகத்துருவமான- விருத்திபேதத்தினால்விருத்தியின்வேற்று மையினால்,மைந்தனே-மகனே,பேதங்களாம்-வேற்றுமைகளாம்.எ-று.

(அ-கை) (இ-ள)

தாமதமிராசதஞ்சாத்துவிதமுக்குணத்தால்வரும்விருத்திமூன்று மாமவைகண்மூடமுங்கோரமுஞ்சாந்தமும்பெயரானவாகுமகனே



யேழுறவிருக்கின்றசச்சிதானந்தங்களென்றென்றுமொன்றாகிலு மே-நாலுமாக்கும்விருத்திப்பிரிவினாற்சொரூபஞானுதிபிறிவாகுமே.

(இ-ள்) தாமதம்-தமசும்,இராசதம்-இரசசும், சாத்துவிதம்-சத்துவ மு-மூன்றுமாகிய, முக்குணத்தால்-திரிகுணங்களால்,வரும்விருத்திமூன்றுப்-அவைகள்-அம்மூன் உண்டானவிருத்திகடிரிவிதமாய்,ஆம்-ஆகின்ற—அவைகள்-அம்மூன் றும்—மூடமும்-மூடவிருத்தியெனவும்—கோரமும்-கோரவிருத்தி யெனவும், சாந்தமும்-சாந்தவிருத்தியெனவும், அபிதானமாகும்-பெ யரைப்பெறுவனவாம்,மகனே-மைந்தா—ஏழுறவிருக்கின்ற-இன்புற விருக்கின்ற, சச்சிதானந்தங்கள் - சச்சிதானந்தமானவைகள்—என் றென்றும்-எப்போதும்—ஒன்றாகிலும்-ஏகமானாலும்—நாலுமாக்கும் யாஞ்சொல்லும்—விருத்திப்பிரிவினால்-விருத்திபேதத்தினால்— சொ ருபஞானுதி - சித்துமுதலியசத்தானந்தஸ்வரூபங்கள்—பிறிவாகும்- (ருக)
பேதங்களாம்-எ-று.

அ-கை-இ-ள.

சடமானமூடத்தருக்கல்லுமண்களிற்சத்தொன்றுமேதோன்றுமால் விடமானகாமாதிகோரத்திலானந்தம்விளையாதுமற்றவைகளாந் திடமானவொழிவாதிசாந்தத்திலேசச்சிதானந்தமூன்றும்வெளியா மடமானமூடங்கள்கோரங்கள்விடுசாந்தமனமாகிலானந்தமே.

(இ-ள்) சடமான-சடமாகிய—மூடத்தருக்கல்லுமண்களில் - மரங் சிலைமண்களின்மூடவிருத்தியில்—சத்தொன்றுமேதோன்றும்- சத்து மாத்திரந்தோன்றும்—விடமான- விடரூபமான—காமாதிகோரத் தில்-காமமுதலியகோரவிருத்தியில்— ஆனந்தம்விளையாது - ஆனந்தமு மற்றவைகளாம்-சத்துஞ்சித்துந்தோன்றும்—திடமான-உறு தியாது—மற்றவைகளாம்-சத்துஞ்சித்துந்தோன்றும்—திடமான-உறு தியான—ஒழிவாதிசாந்தத்தில்-ஒழிவுமுதலியசாந்தவிருத்தியில்—சச் சிதானந்தமூன்றும்வெளியாம்-சச்சிதானந்தமூன்றும்வெளிப்படும்— மடமான-அறிவின்மையாகிய—மூடங்கள்-மூடவிருத்திகளையும்— கோரங்கள்-கோரவிருத்திகளையும்—விடு-விடாநின்ற—மனம் சாந்தமாகில்-சாந்தவிருத்தியைப்பெறில்—ஆனந்த மானது—ஆனந்தவெளியாம்-எ-று.

(இ ச-க-ம்) ஆத்மசுபாவமான சச்சிதானந்தம் விருத்திபேதங்களி ன் மறைபட்டதும் வெளிப்பட்டதும்போலத் தோன்றினதேய றி யவைகளதனிடத்தில்லாததன்றென்பதாம்.

(அ-கை) அச்சச்சிதானந்தவிலக்கண மியாதென்ற வினாவிற்கு த்தரம்-

இகமானகுருநாதனேசச்சிதானந்தமெனுமிலக்கணமறிவிலே னகலாதசத்தாவதேதுசித்தாவதேதானந்தமேதென்றிடின் மிகுகாலமூன்றுங்கெடாதிருப்பதுசத்துவேறுபாடறிதல்சித்தா யஞ்ஞாயநுகர்போதுசுகமாகுமநுபூதிவாழ்வென்பதானந்தமே.

(இ-ள்) இகமான-இம்மானிடவடிவமாகவெழுந்தருளிய—குருநாதனே-குருசுவாமியே, சச்சிதானந்தமென்னும்-சச்சிதானந்தமென்கின்ற, இலக்கணமறிகிலேன்-இலக்கணத்தைத்தெரிந்திலன்—அகலாத-நீங்காத—சத்தாவதேது-சத்தென்பதியாது, சித்தாவதேது- சித்தென்பதியாது—ஆனந்தமேது-ஆனந்தமென்பதியாது—என்றிடில்- என்றுகேட்பையாயின்—மிகு-மிகுந்த, காலமூன்றும்-திரிகாலங்களினும்—கெடாதிருப்பது-நசியாதிருப்பது—சத்து - சத்தாகும்—வேறுபாடறிதல்-சிற்சடபேதங்களையறிதல்—சித்தாம்-சித்தாகும்—மகிழ்காமம்-மகிழாநின்றகாமத்தை—நுகர்போது-அநுபவிக்கும்போது—சுகம்-இன்பத்தைப்போல—ஆகும்- ஆகாநின்ற—அனுபூதிவாழ்வென்பது-சுவானுபூதிசுகமென்றுசொல்லப்படுவது—ஆனந்தம்- ஆனந்தமாம்-எ-று. (௱௰௧)

(இ-ம்) சச்சிதானந்தவிலக்கணமிவையெனக்கூறினதாம்.

(அ-கை) ஆத்மா சச்சிதானந்தமென்பதற்கனுபவங்கூறுதல்

நாசச்சரீரத்திருக்குஞ்சரீரிதனை நால்வேதமாவாக்கிய
நீசச்சிதானந்தமென்றிடினுமாசிரியர்நீபிரமமாகுமெனினு
மாசற்றசச்சிதானந்தநானென்னவிவன்மன்னுமனுபவமெங்ஙனே
கோசப்புரங்களையிடித்துத்தகர்த்தமதகுஞ்சரக்குருநாதனே.

(இ-ள்) நாசச்சரீரத்து-நசிக்கின்றதேகத்தில்—இருக்குஞ்சரீரிதனை இருக்கின்றதேகியை—நால்வேதமாவாக்கியம்- நான்குசுருதியின்முடிவிலுள்ளமகாவாக்கியங்களும்—நீசச்சிதானந்தமென்றிடினும் - நீயேசச்சிதானந்தஸ்வரூபமென்றுசொல்லினும்—ஆசிரியர்- தேசிகருபதேசமும்—நீபிரமமாகுமெனினும்-நீயேபிரமமென்று சொல்லினும்—மாசற்ற-நின்மலமான—சச்சிதானந்தம்- சச்சிதானந்தமே—நானென்ன-நானென்று—இவன் - இம்மானுக்கன்—மன்னுமனுபவம்-பொருந்துமனுபவமானது—எங்ஙன்- எவ்விதம்—கோசப்புரங்களை-பஞ்சகோசமாகியமூன்றுதேகங்களையும்—இடித்துத்தகர்த்த-உடைத்துத்தகளரக்கிய—மதம்-மதத்தையுடைய—குஞ்சரக்குருநாதனே யானையாகியகுருசாமியே-எ-று. (௱௰௨)

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) ஆத்மாசத்தென்பதற்கனுபவங்கூறுதல்.

சென்மாந்தரஞ்செய்தவினைகளுடனுருமெனிற்செல்காலமிவனுண்டலோ, கன்மானுபவநரகசொர்க்கமெனில்வருகின்ற காலத்துமிவனுண்டலோ, வுன்மாதயாதனு வுடல்கடவுளுடன்மனுட வுடன்மாறிமாறியழியுந் தன்மாயவுடல்கெடினுமிவனிருப்பதுகொண்டு சத்தென்பதொக்குமகனே.

(இ-ள்) சென்மாந்தரஞ்செய்த- முன்செனனங்களிற்செய்த—வினை



கள்-கன்மங்களானவை—உடனுருமெனில்-தேகத்தைத்தொடுக்குமெனின்—செல்காலம்-சென்றகாலத்திலும்—இவனுண்டலோ - இப்புருடனிருந்தானல்லவா, கன்மானுபவம்-இப்போதுசெய்தகன்மமனுபவித்தற்குத்தக்க, நரகசொர்க்கமெனில்-இனிநரகசொர்க்கங்களையடைவனென்றால், வருகின்றகாலத்தும்-எதிர்காலத்தினும், இவனுண்டலோ, இவனிருப்பானல்லவா—உன்மாதயாதனுவுடல்-உன்மத்தமாகியயாதனாசரீரமும், கடவுளுடல்-தேவசரீரமும், மனுடவுடல் - மானுடசரீரமுமாக, மாறிமாறியழியும்-மாறிமாறிநசிக்கும், தன்மாயவுடல்கெடினும்-தனதுமித்தையாகியதேகநசிக்கினும், இவனிருப்பதுகொண்டு-இத்தேகிகெடாமலிருப்பதனால், மகனே-மைந்தா, சத்தென்பதொக்கும்- இவனேசத்தென்னுமனுபவமொக்கும்—எ-று.
(இ-ம்) தேகமுதலியவைகணசிக்கினுந் தானசியாமன் மூன்றுகால (௱௰௩)
ங்களினுமிருத்தலினாத்மாவேசத்தென்பதாம்,
(அ-கை) ஆத்மாசித்தென்பதற்கு மானந்தமென்பதற்கு மனுபவ
ங்கூறல்.

இருளாகமூடுஞ்சுழுத்தியிலிராத்திரியிலிரவிசுடரற்றபொழுது
மருளாமலிருளையும்பொருளையுந்தெரிகின்றவகைகொண்டுசித்தாகு [மே
பெருவாழ்வுமிக்கதானேதன்னிடத்தினிற்போதப்பிரியமதனு
லருகாதபிரியஞ்சுகத்தில்வருமாதலாலானந்தமாமைந்தனே.

(இ-ள்) இருளாகமூடுஞ்சுழுத்தியில் - அந்தகாரமாகமூடிக்கொள்ளுஞ்சுழுத்தியவத்தையிலும், இராத்திரியில்-இரவிலும், இரவிசுடரற்றபொழுதும்-சூரியப்பிரகாசமில்லாதபோதும், மருளாமல் மயங்காமல் பொருளையும்-வஸ்துக்களையும், தெரிகின்ற இருளையும்-இருட்டையும், பொருளையும், தெரிகின்றவகையினால், சித்தாகும் - இவனேசித்தாகுவகைகொண்டு-காண்கின்றவகையினால், தானேதன்னிடத்தினில்-தாம், பெருவாழ்வுமிக்க-பேரானந்தமிகுந்த, தானேதன்னிடத்தினில்-தானேதனதிடத்தில், போதப்பிரியமதனுல்-நீங்காதபிரியம்வைப்பதனுல், அருகாதபிரியம்-குறையாதபிரியமானது, சுகத்தில்வருமாதலால்-தனதுசுகத்தில்வருவதனுபவமாகலால், மைந்தனே-மகனே, ஆனந்தமாம்-இவனேயானந்தமாவன்—எ-று.

(இ-ம்) ஆத்மாவறிவறியாமையின்றியறிவாயிருந்ததுதலிற் சித்தும் விடயங்களனைத்தினுமுள்ள பிரியநீங்கினுந்தனதுபிரியநீங்காமையினானந்தருமாமென்பதாம். (௱௰௪)

(அ-கை) சுகசாதனங்களிற் பிரியமிருப்பதுபோல வாத்மாவினும் பிரியமிருத்தலினானந்தத்திற்குச் சாதனமாகாதோவெனி லல்லனாகாவென்பதற்கனுபவங்கூறல்.

அன்னபானுதிசுகசாதனமதாகையா லார்க்குமாவெகுபிரியமாகு
மின்னவாறுன்மாவு மானந்தசாதன மெனக்கருதல் பொருளல்லவே
சொன்னவான்மாவையொருசுகசாதனக்கிளை சொல்லுவாயாகின்

மகனே, யுன்னதானந்தம்வே ருவனுபவிப்பதா முடயவான்மாவு முளவோ.

(இ-ள்) அன்னபானுதி-உண்பன பருகுவனமுதலியவைகள்—சுக சாதனமதாகையால்-சுகத்திக்குச்சாதனமாகையால்— யார்க்கும் - யாவர்க்கும்—வெகுபிரியமாகும்-மிகுந்தபிரியமாம்—இன்னவாறு- இவ்வண்ணம்— ஆன்மாவும்-ஆத்மாவும்— ஆனந்தசாதனமென்று- ஆனந்தத்துக்குச்சாதனமென்று,கருதல்பொருளல்லவே- நினைப்பதருத்தமல்லவே—சொன்னவான்மாவை - சொல்லியவாத்மஸ்வரூபத்தை— ஒருசுகசாதனங்களொடு- ஓர்சுகசாதனங்களோடுக்கூட—சொல்லுவாயாகில்-சொல்லுவையாகில்—மகனே - மைந்தா—உன்னதானந்தம்- உனதானந்தமானது—வேறு- உன்னைவிடவேறு— அனுபவிப்பதாய்- அனுபவிப்பதாகிய—உபயவான்மாவுமுளவோ- இரண்டாத்மாவுமுண்டோ—எ-று.

(இ-ம்) சாதனமிறந்த சாத்தியமானவிடத்திற் சேடித்த நிரதிசயானந்தம்வேறுபஃதனுபவிக்குமாத்மாவேறுமின்றாதலி னவ்வாத்மாவேயானந்தமாவதன்றியதற்குச்சாதனமாகாதென்பதாம். (௱௰௫)

(அ-கை.) ஆத்மா வானந்தஸ்வரூபமாயி னெதிரிட் டனுபவிக்குமானந்த மஃதாகாதோவெனவரி னஃது விடயானந்தமாதலினாகாவென்பதற்கனுபவங்கூறல்.

விடயசுகமதில்வருதல்பிரியமாத்திரமாகும்வெகுபிரியமான்மாவிலாம், விடயசுகம்வருபிரியமாறிவருமான்மாவில் வெகுபிரியமாறாதகாண், விடயசுகம்விடலுமாங்கொளலுமாமான்மாவை விடுவதெவர்கொள்வதெவர்பார், விடயசுகபோகங்கள்விடுமவனையவனால் விடப்படாதொருநாளுமே,

(இ-ள்) விடயசுகமதில்-விஷயானந்தத்தில்—வருதல்பிரியம் - இன்பமுண்டாதல்,மாத்திரமாகும்-அற்பவனவாம்,ஆன்மாவில்- ஆத்மாவினிடத்தில்,வெகுபிரியமாம்-மிகுந்தபிரியமாகும்,விடயசுகம்-விடயானந்தத்தில்,வருபிரியம்-உதிக்கின்றபிரியமானது,மாறிவரும்-மாறியாயுண்டாகும். ஆன்மாவில்- ஆத்மாவினிடத்துள்ள, வெகுபிரியம்- மிகுந்தபிரியமானது,மாறாதுகாண்-விட்டுநீங்காது,விடயசுகம் - விடயானந்தமானது,விடலுமாம்-விட்டுவிடவுமாம், கொளலுமாம்-கொள்ளவுமாம் ஆன்மாவை- ஆத்மானந்தத்தை,விடுவதெவர்-விடுகின்றவர்யார், கொள்வதெவர்-கொள்ளுகின்றவர்யார்,பார்-நன்றாகப்பார், விடயசுகபோகங்கள்-விடயானந்தானுபவங்களை,விடுமவனை-நீக்கினவவ்வாத்மாவை ஒருநாளும்-எக்காலமும், அவனால்விடப்படாது-அவ்வாத்மாவினால்விடக்கூடாது—எ-று.

(இ-ம்) விடயவின்பங்களனைத்து மாத்மப்பிரிய லேசமாதலி னஃ



துநசித்து மிஃதுநசியாதிருத்தலி னவ்வானந்த மாத்மார்த்தமாகாவெ (௱௰௬)
ன்பதாம்.

(அ-கை) ஆத்மாவானந்தவடிவமாகி னதனிடத்தின் வெறுப்பிருக்
கின்றதேயெனி மங்ஙனமின்றென்பதற்கனுபவங்கூறல்.

வேகின்றகோபங்களாலென்னைநான்கொன்றுவிடுகிறேனென்று
சிலபேர்,சாகின்றபடியினாற்றன்னையேதான்கொன்றுசாவனெனல்சங்
கையலவே, தேகந்தனைக்கொல்லுமவனால்விடப்பட்ட தேகமவனல்ல
ன்மகனே, யாகந்தனிற்கோபமலதுதனையொருநாளு மான்மாவெறு
ப்பதில்லையே.

(இ-ள்) வேகின்றகோபங்களால்-வேகாநின்றகோபங்களால், என்
னை-தன்னை, நான்கொன்றுவிடுகிறேனென்று - நான்கொல்லுகின்றே
னென்று, சிலபேர்-சிலர்—சாகின்றபடியினால்-இறக்கின்றபடியினால்,
தன்னையேதான்கொன்று-தன்னைத்தானே கொலைசெய்துக்கொண்டு-
சாவனெனல்-மரிப்பேனென்பது—சங்கையல- அங்ஙனஞ்சங்கிப்பது
சங்கையன்றால்—தேகந்தனைக்கொல்லும்- உடலைக்கொல்லுகின்ற—
அவனால்-அப்புருடனால், விடப்பட்டதேகம்-நீக்கப்பட்டதேகமானது
அவனல்லன்-அவ்வாத்மாவலனும், மகனே-மைந்தா, ஆகந்தனில்-தே
கத்தில், கோபமலது-சோபம்வந்ததேயல்லாமல்—தனை-ஆத்மாவை—
ஒருநாளும்-எப்போதும், ஆன்மாவெறுப்பதில்லை- ஆத்மாவானவன் வெ
றுப்பதில்லை-எ-று.

(இ-ம்) ஆத்மாதற்பிரியத்திற்குறைவுவாராமற் றேகத்தைநீக்கினதே
யன்றித்தன்னிடத்தில்வெறுப்புண்டானதல்லவென்பதாம். (௱௰௭)

(அ-கை) தனவானந்தமுதலியவானந்தங்களாத்மாவென வருமெ
னிலக்கணமாகாவெனக்கூறி யாத்மானந்தமேமுக்கியமெனக்கூறல்.

தாகப்படும்பொருளிலும்மகன்பிரியமாந்தநயனிலுமுடல்பிரியமா
மாகத்திலும்பிரியமிந்திரியமாங்கரணமதனிலும்பிரியமுயிரா, மேகப்
பிராணனிலும்வெகுபிரியமான்மாவிந்தவான்மாமுக்கிய, மூகத்தினும்
கௌணமித்தைகர்த்த மூன்றுமொன்றினென்றிகமகனே

(இ-ள்) தாகப்படும்பொருளிலும்-பிரியமாகச்சம்பாதிக்குந் தனங்
களினும்—மகன்பிரியமாம்-புத்திரன்பிரியமாகும்— ஆதத்திலும்- அப்
புத்திரனிலும், உடல்பிரியமாம்-தேகம்பிரியமாகும்— ஆகத்திலும்-அ
த்தேகத்திலும்—இந்திரியம்-பொறிகளானவை—பிரியமாம்-பிரியமா
கும், அதனிலும்-அவ்விந்திரியங்களினும்,கரணம்பிரியம்- அந்தக்கர
ணம்பிரியமாம்— அதனிலும்-அவ்வந்தக்கரணங்களினும்—உயிர் - ஜீ
வனனது—பிரியமாம்- பிரியமாகும்—ஏகப்பிராணனிலும் - ஒன்றான
வச்ஜீவனிலும்—ஆன்மாவில்-கூடஸ்தனிடத்தில்,வெகுபிரியம்-மிகுந்த
பிரியமாமாதலால்—சந்தவான்மாமுக்கியம் - இவ்வாத்மாவேமுக்கிய

மாம், மகனே-மைந்தா, ஊகத்தினால்-உத்தியினால்—கௌணம் - கௌணாத்மா, மித்தை-மித்தையாத்மா, கர்த்தா-கர்த்தாத்மாவாகிய, மூன்றும்-மூன்றும், ஒன்றினொன்றதிகம்-ஒன்றினொன்றதிகமாம்—எ-று.

(இ-ம்.) தனமுதலியவாறினும் வைக்கின்றபிரியங் கௌணமெனவுமாத்மப்பிரியமே முக்கியமெனவுங்கூறினதாம். (௱௰௮)

(அ-கை) ஆத்மானந்தமே முக்கியமாயின் புத்திரன் முதலியவைகளாத்மாவெனவு மவைகண் முக்கியமெனவுங்கூறிய தென்னெனவரினதற்குத்தரங்கூறல்.

கெடலானபொழுதிவன்காணிக்குமகனை கௌணவான்மாமுக்கியம்
விடலாதவுடலம்பரிக்குநாளுடலானமித்தையான்மாமுக்கியந்
திடமானநன்மைகதிவேண்டிறுற்கர்த்தனுஞ்சீவவான்மாமுக்கியஞ்
சடமாயமுத்தியினில்ஞானவான்மாவானதானேமகாமுக்கியம்.

(இ-ள்) கெடலானபொழுது-மரணகாலத்தில், இவன்காணிக்கு-இவனுதினத்துக்கு வேண்டிய, மகனை-புத்திரனை, கௌணவான்மா-கௌணாத்மாவே, முக்கியம்-அத்தருணத்துக்கு முக்கியமாம்—விடலாதவுடலம்பரிக்குநாள்-நீக்காததேகத்தைத்தாங்குகின்றநாளில், உடலான-அத்தேகமான, மித்தையான்மா-மித்தையாத்மாவானது, முக்கியம்-அத்தருணத்துக்குமுக்கியமாம். திடமான நன்மைக்கிபலமாகிய நல்லகதியை, வேண்டினால்-விரும்புங்காலத்தில், கர்த்தனுஞ்சீவவான்மா - நானென்னுஞ்சீவாத்மாவானது, முக்கியம் - அத்தருணத்துக்குமுக்கியமாம், சடமாயமுத்தியினில்-திரிசியக்ஷணீங்கிய மோக்ஷத்தில், ஞானவான்மாவானதானே ஞானாத்மஸ்வரூபமாகியதானே, மாமுக்கியம்-மிகவுமுக்கியமாம்—எ-று,

(இ-ம்) புத்திரன்முதலிய மூன்றையு முக்கியாத்மாவென்றது ஒவ்வோர்சமயத்தாதலாற் பூருவபக்ஷமும் ஆத்மாவை முக்கியமென்றதென்று மாதலாற் சித்தாந்தமுமாமென்பதாம். (௱௰௯)

(அ-கை) விருப்புமுதலிய மூன்றுநீங்கிய வாநந்தமே யாத்மஸ்வரூபமாமெனல்,

புலியுமனுகூலமெனிலிட்டமாம்பகைசெயிற்புதல்வனெனினும்
வெறுப்பா, முலகிலிருவகையுமல் லாதபுல்லாதியி லுதாசினமாமாதலான், மலினமதுவின்மயன் பல்வகையுமிப்படி மகிழ்ச்சியில்விருப்பமிகழா, னலகிலானந்தவடிவாகுமென்சொருபத்தை யாராய்ந்துபார் மைந்தனே.

(இ-ள்) புலியும்-வியாக்கிரமமும்—அனுகூலமெனில் - அனுகூலஞ்செய்யுமாயின்—இட்டமாம்-சிநேகமாகும்—புதல்வனெனினும்-புத்திரனாயினும்—பகைசெயில்-பகைக்கின்—வெறுப்பாம்- துவேஷமாம்—உலகில்-பூமியின்கண்—இருவகையுமல்லாத- இவ்விரண்டுமல்லாத—புல்லாதியில்-திரணமுதலியவைகளில்—உதாசினமாம் - உபேக்ஷையாம்—ஆதலால்-ஆதலினால்—மலினமறு- களங்கமற்ற—சின்மயன்-ஞானஸ்வரூபனானவன்—பல்வகையும்-நாநாவிதத்திலும்—இப்படி-இவ்வண்ணம்—மகிழ்ச்சியில் - ஆத்மானந்தத்தில்—விருப்பமிகழான்-பிரியத்தைநீங்கான்—அளவில்-அளவற்ற— ஆனந்தவடிவாகும்-பிரமானந்தஸ்வரூபமாகிய—உன்சொரூபத்தை- உனதாத்மஸ்வரூபத்தை—மகனே-மைந்தா— ஆராய்ந்துபார்- ஆராய்ந்தறிவாய்—-எ-று.



(இ-ம்) விருப்பு வெறுப்பு வுதாசீனமாகிய மூன்றுமாத்மசுகத்திற்கு மாறுபடா திருத்தலினனுமாறுபடுதலினனு மிவைகளின் நியவச்சுக மாத்மஸ்வரூபமாமென்பதாம், இஃதுமேற்கூறும் அவ்விதானந்தமே யாத்மஸ்வரூபமாமென்பதாம். இஃதுமேற்கூறும் அஷ்டவிதானந்தத்தொன்றான ஆத்மானந்தமெனக்கொள்க.

(அ-கை) ஆத்மா திசயானந்தமென்ப தனுபவமாய்ப்பொருட்டு திசயானந்தமெண்விதமாகக்கூறுவான் முட்டிய னந்தமெத்தனை வகையென்றவினாவிற்குத்தரங்கூறல். (௱௨௰)

மானஞ்சிறந்தகுருநாதனேயானந்தவகைகளெத்தனையெவ்வினிலோ, ஞானந்திகழ்ந்தபிரமானந்தம்வாசனானந்தம்விடயானந்தமென், றானந்தமூன்றுவிதமெட்டுவகையென்பர்சில ரவ்வைந்துமிதிலடக்கம், யானந்தவகைசொலக்கேண்மைந்தனேயெட்டுமிஃதின்னதின்னதெனவே.

(இ-ள்) மானஞ்சிறந்த-பெருமைமிகுந்த—குருநாதனே- தேசிகோத்தமனே—ஆனந்தவகைகள்- ஆனந்தப்பிறிவுகள்—எத்தனையென்னில்-எவ்வளவென்றுகேட்பாயாகில்—ஞானந்திகழ்ந்த-சித்துவிளங்கிய—பிரமானந்தம்-பிரமானந்தமெனவும்—வாசனானந்தம்-வாசனானந்தமெனவும்—விடயானந்தமென்று- விஷயானந்தமெனவும்—ஆனந்தம்-ஆனந்தமானது—மூன்றுவிதம்-மூன்றுவிதமாம்—சிலர்- சில பெரியோர்கள்—எட்டுவிதமென்பார்-அஷ்டவிதமென்றுஞ்சொல்லுவார்கள்—அவ்வைந்துமிதிலடக்கம்-அவ்வைந்துமிம்மூன்றிலடக்கமாம்—எட்டும்-அஷ்டவிதானந்தமும்—இஃதின்னதின்னதென- இஃதின்னதின்னதென்று—யானந்தவகைசொல நானப்பகுப்பைச்சொல்ல—மைந்தனே-மகனே—கேள்-நீகேள்—எ-று.

(இ-ம்) பிரமானந்தத்தில் ஆத்மானந்தமும் முக்கியானந்தமும் நிசானந்தமும் அத்துவிதானந்தமும் ஞானானந்தமுமான வைந்து மடங்கியிருக்கின்றதென்பார் அவ்வைந்து மிதிலடக்கமென வொருமையாகக்கூறினர். (௱௨௧)

(இ-ம்) ஆனந்தத்தின்வகைமுக்கியபட்சமூன்றெனக்கூறினதாம்

(அ-கை) அவ்வஷ்டவிதானந்தத்தின்வகைகூறல்.

போகத்தில்வருசுகம்விடயசுகநித்திரைப்போதுளதுபிரமசுகமா
மோகத்தனந்தலிற்சுகம்வாசனைச்சுகமுழுப்பிரியமான்மசுகமாம்
யோகத்திலுளதுமுக்கியசுகமுதாசினமுற்றசுகநிசசுகமதா
மேகத்தைநோக்கலத்துவிதசுகம்வாக்கியமெழுந்தசுஞானசுகமே.

(இ-ள்) போகத்தில்வருசுகம்- போகங்களில்வருகின்ற வானந்தம் —விடயசுகம்-விடயாநந்தமாம், நித்திரைப்போதுளது-சுழுத்திகாலத்துள்ளவாநந்தம், பிரமசுகமாம்-பிரமாநந்தமாம், மோகத்தநந்தலிற்சுகம்-மயக்கமாகியநித்திரைதெளிந்துவருஞ்சமயத்துள்ளவானந்தம் வாசனைச்சுகம்-வாசனாநந்தமாம், முழுப்பிரியம்-முழுதுஞ்சுகமாயிருத்தல், ஆன்மசுகம்- ஆத்மாநந்தமாம்,யோகத்திலுளது- சமாதியிலுள்ள சுகம்,முக்கியசுகம்-முக்கியாநந்தமாம், உதாசீநமுற்றசுகம்-உதாசீநத்திலுள்ளவாநந்தம்,நிசசுகமதாம்-நிசாநந்தமாம், ஏகத்தைநோக்கல் பூரணதிருஷ்டியிலுள்ளசுகம்,அத்துவிதசுகம் - அத்துவிதாநந்தமாம், வாக்கியமெழுந்தசுகம்-மகாவாக்கியார்த்தத்திலுதயமாநவாநந்தம்,ஞானசுகம்-வித்தியாநந்தமாம்-எ-று.

(ப-ம்) ஞேபத்திலிருக்குமின்பமென்பார் போகத்தில்வருசுகமெனவும் நனவிற்சுழுத்தியிலுள்ளது பிரமசுகமென்பார் நித்திரைப்போதுளது பிரமசுகமெனவுங்கூறினர்

(இ-ம்) சுருக்கமான வருத்தத்துடனவ்வாநந்தங்களினுமங்களைக்கூறினதாம். (௱௨௨)

(அ-கை) அவற்றில்விடயானந்தவிலக்கணங்கூறல்,

இவ்வாறுரைசெய்தசுகபேதங்களினியல்பாமவைசொலமகனேகே
ளெவ்வாநனவினிலுழல்வானிடர்கெடவுறங்குஞ்சயநத்திலுறுநேரம்
செவ்வாமனமகமுகமாமதிலொளிர்சித்தின்சுகநிழல்சேருங்கா
ணவ்வாறிவனுளமகிழ்வாமனுபவமதுதான்விடயசுகாநந்தம்,

(இ-ள்) இவ்வாறு-இந்தப்பிரகாரம்—உரைசெய்த-சொல்லிய—சுகபேதங்களின்-ஆநந்தவேறுபாடுகளின்—இயல்பாமவைசொல-இயல்பாந்தன்மைகளைச்சொல்ல—மகனேகேள்- மைந்தாகேட்பாய்—எவ்வா-இன்பம்பொருந்தாத—நனவினில்- சாக்கிரத்தில்-சுழல்வான்-சுழல்பவனுடைய—இடர்கெட-துன்பம்நீங்கும்பொருட்டு,உறங்குஞ்சயநத்திலுறுநேரம்-படுக்கையினித்திரைசெய்யுஞ் சமயத்தில்—செவ்வாமனம்-செவ்விதானமனமானது—அகமுகமாம்- அகமுகப்படும்,அதில்-அம்மனத்தில்—ஒளிர்- பிரகாசிக்கின்ற—சித்தின்சுகநிழல்-சிதாநந்தசாயையானது—சேருங்காண்- சேரும்—அவ்வாறு-அவ்வண்ணம்—இவனுளம்-இவன்மனமானது—மகிழ்வாமனுபவம்-மகிழ்ச்சியாகுமனுபவமான—அதுதான்-அதுவே—விடயசுகானந்தம்-விடயானந்தமாம்—எ-று.



(ப-ம்) அறிவறியாமையிற்சுழலும் பவத்துன்ப நீங்கும்பொருட்டுச் சமாதியினகமுகமாய்மனஞ்சித்தைத்தரிசிக்கிற் சித்சுகமுண்டாகுமெ ன்பார் நனவினிலுழல்வானிடர்கெடவுறங்குஞ்சயனத்திலுறுநேரஞ் செவ்வாமனமகமுகமா மதிலொளிர்சித்தின்சுகநிழல் சேருங்காணென வும்அங்ஙனமகிழ்தல் ரூபானந்தமென்பார் அவ்வாறிவனுளமகிழ்வா மனுபவமதுதான்விடயசுகானந்தமெனவுங் கூறினர்

(இ-ம்) சமாதியிலகமுகமாகச்சென்றறியுமிடத்துண்டானதுபிரம சுகமாயினுமஃதை யெதிரிட்டறிந்துமனமகிழ்தலி னச்சுகம்விடயா னந்தமாயிற்றென்பதாம், (௱௨௩)

(அ-கை) பிரமானந்த விலக்கணங்கூறல்,

ஈனந்தருசுகவிடயந்திரிபுடியிடராமெனமனமசையாமற்
சேனந்தனதகுலாயந்தனில்விழுசெயல்போனித்திரைசெறிசிவன்
ஞானந்தமில்பரனுடனொன்றுவனொருதனையல்லதுபிறநினையாம
லானந்தமயமாவன்சுகமிதுமதுகானுயர்பிரமானந்தம்.

(இ-ள்) ஈனந்தரு-குறைவைக்கொடுக்கின்ற, சுகவிடயம்-விஷயசுகமானது, திரிபுடியிடராமென - திரிபுடியானதுன்பமாமென்று,மனமசையாமல்-மனஞ்சலியாமல்,சேனம் - பருந்தானது,தனதகுலாயந்தனில்-தனதுகூட்டில்,விழுசெயல்போல்- அடங்குந்தொழிலைப்போல நித்திரைசெறிசிவன்- நித்திரைசெய்கின்றசீவனானவன், அந்தமில்-முடிவிலாத,பரனுடனொன்றுவன் - பிரமத்தோடுங்கூடுவன்,ஒருதனையல்லது-ஒப்பற்றதன்னையல்லாமல், பிறநினையாமல்-வேறுகருதாமல்-ஆனந்தமயமாவன் - ஆனந்தாகாரமாவன்,சுகமிதுமதுதான்-சுகமிருந்தவவ்வானந்தமே,உயர்பிரமானந்தம்-மேலானபிரமானந்தமாம்—எ-று,

(ப-ம்) பிரமத்தையெதிரிட்டறியின் அறிபவன்-அறிவு அறிபொருளென மூன்றுமதனாற் றுன்பமாமென்பார் ஈனந்தருசுக விடயந்திரிபுடியிடராமெனவும் மனதையடக்கிச் சொரூபசமாதி செய்கின்றவாத்மா பிரமத்திற் கலக்குமென்பார் மனமசையாம னித்திரைசெறிசீவன் ஞானந்தமில்பரனுடனொன்றுவனெனவும் அங்ஙனம்பிரமத்திற்கூடிய வாத்மாவப்பிரமானந்தமாக வானந்திப்பானென்பார் ஒருவனையல்லது பிறநினையாமலானந்தம் பயனுவனெனவும் இஃதேபேரானந்தமென்பார் சுகமிருமதுதானுயர்பிரமானந்தமெனவுங்கூறினர் - நித்திரையென்பதறிதுயிலெனக்கொள்க.

(அ-கை)(இ-து)

தூங்குஞ்சுகமதுபிரமச்சுகமெனல் சுருதிப்பொருள்விழிதுயில்வோர்க
டாங்கும்பலவுணர்வன்றுகச்சிலர்சம்பாதிப்பதுதானசுகந், தீங்குந்நன்மையுமாண்பெண்முறைமையுந்தெரியாதமளிசெய்பொழுதேபேரலாங்குள்வெளிகளுமறியாவனுபவமதனு லதுபிரமானந்தம்.

(இ-ள்) சுருதிப்பொருள் - வேதமுடிவானமகாவாக்கியார்த்தத்தில்

தூங்குஞ்சுகமது-அறிதுயிலுபயமானவானந்தமானது, பிரமச்சுகமெனல்-பிரமானந்தமென்றுகொள்ளல், விழிதுயில்வோர்கள்-நித்திரை செய்பவர்கள், தாங்கும்மலரணை-தாங்காநின்றபுஷ்பசயனத்தை, நன்றாகநல்லதாக, சிலர்-சிலபேர்கள், சம்பாதிப்பது-சேகரிப்பது, தானசுகம் ஸ்தானசுகமாம், தீங்கும்-தீமையும், நன்மையும்-நன்றும், ஆண்பெண் முறையையும் - ஆண்பெண்ணென்கிறமுறைமையையும், தெரியாது-அறியாமல், துயில்செய்பொழுதேபோல்-நித்திரைசெய்கின்ற காலத்தைப் போல, ஆங்கு - அவ்விடத்து, உள்வெளிகளுமறியா- உட்புறங்களுமறியாத, அனுபவமதனால்-சுவானுபவமாதலால், அதுபிரமானந்தம்-அவ்வறிதுயிற்பிரமானந்தமாம்—எ-று (௱௨௫)

(ப-ம்) வேதமுடிவான மகாவாக்கியார்த்த வுபதேசத்தில்லாமிக்கும் யோகநித்திரையே பிரமானந்தமென்பார் தூங்குஞ்சுகமது பிரமச்சுகமெனல் சுருதிப்பொருளெனவும், அங்ஙனஞ்சமாதியடைதற்குச்-சாதனமானஞானபூமிமுதலியவைகளைப்பெற்றேகாந்தமாயிருந்தசேயிடமென்பார் துயில்வோர்கடாங்குமலரணை நன்றாகச்சிலர்சம்பாதிப்பது தானசுகமெனவும், அகம்புறமின்றிப்பரிபூரணமாக விளங்கும் போதுள்ளசுகமேபிரமானந்தமென்பார்உள்வெளிகளுமறிடாவனுபவமதுவேயுயர்பிரமானந்தமெனவுங்கூறினர்.

(இ உ-க-ம்) சுழுத்தியைப்போலச்சமாதியில்சமுகமாயாத்மாபிரமத்திற் சேர்ந்ததன்மயமாய்ச் சுகத்தையநுபவித்தலினஃதுபிரமானந்தமாயிற்றென்பதாம்.

(அ-கை.) சித்திற்சுகம்விளங்கு மனுபவந்தெரிவான் அறிவின்றியவானந்தமறிவிலெங்ஙனந்தோற்றுமென்றிடையின்வினாதல்

உதவுப்புவியினிலொருவன்னனுபவ மொருவன்மனதினிலுதியாதே
மதியுங்கெடுகிற துயில்கொண்டானந்தமயனன்றோசுக முறுகின்றான்
இதுவிஞ்ஞானமயனுஞ்சிந்தையினினைவாய்வந்திடுமெனல்கண்டேன்
சுதைவிண்ணோர்புகழ்குருவேநீரிதுசொல்லீர் சகலமும்வல்லீரே.

(இ-ள்) உதவுப்புவியினில்-முத்திக்குச்சகாயஞ்செய்யுமிப்பூமியில், ஒருவனனுபவம்-ஒருவனுக்குதிக்குமனுபவமானது, ஒருவன்மனதினில் - வேறொருவன்மனதில், உதியாதே - உண்டாகாதே, மதியுங்கெடுகின்ற-அறிதலுமிறக்கின்ற, துயில்கொண்டு-போகநித்திரையைக்கொண்டு, ஆனந்தமயனன்றோ - ஆனந்தாகாரனல்லவா, சுகமுறுகின்றான் - பரமசுகத்தையடைகிறான், இது - இச்சுகமானது - விஞ்ஞானமயனும் - விஞ்ஞானவடிவமாகி, சிந்தையில் - மனதில், நினைவாய்வந்திடுமெனல்- நினைவாகவருமென்பது, கண்டேன்-அறிந்தேன் - (இஃதெதனைக்கூடும்) சுதைவிண்ணோர்புகழ் - அமிர்தபானஞ்செய்யுந்தேவர்கடுதிக்காநின்ற, சகலமும்வல்லீர்-சமஸ்தவல்லமையயுமுள்ள, குருவே தேசிகரே-நீர் நீவிர்—எ-று.



(௱௨௬)

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) அவ்வினாவிற்குத்தாங்கூறல்.

நெய்யும்வெண்ணெயுமிருபேர்களுமறி நினைவிற்பிரிவறிவினிலில்லை
செய்யுந்நனவினிலிறதுமனதொடு சேருஞ்சின்மயவிஞ்ஞானன், நை
யுந்துயர்மனமுழுவும்பொழுதுணர் ஞானச்சுகமுறுமானந்தன்,பெ
ய்யுந்துளிகளுநீருங்குளமொடு பாருங்கூபாலிவர் பிரிவன்றே

(இ-ள்) நெய்யும்வெண்ணெயும் - நெய்யென்பதுவும்வெண்ணெயென்பதுவுமாகிய, இருபேர்களும் - இரண்டுநாமங்களும், அறிநினைவிற்பிரிவு-நாமரூபமாகவறிகின்றமனதிற்பேதமேயன்றி, அறிவினிற்பிரிவில்லை- அவற்றின்சுவையைக்கொள்ளுகின்ற வறிவினிலில்லை, செய்யுநனவினில்-கிரியையைச்செய்கின்றசாக்கிரத்தில், இறுகும்மனதொடு,ஸ்திரமானமனதோடும், சேரும்-சேருகின்ற— சின்மயவிஞ்ஞானன் - சின்மாத்திரமான விஞ்ஞானமயனும், நையுந்துயர்மனம்-வருந்துகின்றதன்பமுள்ளமனது, மழுவும்பொழுது-நீங்குங்காலத்தில், உணர்ஞானச்சுகம்-அறிகின்றஞானானந்தத்தை, உறுமானந்தன்-அனுபவியாநின்றவானந்தமயனுமாகிய, இவர்-இவர்கள், பெய்யுந்துளிகளு நீரும் - பொழியாநின்றவிந்துவுஞ்சலமும், குளமொடுபாருங்கூபோல குளமும்பூமியையும்போல, பிரிவன்று-வேறல்லர்—எ-று.

(ப-ம்) அறிவிறந்துதிக்குமானந்தந்தெளிவாகவிளக்குதலினானுமானந்தத்திலின்றுதிக்குமறிவுசுகமாயிருத்தலினாலுமிச்சிற்சுகமனுபவத்திலொன்றாதலினறிவில்வருமென்பதாம் இஃதைக்குருமுகமாகச் செய்யுஞ்சகசநிட்டையிற்காண்க. (௱௨௭)

(அ-கை) அங்ஙனமாயின் பிரமானந்தமயமாகநின்றுவிடாமலறிவில்வருவானேனென்றவினாவிற்குத்தாமும் வாசனாநந்தவிலக்கணமுங்கூறல்,

ஒன்றாகியபிரமானந்தன்சுக மொழிவானேன்வெளிவருவானேன்
முன்முன்செய்த கருமம்வெளியினி விழுக்குஞ்சுழுத்திவிட் டெழுந்
தோனு,நன்றாயினசுகமகலான்வெளியிலுநடவான்மறதியும்பெறமா
ட்டான்,அன்றேமனவிருந்தறங்குஞ்சிலகன்மமதுவேவாதனையானந்தம்

(இ-ள்) ஒன்றாகியபிரமானந்தன் - ஏகமாகியபிரமானந்தன், சுகமொழிவானேன், தனதானந்தத்தைநீங்குவானேன், வெளிவருவானேனென்றால்-வெளிப்படுவானேனென்றுகேட்கில், முன்செய்தகருமம்-முன்னஞ்செய்தகிரியையானது, வெளியினிழுக்கும் -வெளியினிற்கொண்டுவரும், சுழுத்திவிட்டு -சுழுத்தியினின்று,எழுந்தோனும்-வெளிப்பட்டவனும், நன்றாயினசுகமகலான்- நன்மையானசுகத்தைநீங்கான், வெளியிலுநடவான் - கிரியத்திலும்வாரான், மறதியும்பெறமாட்டான்-மறதியையுமடையான், அன்றேமெனவிருந்த, அல்லவெனவுமாமெனவுநின்று, உறங்கும்- நித்திரைசெய்கின்ற, சிலகன்மம்-சிலகன்

(இ-ம்) மனுடானந்தமுதலிரணியகருப்பானந்தவரையிலுள்ள வா நந்தங்கள் ஞானவானந்தத்தின் லேசங்களாமெனக்கூறினதாம்.

(அ-கை) முற்கூறியவானந்தமே யதீசமாமெனல்,

எவனுவிலுமிந்தத்துரியாதீதத்திலேழாம்பூமியிலிருந்தானே
லவனாரதன்சுகன்சிவன்மாலயன்முதலறிவோரனுபவசுகபோதம்
விவகாரதிர்சியமிதுவேயனுபவமென முன்சொல்லியவிவகாரி
யுவமானமுமறிமகனேயவனடியுதிரும்பொடிகளென்முடிமேலே.

(இ-ள்) எவனுவிலும்-யாவனானாலும், இந்த-இந்த, துரியாதீதத்திலே ழாம்பூமியில்-துரியாதீதமென்னுமேழாம்பூமியில், இருந்தானேல் - இ ருந்தானுவில்—அவன்-அப்புருடன், சிவன்மாலயன்-அரனரியயனெ ன்னுமும்மூர்த்திகளுக்கும்—நாரதன்சுகன்முதல்-நாரதர்சுகர்முதலி ய—அறிவோர்-அறிஞருக்குமுள்ள—அனுபவசுகபோதம்- சுகானு பவமாகியவானந்தபிரஞ்ஞைபாவன்—விவகாரதிர்சியம்- விவகாரங்க ளிற்றிரிசியதிஷ்டியில்லாத—இதுவேயனுபவமென இதுவேசுவானுப வமென்று—முன்சொல்லிய-முன்னேசொல்லியிருக்கின்ற—விவகா ரி விவகாரியின்—உவமானமுமறி திஷ்டாந்தமுந்தெரிவாய், மகனே- மைந்தா— அவனடி-அவ்வனுபவியினுடையபாதத்தில்,உதிரும்பொ டிகள்-உதிராநின்றதூள்களானவை, என்முடிமேல்-எனதுசிரசின்மே லிருக்கின்றன-எ-று.

(இ-ம்) துரியாதீதத்தைபடைந்தவன தமகிமையைக்கூறினதாம்.

(அ-கை) சச்சிதானந்த விலக்கணங்கூறியின்னுஞ் சந்தேகமுள தேற்கேட்பாயெனல்.

இந்தவாறைந்துசுகஞ்சொல்லினேம்வித்தைசுகமினிமேற்சொல் வோ, முந்தைமாயையுஞ்சச்சி தானந்தப்பொருளுமே மொழியும் போதி, லந்தமாமத்துவிதசுகமான்மசுகமிரண்டு மங்கேசொன்னேந் தொந்தமாற்றியமகனே யின்னமுனக்கையமுண்டேற் சொல்லுவா யே.

(இ-ள்.) இந்தவாறு-இவ்விதம்—ஐந்துசுகஞ்சொல்லினேர், ஐந்து விதவானந்தத்தையுரைத்தோம்—வித்தைசுகம்-ஞானந்தத்தை,இனி மேற்சொல்வோம்—இனிமேலுரைப்போம்,முந்தை - முன்—மாயை யும்—மாயாரூபத்தையும்,சச்சிதானந்தப்பொருளும்-சச்சிதானந்தபர் வேதமுடிவான— மொழியும்போதில் - சொல்லுமிடத்தில்—அந்தமாம்- அத்துவிதசுகம்- அத்துவிதானந்தமும்— ஆன்மசுக ம்-ஆத்மாநந்தமுமாகிய—இரண்டும்- இரண்டானந்தத்தையும்—அங் கேசொன்னேம்-அவ்விடத்திலுரைத்தோம்—தொந்தமாற்றிய-துவந் துவங்களைக்கெடுத்த—மகனே-மைந்தா. இன்னம்-இன்னமும்—உன க்கையமுண்டேல்-உனக்குச்சந்தேகமுண்டானால்—சொல்லுவாய்-



(ரகூ)

கேட்பாய்—எ-று,

(இ-ம்.) வெளிப்படை.

(அ-கை) ஆத்மா சச்சிதானந்தஸ்வரூபமெனத்தெரிந்த மகனுஞ் சுருதி யுத்தியனுபவங்க ளையான ஸ்வானுபூதிவெளிப்படுமிந்தஞ் மையைத்தெரிய வினவல்.

ளுக் கொத்திருக்கு மவற்றிரெரருமையைத்தெரிய விளுகல். குருவேகேளீர் குகன்றனையுமெனையு முலகினையுமீன் றளித்தருளுங் குருவேகேளீர் புகன்றசச்சிதானந்தப்பதங்கட்டனித்தனியாயேபொருள்வேருறு மகண்டமனமுறைப்பதெங்ஙன் பரியாயபதங்களைப்போ லுறவுங்கா ணேமகண்டமாயொருசுவையாய்த்தேனீக்கூட்டியமதுவா வறிவிப் பீரே.

(இ-ள்) குகன்றனையும்-குமாரனையும்,எனையும்-என்னையும், உலகினை யும்-சகங்களையும்—ஈன்று-சிருட்டித்து, அளித்தருளும்-ரட்சித்தருளு கின்ற,குருவே-இறைவனே, கேளீர்-கேட்பீராக, புகன்ற-முன்சொ ல்லிய, சச்சிதானந்தபதங்கள் - சச்சிதாநந்தமென்னும்பதங்களான வை,தனித்தனியாய்-வெவ்வேறாய்,பொருள்வேருனல் - அருத்தமும் வேறுபடுமானால், உகண்டமனம்-விடயங்களிற்பாயாநின்ற மனமான து,உறைப்பதெங்ஙன்-ஸ்திரமாய்நிற்கின்றதெப்படி, பரியாயபதங்க ளைப்போல்-பரியாயநாமங்களைப்போல,உறவுக்காணேன்-சம்பந்தமு ந்தெரிகிலனாதலால்,அகண்டமாய்-கண்டிதமில்லாததாய்,ஒருசுவையா ய்-ஏகரசமாய்,தேனீக்கூட்டியமதுவா - தேனீக்களாற்கூட்டப்பெற்ற தேனைக, அறிவிப்பீர்-தெரிவிப்பீர்-எ-று. (ரகுச)

(அ-கை) சச்சிதாநந்தவொருமையைச் சுருதிப்பிரமாணத்தாற் கூ றுவான்றொடங்கி யவற்றின்காரணமுமொருமையுங்கூறுகின்றார்,

குளிரிளகல்வெண்மையென்றபதங்களினீர்மூன்றுகூறுமிற்றே சொளிதவனஞ் செம்மையென்ற பதங்களாலக்கினியு மொருமூன்றா மோ, வெளிமுதலாஞ்சகமசத்துமூடமிடமெனப்பிரித்துவிலக்கிவேத மெளிதறியமுரண்மொழித்தசத்தாதியெனும்பிரமமேகந்தானே.

(இ-ள்) குளிர்-குளிர்ச்சியும்,இளகல் - நெகிழ்ச்சியும்—வெண்மை யென்ற-வெள்ளையுமெனச்சொல்லிய, பதங்களினல்-சொற்களினல்— நீர்-சலமானது,மூன்றுகூறுமிற்றோ-மூன்றுபிரிவானதோ,ஒளி-பிரகா சமும், தவனம் - சூடும், செம்மையென்ற-சிவப்புமெனச்சொல்லிய, பதங்களால்- சொற்களினல், அக்கினியும்-நெருப்பும், ஒருமூன்றுமோ மூன்றுபிரிவாகுமோ,(அவைபோல) வெளிமுதலாஞ்சகம்- ஆகாயமு தலானவுலகத்தை, அசத்து - அனுர்தமெனவும்,மூடம்-சடமெனவும் இடமென - துக்கமெனவும்,பிரித்துவிலக்கி - வேறுபடுத்திநீக்கி,வேத ம்-சுருதியானது, எளிதறிய- பக்குவிகளெளிதிலுணர,முரண்மொழி ந்த - அவற்றிற்கெதிராகச்சொன்ன, சத்தாதியெனும்- சச்சிதாநந்த மென்னும்,பிரமம் -பிரமமானது,ஏகந்தான்-ஒன்றேயாம் எ-று.

(இ-ம்) சகத்ஜதயனுஞ் சசடகக்கமெனக்கண் டதனை நீக்குதற்காகக் குறித்தநாமஞ் சச்சிதாநந்தமெனவு மதனருத்தமொன்றே பிரமமெனவுங்கூறினதாம். (௱௯௫)

(அ-கை) சச்சிதாநந்தமொருமைபென்ப தறதிப் படுநிமித்தம்வேதமொருமையாகச்சொல்லியபரிய யநாமங்களில்விதிநாமங்கூறல்,

நித்தியம்பூரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதானஞ்சாந்தஞ்,சத்தியங்கேவலந்துரியஞ் சமந்திருக்குக்கூடஸ்தன் சாட்சிபோதஞ், சுத்தமிலக்கியஞ்சநாதனஞ்சிவன் றத்துவம்விண் சோதியான்மா - மூத்தம்விபுசூக்குமமென் றிவ்வண்ணம்விதிகுணங்கண்மொழியும்வேதம்.

(இ-ள்) நித்தியம் - நித்தியமெனவும், பூரணம்-பூர்ணமெனவும், ஏகம்-ஏகமெனவும், பரமார்த்தம் -பரமார்த்தமெனவும், பரப்பிரமம்-பரப்பிரமமெனவும், நிதானம் -நிதானமெனவும், சாந்தம்-சாந்தமெனவும் — சத்தியம் - சத்தியமெனவும் — கேவலம் - கேவலமெனவும் — துரியம்-துரியமெனவும், சமம் - சமமெனவும், திருக்கு-திருக்குவெனவும், கூடஸ்தன்- கூடஸ்தனெனவும், சாட்சி-சாட்சியெனவும், போதம்-போதமெனவும், சுத்தம் - சுத்தமெனவும், இலக்கியம்-லட்சியமெனவும்; சநாதனம் -சநாதனமெனவும், சிவன் -சிவனெனவும், தத்துவம்-தத்துவமெனவும்; விண் - விண்ணெனவும், சோதி- சோதியெனவும், ஆன்மா - ஆத்மாவெனவும், மூத்தம் - மூத்தமெனவும், விபு-விபுவெனவும், சூக்குமமென்று சூக்குமமெனவும், இவ்வண்ணம்- இந்தப்பிரகாரம் விதி விதியால், குணங்கள்-குணப்பரியாயநாமங்களை, வேதம்- சுருதிகள், மொழியும்-சொல்லும்-எ-று.

(இ-ம்) நிதானம்-ஆதிகாரணம் சநாதனம்-அநாதி. (௱௯௬)

(அ-கை) விலக்குநாமங்கூறல்,

அசலநிரஞ்சனமமிர்தப்பிரமேயம் விமலம்வசனாதீத
மசடமநாமயமசங்கமதுலநிரந்தரமணுநிருபாகண்ட
மசமனந்தமவிநாசிநிர்க்குணநிஷ்கனிரவயவமநாதி
யசரீரமவிகாரமத்துவிதமெனவிலக்குநாமமுண்டே.

(இ-ள்) அசலம்-சலனமின்மையும், நிரஞ்சனம்- அஞ்ஞானமின்மையும், அமிர்தம் - மிருதமின்மையும், அப்பிரமேயம், பிரமேயமின்மையும், விமலம் - மலினமின்மையும், வசனாதீதம் - வாக்குக்கெட்டாமையும், அசடம் - சடமின்மையும், அநாமயம் - ஆமயமின்மையும், அசங்கம் - சங்கமின்மையும், அதுலம் - துலமின்மையும், நிரந்தரம்- அந்தரமின்மையும், அணு - அணுவின்மையும், நிருபம்- ரூபமின்மையும், அகண்டம் - கண்டமின்மையும், அசம்-பிறப்பின்மையும், அனந்தம்- அந்தமின்மையும், அவிநாசி-நாசமின்மையும், நிர்க்குணம்-குணமின்மையும், நிஷ்களம் - சகளமின்மையும், நிரவயவம்-அவயவமின்மையும், அநாதி -ஆதியின்மையும், அசரீரம்-சரீரமின்மையும், அவி



காரம் - விகாரமின்மையும், அத்துவிதம் - துவிதமின்மையும், என - என்று சொல்லப்பட்ட, விலக்கும்-விலக்குநாமங்களும், அநேகமுண்டு அநேகமுள்ளனவாம்-எ-று,

(இ-ம்) அப்பிரமேயம் - அறியப்படாதது - அநாமயம்-நோயில்லாதது - அதுலம்-கனமில்லாதது, நிரந்தரம்- இடையில்லாதது-நிரவயவம் அவயவமில்லாதது, அசம்-பிறப்பில்லாதது. (௱௯௭)

(அ-கை) இவ்விதிவிலக்குநாமங்களினொருமைகூறல்,

இன்னவகைவிதிவிலக்குக் குணங்கணன்றாச்சேர்ந்தொருமித்தெல்லாங்கூடச்,சொன்னபொருளொன்றன்றியிரண்டில்லையொருபொருளைச்சொல்லுஞ்சொற்கள் , பின்னபதமாமதனாற்சத்தாதிகுணப் பொருளாப்பிரமமேக,மன்னபொருளொருமையறிந்தகண்டபரிபூரணமாயாவாய்நீயே.

(இ-ள்) இன்னவகை- இத்தன்மையாக- விதி-விதியும்-விலக்கு-விலக்குமாகிய- குணம்-குணங்கள் நன்றாகச்சேர்ந்தொருமித்து-நன்றாகச்சேர்ந்தொன்றுபட்டு-எல்லாங்கூடி-அனைத்துங்கூடி - சொன்னபொருள்- சொல்லியவருத்தம்-ஒன்றன்றி- ஏகமேயன்றி- இரண்டில்லை- துவிதமில்லை, ஒருபொருளை ஏகவஸ்துவை,சொல்லுஞ்சொற்கள்-உரைக்கும்வசனங்கள்,பின்னபதமாம்-வெவ்வேறுசொற்களாம், அதனால்- ஆதலினாலே, சத்தாதிகுணம்-சச்சிதானந்தமென்னுங்குணப்பதங்கட்கு, பிரமமேகம் - பிரமமொன்றேபொருளாம், அன்ன - அத்தன்மையதான பொருளொருமையறிந்து - அருத்தத்தினொருமையைத்தெரிந்து, அகண்டபரிபூரணமாய்-அகண்டமானபூரணஸ்வரூபமாக, ஆவாய்நீ- நீயாகுவாய்-எ-று.

(இ-கு-க-ம்) இவ்விதிவிலக்குநாமங்கள்பலவாயினுமதனாலுணர்த்தப்படும்பொருளொன்றாதல்போலச்சச்சிதானந்தமென்னும்பதங்கண்மூன்றாயினுமஃதுணர்த்தப்படும்பொருளொன்றெனவத்துவிதவஸ்துவேயாம். (௱௯௮)

(அ-கை) குணாதீதமானவஸ்துவிற்குக்குணங்கூறலாமோவென்பதற்குத்தரங்கூறல்.

நிர்க்குணவஸ்துவிற்குணங்களுரைப்பதுதாய்மலடியெனநிகரென்றே, சற்குணனேவஸ்துநிலையுரையாமலறியவல்லசதுரருண்டோ,நற்குணவேதங்களிந்தச்சிவன்முத்திபெறப்பிரமஞானந்தோன்றச்,சொற்குணங்கள்பிரமத்தின்குணங்களல்லபிரமமாஞ்சொரூபந்தானே,

(இ-ள்) நிர்க்குணவஸ்துவின்-குணாதீதமானபிரமவஸ்துவிற்கு குணங்களுரைப்பது- இத்தன்மையான நாமங்களைச்சொல்லுவது, தாய்மலடியெனல்-மாதாவந்தியென்பதற்கு,நிகரென்றே -சமானமென்று சொல்லாதே-சற்குணனே-சற்குணமுள்ளவனே,வஸ்துநிலையுரையாமல் - வஸ்துநிச்சயத்தைதபாசிரியர்சொல்லாவிடில், அறியவல்ல- தானேதெ

தவவத்தையாமெனவும்இருந்ததேயறிவென் னுமனுபவங்கொண்டில்
லாததை நீக்குவாயென்பார் குதர்க்கவிகற்பங்களை விட்டொழிந்திட
யெனவுங்கூறினர்.

(இ-உ-க-ம்) இருந்ததுவிளங்குதலிற் சத்தேசிக்கெனவும் விளங்குவ
தேயிருத்தலிற் சித்தேகசத்தெனவும் இவ்வொருமையிற்சுகம் விளைதலி
னிஃதேயானந்தமெனவுமிவ்வனுபவத்தா லுத்திப்பிரமாணமுணர்த்
தியதாம்.

(அ-கை) சச்சிதானந்தப்பதங்களின் பொருளொன்றென்பதற்கனு (௩௪௨)
பவங்கூறல்.

சுருதியுத்தியொத்ததுபோலனுபவமுங்கேள்சுழுத்திச்சுகவானந்த-மி
ருதிவடிவாதலிலவ்வானந்தமேயறிவாம்வேறன்றில்லைக்- கருதுபிரளய
ஞ்சுழுத்தி யிரண்டிலுநீயிருந்திருளைக்காண்கின்றாயே,யிருதயத்திப்
படிநோக்கி யேகபரிபூரணயாயிருந்திடாயே.

(இ-ள்.) சுருதியுத்தி-சுருதியமுத்தியும்—ஒத்ததுபோல்- பொருந்தி
னதுபோல—அனுபவமுங்கேள்-அனுபவத்தையுங்கேளாய்—சுழுத்
தி-சுழுத்தியவத்தையிலுள்ள—சுகவானந்தம்-ஆனந்தமானது—மிரு
திவடிவாதலின்-ஸ்புரணரூபமாதலினால்—அவ்வானந்தமேயறிவாம்
அந்தவானந்தமே ஞானமாம்—அங்கு அவ்விடத்து—வேறில்லை-மற்
றொன்றில்லை—கருதுபிரளயம்- நினைக்கின்றகற்பாந்தமும்—சுழுத்
தி-சுழுத்தியவத்தையுமாகிய—இரண்டிலும்-இரண்டுகாலத்தும்—நீ
யிருந்து-நீசத்தாகநின்று—இருளை - அந்தகாரத்தை—காண்கின்று
யே- பார்க்கின்றாயல்லவா—இருதயத்து - உனதிதயத்தில்—இப்படி
நோக்கி-இவ்விதமாகப்பார்த்து—ஏகபரிபூரணயாயிருந்திடாய் - ஒன்
றானபூரணஸ்வரூபமாகவேயிருப்பாய்—எ-று.

(ப-ம்) அறிதலிறந்தசுழுத்தியிலானந்தம் விளங்குதலதற்கேதெரி
தலி னவ்வானந்தமேயறிவென்பார் சுழுத்திசுகவானந்தமிருதிவடிவா
தலி னவ்வானந்தமேயறிவாம் வேறங்கில்லையெனவும் - இருளையறியு
மிடத் தவ்வறிவேதானாயிருத்தலி னறிவேசத்தென்பார்பிரளயஞ்சுழு
த்தியிரண்டிலுநீயிருந்திருளைக்காண்கின்றாயெனவுங்கூறினர்.

(இ-ம்) சச்சிதானந்தத்தின்பொருளொருமையென்பதற் கனுபவ
ங்கூறியதாம், சுருதியுத்தியனுபவங்களோடுமுணர்த்தியசச்சிதானந்த
த்தின்பொருளொருமையின் ஸ்வரூபத்தைத்தேசிகருபதேசமுகத்தா
ற்றெரிந்துகொள்க.

(அ-கை) சுருதியுத்தி யனுபவப்படிச்சிடன்சகசநிட்டையிற்பெற் (௩௪௩)
றவனுபவங்கூறல்,

பலகலையுமுணர்ந்தகுருமொழிந்தபடியிவனுமனுபவம்விடாமற், பல
பலரின்மதுப்போலச் சச்சிதானந்தமொன்றாய்பரமார்த்தத்தைப், பல



பொழுதக்கண்மூடிச் சமாதியிருந்தான்விழித்துப்பார்த்தபோது,பல
வடிவாஞ்சராசரசித்திரங்களெலாந்தோன்றுமொருபடமானதே.
(இ-ள்) டலகலையும்-சகலசாஸ்திரங்களையும்-உணர்ந்தகுரு-அறிந்
கதேசிகரானவர் - மொழிந்தபடி- அனுக்கிரகித்தவண்ணம்-இவனும்-
இச்சிடனும், அனுபவம்விடாமல் - அனுபவத்தைவிட்டுநீங்காமல்-டல
மலரின்மதுப்போல-நாநாபுட்பங்களினிருக்குந்தேனொருமித்ததுபோ
ல - சச்சிதானந்தமொன்றும் -சத்துச்சித்தானந்தங்களேகமாகிய-பரமா
ர்த்தத்தை-பிரமப்பொருளை- பலபொழுதும் எப்போதும்-கண்மூடிச்
சமாதியிருந்தான்-ஊனக்கண்ணைமூடி ஸ்வரூபசமாதியிலிருந்தான்
விழித்துப்பார்த்தபோது - ஞானவிழியாற்பார்க்கும்போது-பலவடிவா
ம் - நாநாவிதவுருவங்களான-சராசரசித்திரங்களெல்லாம் - தாபரசங்க
மாகியசித்திரங்களனைத்தும் - தோன்றும்-தோன்றுகின்ற ஒருபடமா
னன் - ஓர்சித்திரப்படமானான்-எ-று.
(இ-ம்) சச்சிதானந்தப்பதங்களின்பொருளொருமையானவத்துவி
தஸ்வரூபமேதானாகித்தானேயாவுமாக விளங்குகின்றசாஷாத்காரனு (௩௪௪)
பவத்தைப்பெற்றாரூடனாயினனென்பதாம்.

(அ-கை.) துரியாதீதமேதுரியமாகவிளங்குமனுபவத்தில்நவநவமா
ரமிக்கும்பொருட்டஃததயமாதற்கிடமாகஞானபூமியைக்குறித்துநா
ன்குவகையாகவினுதல்,

இதயமொத்தசற்குருவேநமக்கிதுவேவிநோதமன்றியினி வேறுண்
டோ, வதையுரைத்தயவைநினைத்துமிருப்பதன்றோஞானிகளுக்கான
நீதி முதலுரைத்ததுரியாதீதமுமேழாம்பூமியு முக்கியமாமெனவு, -த
முமதின்வகையுமெனக்கெளிதாகத்தெரியும்வண்ணம்பணித்திடீரே,
(இ-ள்) இதயமொத்த சற்குருவே-மனமொத்தவென்னுடையவாசி
ரியரே, நமக்கு-நமக்கு-இதுவே-இவ்விசாரமே,விநோதமன்றி,லீலைய
ல்லாமல்- இனிவேறுண்டோ- இனி வேறுமொன்றுளதோ- அதை-அப்
பிரமத்தை-உரைத்தும்-வாக்கினாற்பேசியும்-நினைத்தும் - மனதினாற்சி
ந்தித்தும்- இருப்பதன்றோ-இருப்பதல்லவா - ஞானிகளுக்கான நீதி
ஞானவான்களுக்கானநியாயம்-முதலுரைத்த-முன்சொன்ன, துரியா
தீதமும் - துரியாதீதத்தையும்,ஏழாம்பூமியும்-ஏழாவதுபூமியும்-முக்கி
யமாமென்றபதமும் - முக்கியமாமென்றுசொல்லியபதமும்- அதின்
வகையும் -அதன்பகுப்பையும்-எனக்கு-அடியேனுக்கு-எளிதாகத்தெ
ரியும்வண்ணம்-சுளுவாகத்தெரியும்படி- பணித்திடீர்-அருள்செய்வீ
ர்—எ-று. (௩௪௫)

(இ-ம்) கெளிப்பனை

(அ-கை) சுவானுபவத்திற்சொல்லுமஞ்ஞையமார்க்கமான ஞானபூ
மிடைக்கூறுவான்றொடங்கி யுற்பத்திக்கிரமமானவஞ்ஞானபூமியின்
வகைய [illegible] ங்களேழையுமாக்கூறுகின்றார்.

வினவுமிடத்தஞ்ஞானபூமிகளேழ்ஞானபூமிகளே ழென்பா,ரினியவற்றளஞ்ஞானபூமிகளேழையுமுந்தி யியம்பக்கேளாய், தனிவித்துசாக்கிரஞ்சாக்கிரமகாசாக்கிரஞ்சாக்கிரத்தைச்சார்ந்த,கனவுகனுக்கனவுசாக்கிரஞ்சுழுத்தியென்றெழுபேர்கணித்தார்மேலோர்.

(இ-ள்) வினவுமிடத்து-விசாரிக்குமிடத்தில்-அஞ்ஞானபூமிகளேழ்அஞ்ஞானபூமிகளேழ்-ஞானபூமிகளேழ் -ஞானபூமிகளேழ்என்பார்-என்றுசொல்லுவர்கள் -இனியவற்றுள்-இனியவைகளுக்குள் அஞ்ஞானபூமிகளேழ் - அஞ்ஞானபூமிகளேழினையும் - முந்தியியம்பக்கேளாய்-முன்புசொல்லுதல்கேட்பாய்-தனி-தனிமையான-வித்துச்சாக்கிரம்-வித்துநனவெனவும்- சாக்கிரம்-நனவெனவும்- மகாசாக்கிரம்-மகாநனவெனவும்- சாக்கிரத்தைச் சார்ந்தகனவுநனுக்கனவெனவும்-கனு-சொர்ப்பனமெனவும்-கனவுசாக்கிரம்- கனுநனவெனவும்-சுழுத்தியென்று- சுழுத்தியெனவும்-எழுபேர் எழுநாமங்கள்-மேலோர்-மகான்கள்-கணித்தார்-கூறினர்-எ-று.

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) அவற்றனைக்குபூமிகளினிலக்கணக்கூறல்.

முந்தவகண்டத்தெழுபோதிவுமாத்திரமதுதான்முதல்வித்தாகு
மிந்தவறிவிற்பண்டில்லாவகந்தைமுளைபோலாமிதுநனவாம்
வந்தவந்தப்பிறவிதோறுமமமதைவளருமதுமகாநனவா
நந்தமகங்கொடுநனவின்மனோராச்சியஞ்செயலேநனுக்கனவே

(இ-ள்) முந்த-முன்னரேயுள்ள-அகண்டத்தெழும்-அகண்டமானசத்திலுதித்த ஓரறிவுமாத்திரம-ஒருணர்வாகிய.அதுதான்-அதுவே-முதல்வித்தாகும் - மூன்றுண்டானவித்துநனவாம்-இந்தவறிவில்-இவ்வித்தைபாவியவுணர்வில்-பண்டில்லா-முன்னமில்லாத- அகந்தை-அகந்தையானது,முளைபோலாம்-அங்குரம்போலவுண்டாம் -இதுகனவாம்-இதுசாக்கிரமாம்-வந்து உண்டாகியுண்டாகி -பிறவிதோறும்-சநநந்தோறும் - அகமமதைவளரும்-யானெனதென்கின்றவிருதுவ்வளரும் -அதுமகாநனவாம்- அதிமகாசாக்கிரமாம்,நந்தம்-நசிக்கின்றஅகங்கொடு-அகத்தைக்கொண்டு- நனவில்-சாக்கிரத்தில்-மனோராச்சியஞ்செயல்-மனோராச்சியஞ்செய்வது-நனுக்கனு-சாக்கிரசொர்ப்பனமாம்—எ-று.

(ப-ம்) அறிவறியாமையின் திப்பிரிவாகவிளக்குகின்றதன்னிடத்திலேதிரிட்டறிய வுதித்தபோதமே சகசிவபாரத்துக்கு மூலமானபிரகிருதியென்பார் முதல்வித்தாகுமெனவும்-இவ்வறிவிற் பிரதிபலனமாகவெளிப்படுஞ்சாயையையாமென்னுமறிவேசகசிவபாரவுற்பத்திக்கடையாளமான மகதத்துவமென்பார்-நனுவெனவும்- அச்சகசிவபாரங்களேயானெனதெனமமதாகங்காரமாகவெளிப்படுமறிவேயகங்காரதத்துவமென்பார்-மகாநனுவெனவும்-அச்சகசிவபாரங்களிலுருவமேயானென



வியாபித்ததுவாக நிற்குமறிவுதெரிதல்போலத்தோற்றுமென்பார்- நனுக்கனுவெனவுங்கூறினர்,

(அ-கை.) ஏனையமூன்றுபூமிகளினிலக்கணக்கூறல்.

உண்டுறங்கியமனோராச்சியஞ்செயல் சொர்ப்பனமெனும்பேருடையதாகும்-பண்டுநனுக்கண்டுமறந்ததைமீண்டுநினைப்பது சொர்ப்பனநனவா - மண்டியிருண்மூடுவதுசுழுத்தியாமஞ்ஞானவகைகள்சொன்னோம்-விண்டுநிறைமுத்திதருஞானபூமிகளேழும்விளம்பக்கேளாய்,

(இ-ள்) உண்டுறங்கி -புசித்துநித்திரைசெய்து-மனோராச்சியஞ்செயல்-மனோராச்சியஞ்செய்வது-சொர்ப்பனமெனும்பேருடையதாகும்-முன்சாக்கிரத்திற்கனுவென்னுநாமமுள்ளதாம்-பண்டுநனுக்கண்டு- முன்சாக்கிரத்திற் பார்த்து-மறந்ததை-மறந்துவிட்டதை மீண்டுநினைப்பது-திருப்டஞாபகப்படுத்துவது-சொர்ப்பனநனுவாம்-சொர்ப்பனசாக்கிரமாம்-மண்டியிருண்மூடுவது-மிகுத்தவிருள்மூடிக்கொள்வது-சுழுத்தியாம்-சுழுத்தியாகும்-அஞ்ஞானவகைகள்சொன்னோம்-அஞ்ஞானபூமிகளின்விருத்தியாகும்-அஞ்ஞானவகைகள்வேறுபட்டு- நிறைதத்தைச்சொன்னோம்-விண்டு-சடமுதலியவைகள்வேறுபட்டு- நிறைமுத்திதரும் - பரிபூரணமான கைவல்யத்தைக்கொடுக்கும்- ஞானபூமிகளேழும்-ஞானபூமிகளேழையும்-விளம்பக்கேளாய்சொல்லக்கேட்பாய்-எ-று,

(ப-ம்) அச்சகசிவபாரங்களின் யதார்த்தமிவ்வென்று தெரியாதசனிவெல்லாம்சொற்பனமெனவும் அவ்வியாபிக்குமறிவே மனோராச்சியமென்பார்- சொற்பனநனுவெனவும் அச்சகசிவபாரங்களைமறந்துநினைக்குமென்பார்- சொற்பனநனுவெவ்வறிவுசகசிவபாரங்களே காணுகிறதன்று தன்னைமுழுதுமறந்தவறிவும் அச்சகசிவபாரங்களே இருண்மூடுவதுசுழுத்தியாமெனவும் யாமையே மீளாதமகாசுழுத்தியென்பார் இருண்மூடுவதுசுழுத்தியாமெனவுங்கூறினர்,

(இ உ-க-ம்) வித்துநனவு- நனவு- மகாநனவாகியவிம்மூன்றும் அறிவுபரிணமித்தாகாரமா யெதிரிடுதலாற்சாக்கிரமெனவும்சாக்கிரசொற்பனம்-சொற்பனம்சொற்பனசாக்கிரமாகியவிம்மூன்றுமெதிரிடுகின்றவாகாரங்களினறியாமையோடுவிபகாரங்கள்செய்தலின் சொற்பனமெனவும்சுழுத்திசிருட்டி முதலியதிகாறுர்தன்யதார்த்தந்தெரியாமல்விடயார்த்தகாரமாக வுறங்குதலிற் சுழுத்தியெனவுங்கூறினரென்பதாம்.

(அ-கை) ஞானபூமிகளினுமைங்களேழையுங்கூறுகின்றார்

புலவர்புகழ்முதற்பூமிசுபேச்சைவிசாரணையிரண்டாம்பூமியாகும் (ரும்)
நலதனுமானசிமூன்றாம்பூமிசத்துவாபத்திநாலாம்பூமி
சொலுஞ்சமுசத்திப்பருபதார்த்தபாவனைப்பேருந்துரியப்பே
ரலினமறுமகனேமைந்தாரேழுபூமிகளாகவகுத்தார்மேலோர்

(இ-ள்) புலவர்புகழ்-அறிஞர்கருதியாநின்ற, முதற்பூமி-முதற்பூமியினுமம்,சுபேச்சை- சுபம்விருப்பமெனவும்,இரண்டாம்பூமி இரண்டாம்பூமியினுமம்.விசாரணையாகும்-விசாரமெய்தலெனவும், மூன்

ருர்பூமி-மூன்றாம்பூமியினும்-நலதனுமானசி-நல்லமனஞ்சிறுக- னவும், நாலாம் பூமி-நான்காம்பூமியினும், சத்துவாபத்தி- உண்மையி லே மன்னிநிற்றலெனவும், ஐந்தைஐந்தாம்பூமியின் - பேரும்-நாமமு ம். சொலும்சமுசத்தி-சொல்லாநின்றசங்கற்பமறலெனவும்-ஏழு-ஏழா வதுபூமியின், பேரும்- நாமமும், துரியம்- துரியமெனவும், மலினமுமம கனே-களங்கமறுமைந்தா-மேலோர் - மகான்கள்-பூமிகளாகவகுத்தார் சத்தபூமிகளாகப்பிரித்தார்கள்-எ-று.

(இ-ம்) வெளிப்படை,

(அ-கக) அவற்றுணுங்குபூமிகளி னிலக்கணங் கூறல். (௱சக)

தார்ச்சங்கநிவிர்த்திவந் தசிவஞானம்விரும்புவதுசுபேச்சையாகு
நற்சங்கமொழிவினவிஞான நூல்பழகல்விசாரணையா நம்பி
முற்சங்கவீஷணைகள்விட றனுமானசியிந்தமூன் றினுஞ்
சற்சங்கமனதி லுண்மையறிவுதித்தல்சத்துவாபத்திதானே

(இ-ள்) தார்ச்சங்கநிவர்த்திவந்து-தார்ச்சங்கநீக்கி-சிவஞானம்விரும் புவது-சிவஞானத்தையாசிப்பது, சுபேச்சையாகும், சுடம்விரும்பலா ர், நற்சங்கம்-சாதுசங்கத்தைச்சேர்ந்து, மொழிவினவி - அவருரைக் கும்வாக்கியத்தைவிசாரித்து, ஞான நூல்பழகல் ஞானசாஸ்திரத்தை ய ப்பியாசித்தல்-விசாரணையாம்-விசாரணையாகும், நம்பி-விசாரத்தின் வெளிப்படும்பொருளைநம்பி, முற்சங்கவீஷணைகள்-முன்னுள்ளவிச் சைகளை, விடல்-நீக்குதல், தனுமானசி - மனஞ்சிறுகலாம்- இந்தமூன் றினும் - இம்மூப்பூமிகளின்பழக்கத்தினும்-சற்சங்கமனதில் - சற் சங்கப்பழகியமனதில், உண்மையறிவுதித்தல்-மெய்யுணர்வுபிறத்தல் சத்துவாபத்தி - உண்மையிலே மன்னிநிற்றலாம்—எ-று.

(அ-கை) ஏனையமூன்றுபூமிகளி னிலக்கணங்கூறல். ௱௫௰

தத்துவத்திற்மனமுனைத்துமித்தைபெலாமறத்தல்சமுசத்தியாகுமம
த்துவிதானந்தம்வருந்திரிபுடிபோம்பதார்த்தபாவனையதாகும்; வத்
தனிலையிருந்தபடி யிருந்தமவுனசுபாவந்துரியமாகு
மித்துரியபூமியைமூன் றுரியாதீதப்பதமென்றதுவுங்கேளாய்

(இ-ள்) தத்துவத்தில்- உண்மையில்-மனமுனைத்து - மனந்திரப் பட்டு- மித்தையெலாம்-பொய்மைகளனைத்தையும், மறத்தல்- மறந்து விடுவது சமுசத்தியாகும்-சங்கற்பமறலாம்- அத்துவிதானந்தம்வரும் அத்துவிதானந்தமுண்டாதலும், திரிபுடிபோம் திரிபுடிநீங்குதலும் பதார்த்தபாவனையதாகும்-பதார்த்த வெண்ணமறுத்தி-லெனவும்-வ த்துநிலை-மெய்வஸ்துவினிச்சயம், இருந்தபடியிருந்த-இருந்தவண்ண மிருக்கின்ற-மவுனசுபாவம் - மோனத்தன்மையே, துரியமாகும்- துரி யமாம்-இத்துரியபூமியை-இந்தத்துரியபூமியை, முன்- முன்பு- துரியா தீதப்பதமென்றதுவும்- துரியாதீதப்பதமென்றுசொன்னதுவும்- கே ளாய்-கேள்—எ-று.



(இ-உ-க-ம்) சாதனசதுட்டயமுதித்தவிடயதோஷதிருட்டியுண்டா யித் தன்னைத்தரிசிக்க விருப்புவதேசுபேச்சையெனவும்-அவ்விருப்ப த்தாற்குருவுபதேசித்தருவமுந் தானல்லாதசடவுருவமுமிஃதெனவிசா ரித்தல் விசாரணை யெனவும் அவ்விசாரத்திலுள்ள சத்தில்வாசனையுண் டாய்ச்சடவாசனைவிட்டுமனமடங்குதலேதனுமானசியெனவும் அச்சி த்துவாசனைமிகுந்தஃகனுபவமாகவெளிப்படுதல்சத்துவாபத்தியென வும் அச்சித்துதயத்தினாற்சடபாவநீங்குதல்சமுசத்தியெனவும்அச்சி த்தில ஙந் தாதயமா யி ண்ட மயாவுந்தானேதானுயிருத்தல் பதார்த் தாபாவனையெனவும் இவ்வநுபவமெப்போதுமுள்ளதாகவிளங்குதல் துரியமெனவுங் கூறினதாம். (௱௫௧)

(அ-கை) இத்துரியபூமி துரியாதீதமாகுமியல்புதோன்ற சத்தபூமி யையும் பஞ்சாவத்தையாகப்பகுத்த தன்வகையுமதனிலக்கணமுங்கூ றுகின்றார்.

முற்பவிமூன்றினுமுலகந்தோன்றுகலாற்சாக்கிரமாம்மூன் றற்கப்பாற்
சொற்பனமாமகவுமன்ன நழுவுமஞ்சாம்பூமியேசுழுத்தியாகு
மற்புதமாஞ்சுவானுபவமிகுமாறும்புவிதுரிய மதற்கப்பாலோர்
கற்பனையிலாதவிடமதீதமென் றுமவுனமாக்காட்டும்வேதம்,

(இ-ள்) முற்புவிமூன்றினும்-முதற்கட்கூறியபூமிகண்மூன்றிலும், உ லகந்தோன்றுகலால்-சகந்தோன்றுகின்றபடியால்—சாக்கிரமாய்-அப் பாற் மூன்றுபூமியுநனவாகும், மூன்றதற்கப்பால்-நான்காவதுபூமி, சொற்பன மாம்-கனவாகும், அகவுமென்ன நழுவும்- அக்கனவுமெள்ளநீங்குகின்ற அஞ்சாம்பூமியே - ஐந்தாம்பூமியே, சுழுத்தியாகும்-சுழுத்தியாம், அ ற்புதமாம்-அதிசயமாகிய, சுவானுபவமிகும்-சுவானுபவமிகுந்த ஆறு ம்புவி-ஆறும்பூமி, துரியமாம் -துரியமாகும், அதற்கப்பால் ஏழாம்பூ மி ஓர்கற்பனையும்-ஒருகற்பனையும், இல்லாதவிடம்-அற்றவிடம், அதீத மென்று-துரியாதீதமென, மவுனமா-மௌனமாக, வேதம்-சுருதியானது காட்டும்-தரிசிப்பிக்கும்-எ-று.

(இ-ம்) சுபேச்சை விசாரணை தனுமானசியாகிய விம்மூன்றிற்கும் சாக்கிரமெனவும்சத்துவாபத்தி விடயருபமாகத் தோன்றுதலினைவைசாக்கிரமெனவும்சத்துவாபத்தி யிற் சகநினைவுருவாகத் தோற்றுதலினது சொர்ப்பனமெனவும் சமு சத்தியிற்சகத்தோற்றமையின் சுழுத்தியெனவும் பதார்த்தாபாவனை யிற் சகஞ்சின்மாத்திரமாகத்தோற்றுகலின்துரியமெனவும்துரியத்திற் காண்பதுங் காணப்படுவதுஞ் சத்தாமாத்திரமாகவிளங்குதலின் அது துரியாதீதமெனவுங் கூறினதாம், அனுபவிக்கிப்பூமிகளைந்தவத்தை யானதெனக்கொள்க, (௱௫௨)

(அ-கை) இவ்வேழாம்பூமியைத்துரியமென்பதற்கனுட்டவங்கூறல்

துரியநிலந்தனிற்றுரியாதீதமெனின்மயக்கமென்று சுருதிமேலோ
ரரியதொருவிதேகமுத்தியதீதமென்பாரதுகணக்கிலாறும்பூமி

மருவுசுழுத்தியிற்காட்சிசுழுத்தியென்பாரென்பது நீமனதிற்கொள்வாய்,பெருமைதரு ஞானபூமியின் விகற்பமின்னமுண்டுபேசக்கேளாய்,

(இ-ள்) துரியநிலந்தனில் - துரியபூமியை,துரியாதீதமெனில்-துரியாதீதமென்றால்,மயக்கமென்று - மயக்கம்வருமென்று, சுருதிமேலோர் வேதாந்தமுணர்ந்தபெரியோர்கள், அரியதொருவிதேகமுத்தி எட்டுதற்கரியதொப்பற்றவிதேகசைவல்யத்தை, அதீதமென்பார்-துரியாதீதமென்று சொல்வார்கள், அதுகணக்கில் - அந்தக்கணக்கிற்கு, ஆறும்பூமி-ஆறாவதுபூமியானபதார்த்தாபாவனை, மருவுசுழுத்தியில் - பொருந்தாநின்றசுழுத்திநிலை, காட்சிசுழுத்தியென்பார்-காணுமறிவாகிய சுழுத்தியென்றுசொல்லுவார்கள்,என்பது-என்றதை, நீமனதிற்கொள்வாய்-நீமனதில்வைப்பாய், வெருமைதரும்-மாட்சிமையைக்கொடுக்கின்ற,ஞானபூமியின் -ஞானபூமிகளின், விகற்பம்-பேதங்கள், இன்னமுண்டு-இன்னமிருக்கின்றது,பேசக்கேளாய்- அதைச்சொல்லக்கேளாய்—எ-று.

(இ-ம்) இவ்வேழாம்பூமியைத்துரியமெனவுந்துரியாதீதமெனவுங்கூறினையமுண்டாமெனக் கருதியதனைச்சீவன்முத்தியின்றிறமான துரியமெனவும்-இதுநீங்கியவிதேகமுத்தியைத் துரியாதீதமெனவுங்கூறுவார் அங்ஙனங்கூறுமிடத்தைந்தாம்பூமியாகியசுழுத்தியிற்சந்தேகந்தோன்றுமற்றுன்றோன்றிநிற்றல்துரியமாதலின்துரியமென்றும் ஆறாம்பூமியைக்காட்சிசுழுத்தியென்றுகூறினரென்பதாம் (௬௩)

(அ-கை) ஞானபூமிகளையடைந்தசீவன்முத்தர்களினவசரங்கூறல்

மூன்னிலங்களேறியமூவருமப்பியாசிகளாமுத்தரல்லர்
பின்னிலங்கள்வரன் வரியான்வரிட்டனெனுஞ்சீவன்முத்தர்பேதமாகு
சொன்னநடுப்பூமிவந்தஞானிகளேபிரமவித்தாந்தூயமுத்த (ஞ்
ரின்னமுமப்பூமிகளின்பெருமைதனைநீயறியயான்சொல்வேனே.

(இ-ள்) முன்னிலங்களேறிய-முதற்கணுள்ளமூன்றுபூமியிலேறியவர்கள் மூவரும்-மூன்றுபேர்களும், அப்பியாசிகளாம்-சாதகர்களாம்,முத்தரல்லர் -சீவன் முத்தர்களல்லர்,பின்னிலங்கள்-இறுதியிலுள்ளமூன்றுபூமிகளிலேந்தாம்பூமியிலேறியவன், வரன்-பிரமவரனெனவும், (ஆறும்பூமியிலேறியவன்) வரியான் - பிரமவரியானெனவும், (ஏழாம்பூமியிலேறியவன்) வரிட்டனெனும் -பிரமவரிட்டனெனவும்,சீவன்முத்தர்பேதமாகும் - சீவன்முத்தர்களின்பேதங்களாம், சொன்ன - இப்போது சொல்லியபூமிகளின், நடுப்பூமிவந்த-மத்தியாகியநாலாம்பூமியிலேறிய ஞானிகள் ஞானவான்கள், பிரமவித்தாம் - பிரமவித்தென்னும், தூய முத்தர் - மேலான சீவன்முத்தர்களாம்,இன்னமும்-மேலும், அப்பூமிகளின்பெருமைதனை - அந்தஞானபூமிகளின்பெருமையை, நீயறிய உனக்குத்தெரியும்படி யாருக்கு, யான்சொல்வேன் - நானுரைப்பேன்—எ-று.



(இ-ம்) முன்மூன்றுபூமிகளையடைந்தவரப்பியாசிகளெனவுமற்றநான்குபூமியையடைந்தவர்சீவன்முத்தர்களெனவுங்கூறினதாம் (௬௪)

(அ-கை) ஞானபூமிகளின் முன்மூன்றினப்பியாசத்தால்வரும்பயனும் மதின்முதற்பூமியி னருமையுங்கூறல்,

நாலாம்பூமியின்வருமுன் மூன்றுபூமியுமடைந்துநடந்தமாண்டோர்
மேலானபதமடைந்துபிறந்துமெள்ளமெள்ளவந்துவீடுசேர்வார்
மாலானபவத்தில்விழார்முதற்பூமியிடைப்படவேவருத்தமைந்தா
காலானமுதற்பூமிகைவந்தான்முத்தியுங்கைவந்ததாமே.

(இ-ள்) நாலாம்பூமியின்-நான்காம்பூமியில், வருமுன்-வருவதற்குமுன்னம், மூன்றுபூமியுமடைந்து -மூன்றுபூமியையுஞ்சேர்ந்து,நடந்து-அவற்றையநுஷ்டித்தவரும்போது,மாண்டோர்- மரித்தவர்கள் மேலானபதமடைந்து - உயர்ந்தபதவியைப்பெற்று, பிறந்து-பூமியிற்சனித்து,மெள்ளமெள்ளவந்து-கொஞ்சங்கொஞ்சமாகவேறி,வீடுசேர்வார் - முத்தியையடைவார்கள், மாலானபவத்தில்விழார்-இச்சாரூபமானசநத்தில்விழார்,முதற்பூமியிடைப்படவே-முதற்பூமியானசுபேச்சையுண்டாவதே, வருத்தம் - பிரயாசமாம்,மைந்தா-மகனே, காலானமுதற்பூமி - ஆதியானமுதற்பூமி, கைவந்தால்-கைவருமானால்,முத்தியும்-மோட்சமும், கைவந்ததாம்-கைவசமானதாம்—எ-று.

(௬௫)

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை) அப்பியாசபூமியையடைந்தவ னெவ்விதத்திலு மனுபவியாவனென்பதாருமியவனனுபவியேயெனக்கூறதல்.

இப்புவியிலிஞ்ஞானபூமியொன்றிலிரண்டிலடைந்திருந்தாரா
லப்புருடர்மிலேச்சராகிலுமுத்தர்குருபாதத்தாணைமெய்யே
தப்புவாவென்றவர்கெடுவார்நடுவானமறைகளைநீசங்கியாதே
செப்புமொழிவழிநிட்டமாயகப்பிரமமென்றிருந்துதெளிந்திடாயே

(இ-ள்) இப்புவியில் - இவ்வுலகத்தின்கண், இஞ்ஞானபூமி இந்தஞானபூமிகளேழில், ஒன்றில்-சுபேச்சையிலாவது, இரண்டில் - விசாரணையிலாவது, அடைந்திருந்தாரானால் - சேர்ந்திருப்பாராயின், அப்புருடர்- அந்தப்புருடர்கள், மிலேச்சராகிலும் -மிலேச்சர்களானாலும், முத்தர் - சீவன்முத்தராவர், குருபாதத்தாணை-தேசிகர்திருவடியாணை, மெய்யே-சத்தியமே,தப்புவாவென்றவர்- இதைப்பொய்யென்பவர், கெடுவார்-பவத்திலழிவார்கள்,நடுவானமறைகளை-நடுவென்றவர்கள், வேதவாக்கியங்களை, நீசங்கியாதே-குதர்க்கமாகச்சந்தேகியாதே, செப்புமொழிவழி-போதிக்கின்றவுபதேசமார்க்கத்தில், நிட்டமாய்-ஸ்திரமாகச்சென்று, அகப்பிரமமென்று-கூடஸ்தனே பிரமமென்று, இருந்து தெளிந்திடாய்-சகசமாதியிலிருந்துதெளிவாய் (௬௬)
—எ-று,

(இ-ம்) இவ்வப்பிரபாசபூமியை யவசியமடையும்பொருட்டவைகளி ன்பெருமையையுமவைகளாற்பெறும்பயனையுங்கூறினதாம்.

(அ-கை) முத்தியையடைதற்குவன்னுச்சிரமபேதம்வேண்டுவதின் றென் றுதோன்ற விப்பூமிகளின்முடிவான துரியாதீதந்துறவறத்தா ர்க்கன்றி யில்லறத்தார்க்குவாராவென்னு மையத்தைநீக்கவேண்டுமெ னவினுதல்.

பொல்லாதமிலேச்சருக்கும்விதேகமுத்திதருஞானபூமியென்று
நெல்லாகிமுளைக்குமெனத்தண்டுலமாக்கியகுருவேநீர்சொன்னீரே
இல்லாளுங்குடும்பம்விட்டுச்சந்நியாசம்புகுந்தேகாங்கியானே
ரல்லாமன் முத்திபெறுமொன்றுசிலர்சொலுமயக்கமகற்றுவீரே.

(இ-ள்) பொல்லாதமிலேச்சருக்கும் - கொடியரான மிலேச்சர்களு க்கும், விதேகமுத்திதரும் - விதேககைவல்லியத்தைக்கொடுப்பது— ஞானபூமியென்று - ஞானபூமியாமென்று— நீர்சொன்னீர்-தேவரீரரு ளிச்செய்தீர். நெல்லாகி-நெல்வித்தைப்போல— முளைக்குமெனை-ச னித்துக்கொண்டிருக்குமடியேனை— தண்டுலம்-அரிசியைப்போல-ஆ க்கியகுருவே-சனியாமற்செய்த வாசிரியரே— இல்லாளுங்குடும்பம்வி ட்டு - மனைவிமுதலிய குடும்பத்தைத்துறந்து, சந்நியாசம்புகுந்து-அ தனைப்பெற்று, ஏகாங்கியானோரல்லாமல்-தனித்தவர்களேயன்றி முத் திபெறுமொன்று-மற்றவில்லறத்தார் மோட்சமடையமாட்டாரென்ன ற-சிலர்சொலுமயக்கம் - சிலர்சொல்லுகின்றபிரமையை— அகற்றுவீர் நீக்குவீர்—எ-று.

(இ-ம்) வெளிப்படை (௱௫௭)

(அ-கை) நால்வகைத்துறவினுமமூலவற்றின்காரணமுங்கூறல்.

சிட்டர்புகழ்மகனேநீசங்கித்தசங்கைநன்று தெரியக்கேளாய்
கட்டழியுந்துறவுநால்வகையாகுமவைகளுக்காகும்பேர்கள்
பட்டதுபர்கெடுங்குடீசம் பகூதகம்ஹம்சம்பரமஹம்சம்
விட்டகலுந்துறவுக்குவிராகங் காரணமன்றிவேடமன்றே

(இ-ள்) சிட்டர்புகழ்மகனே -சர்ச்சனர்துதிக்கின்றமைந்தா, நீசங்கி த்தசங்கை- நீவினவினவினுவானது, நன்று-நன்றும், தெரியக்கேளாய் தெரியக்கூறுதங்கேள், கட்டழியுந்துறவு-பந்தமழிகின்றசந்நியாசமா னது, நால்வகையாகும்- நான்குவிதமாம், அவைகளுக்கு-அந்நான்குக் கும், ஆகும்பேர்கள் - அவ்விடத்தாகுநாமங்கள், பட்டதுபர்கெடு ப்-உண்டான கஷ்டநசிக்கின்ற, குடீசகம்-குடீசகசந்நியாசமெனவும், பகூதகம்-பகூதகசந்நியாசமென்றும்அம்சம் அம்சசந்நியாசமெனவும் பரமஹம்சம் பரமஹம்சசந்நியாசமெனவும், விட்டகலும்-பந்தத்தை விட்டுநீக்கும், துறவுக்கு-இச்சந்நியாசங்களுக்கு, விராகங்காரணமன்றி விராசைகாரணமேயல்லாமல், வேடமன்று-வேடங்காரணமன்றும்-எ-று.

(இ-ம்) வெளிப்படை. (௱௫௮)



(அ-கை) துறவின்காரணமானவிராகமூன்றினுமிவைகளின்லக்கண ங்கூறல்.

மந்தமுந்தீவிரமுந்தீவிரதரமுமெனமூன்றுவகைவிராகம்
வெந்துயரம்வருபொழுதுகுடும்பத்தைவெறுத்துவரும்விராகமந்த
மிந்தவுடலளவுமனைதனம்வேண்டாமெனவிடறீவிரமென்பார்க
ளந்தணர்நூல்மித்தையெனவிடலதுதிவிரதரமறிந்திடாயே,

(இ-ள்) விராகம்-விராகமானது, மந்தமும்-மந்தவிராகமும்- தீவிரமு ம்-தீவிரவிராகமும், தீவிரதரமும்-தீவிரதரவிராகமும், எனமூன்றுவகை என்றுமூன்றுவிதமாம், (அவைகளின்) வெந்துயரம்வரும்பொழுது-வெ வ்வியதுன்பம்வரும்போது, குடும்பத்தை - சம்சாரத்தை, வெறுத்துவ ரும்விராகம் - வெறுக்கின்றவிராகமானது - மந்தம்-மந்தவிராகமாம் இந்தவுடலளவும் இத்தேகாந்தபரியந்தம்-மனை மனைவியும் - தனம் திரவி யமுதலியவைகளும், வேண்டாமெனவிடல், வேண்டாமென்றுதுறத்த ல் - தீவிரமென்பார்கள் - தீவிரவிராகமென்றுசொல்லுவார்கள், அந்த ணர் - வேதியர்க்குரிய, நூல்-கன்மகாண்டங்களை, மித்தையெனவிட லது-கற்பிதமென்று துறத்தலானது- தீவிரதரம்- தீவிரதரவிராகமாகும் அறிந்திடாய் - இவற்றைத்தெரிந்துகொள்வாய்-எ-று.

(இ-ம்) வெளிப்படை, (௱௫௯)

(அ-கை) மந்தவிராகம்பயனின்றென்றுந் தீவிரவிராகசந்நியாசமிர ண்டின்றன்மையுந்தென்றுங்கூறல்,

பாவிமந்தவிராகத்திற்சந்நியாசங்களொன்றும்பலித்திடாதே
தீவிரத்திற்குடீசகமும்பகூதகமுமென்றிரண்டுதிறங்களுண்டாந்
தாவிநடந்திடத்திடமிலாதவர்க்குக்குடீசகமுஞ்சகங்களெங்கு
மேவிநடந்திடத்திடமுள்ளவர்க்குபகூதகமுமெனவிதித்தார்மேலோர்

(இ-ள்) பாவி-இதான— மந்தவிராகத்தில் - மந்தவிராகத்தில்— சந்நி யாசங்கள்-துறவானவைகள்— ஒன்றும்பலித்திடாது-ஒன்றுஞ்சித்தியா து, தீவிரத்தில்-தீவிரவிராகத்தில்— குடீசகமும் - குடீசகசந்நியாசமு ம், பகூதகமென்று-பகூதகசந்நியாசமுமென— இரண்டுதிறங்களுண் டாம்-இரண்டுவிதங்களுளவாம்— தாவிநடந்திடத் திடமிலாதவர்க்கு- எட்டிநடக்கப்பலமிலாதவர்களுக்கு, குடீசகமும்-குடீசகசந்நியாசமு ம், சகங்களெங்குமேவி-உலகிலெவ்விடத்துமடைந்து, நடந்திடத்திட முள்ளவர்க்கு-நடக்கப்பலமுள்ளவர்க்கு, பகூதகமுமென-பகூதகசந் நியாசமுமுரியதென்று, மேலோர்-சான்றோர்கள்— விதித்தார்-நியமித் தார்கள்-எ-று.

(இ-ம்) குடீசகப்பகூதகசந்நியாசிகளினிலக்கணங்கூறியதாம். (௱௬௰)

(அ-கை) தீவிரதரவிராகசந்நியாசங்களிரண்டின்பயன்கூறல்,

இருவகைதீவிரதரத்துமம்சமென்றும்பரமம்ச மென்றுஞ்சொல்வார்
வருமம்சனுக்குமுத்திசத்தியலோகத்தன்றிவாராதென்பார்

நானே-யானே—நானறியனென்றால்- யான்காண்கிலேனென்னில், நானெனப்படுவது-யானென்பதியாது—பின்னை- பின்பு—நம்முடைபுத்தியென்னில்- நமதுபுத்தியெனற்சொல்லில்—அது- அப்புத்தியும்—மயக்கந்தன்னிற்சாகுமே-சுழுத்திமயக்கத்திலிறக்குமே—சாவாதாகில்- அஞ்ஞனமரியாதிருக்குமாயின்—நானே-யானே—நானென நிறைந்திருந்த-தானென்றபூரணமாகவிளங்கிட—ஞானமாம்- மெய்ஞ்ஞானமாம்—எ-று.

(ப-ம்) இருக்குவேத மகாவாக்கியப்படி ஞானமே பிரமமென்பார் நானென்றபிரமமென்றார் நானென்பது ஞானமாகிய வித்தையெனவும் பிரமமென்ப தானந்தமெனவுங்கொள்க. (௨௪௫)

(அ-கை) வித்தியானந்தத்தி னொருமைகூறல்,

நிறைந்தவாறெந்தவாறுநிலைதெரிந்திலனென்றாயே
லறிந்ததாஞ்சுழுத்திதன்னிலா நந்தமதுவேயாகுங்
குறைந்ததுக்கானந்தந்தான்குவலயந்தன்னிலில்லை
நிறைந்ததேயிந்தவாத்மா நிதானமிவ்வறிவுதானே.

(இ-ள்) நிறைந்தவாறு யான்பரிபூரணமானவிதம்—எந்தவாறு-எவ்வண்ணம்—நிலைதெரிந்திலன்- நிச்சயந்தெரிகிலன்—என்றாயேல்- என்பாயானால்—அறிந்ததாஞ்சுழுத்திதன்னில் - நனவிற் சுழுத்தியின்கணுள்ள, ஆனந்தம்-நிரதிசயானந்தயானது, அதுவேயாகும் - அப்பூரணமேயாம், குறைந்ததுக்கானந்தந்தான்-ஏகதேசமானசுகதுக்கங்கள், குவலயந்தனிலில்லை உலகத்தின்கணில்லையாம், இந்தவான்மா-இவ்வாத்மாவே, நிறைந்தது-பூரணமானது, இவ்வறிவுதான்- இச்சைதன்னியமே, நிதானம்-நிதானமாம் எ-று. (௨௪௬)

(ப-ம்) யசுர்வேத மகாவாக்கியப்படி அகம்பிரமாஸ்மி யென்பார் நிறைந்ததேயிந்தவாத்மா நிதானமிவ்வறிவுதானேயெனக்கூறினார்.

நிறைந்ததென்பது பிரமமென்னுமானந்தமும் ஆத்மா வென்பதகமென்னும்வித்தையு நிதானமிவ்வறிவென்ப தஸ்மியென்னுமைக்கியமுமாமெனக்கொள்க.

(அ-கை) வித்தியானந்தவொருமையானசுவானுபூதியேதானெனல்

மனத்தினாலெண்ணித்தானேவந்ததிவ்வுலகமாகு
நினைத்திடிலனேகலோகநிற்-தவ்வறிவிலன்றோ
வனைத்தையுங்கடந்த பாலுமந்தமற்றறிவிதாமென்
றெணத்தனிவிசாரித்திட்டாலேகமாய்நிறைந்தோனானே

(இ-ள்) மனத்தினாலெண்ணி- மனோசங்கற்பத்தினால்—வந்ததிவ்வுலகமாகும்-இவ்வுலகமுதித்ததாம், நினைத்திடில்-கருதமிடத்தே, அநேகலோகநிற்பது - அனந்தவுலகமிருப்பது—அவ்வறிவிலன்றோ - அந்தஞானத்திலன்றோ, அனைத்தையுங்கடந்து - யாவையுந்தாண்டி—அப்பாலும்-மேலும்—அந்தமற்ற-முடிவிறந்த, அறிவிதாமென்று-ஞானமிதுவாமென்று-எனை - என்னை- தனிவிசாரித்திட்டால் - தனிமையாகவிசாரணைசெய்தால், நானே - யானே, ஏகமாய்நிறைந்தோன்- பூரணமாகநிறைந்தோன்—எ-று.

(ப-ம்) அதர்வணவேத மகாவாக்கியப்படி அயமாத்மா பிரமமென்பார் ஏகமாய்நிறைந்தோ னானேயென்றார், அற்றவென்பது அற்றெனத்திரிந்துநின்றது, ஏகமென்பது பிரமமென்னுநித்தியானந்தமும் நிறைந்ததென்ப தாத்மாவென்னும் வித்தையு நானென்பது இவ்வித்தியாநந்தத்தி னைக்கியத்திலுதித்த சுவானுபூதியாகிய வயமென்னுந் தானுமாமெனக்கொள்க.

(இ-ச-க-ம்) நான்குவேதங்களின் முடிவாயுள்ளமகா வாக்கியார்த்தஜென்னியமான வித்தியாநந்த வைக்கியஸ்வரூபமானநிரதிசயாநந்தசாட்சாத்காரமே தானெனக்கூறியதாம். (௨௪௭)

(அ-கை) முற்கூறிய கற்பிதங்களனைத்தையும் விருத்தியுளடக்கியவ்விருத்தியை நீக்கிற் சுவானுபவமுதயமாமெனக்கூறல்,

அந்தவாறிருந்துகொண்டேயானந்தமனுபவிக்க
வெந்தவாறிருந்துகொண்டாலெனக்கிதுதெரியமென்னி
லிந்தமூன்றவத்தைதம்முளெழுந்திடும்விருத்திநீக்கி
லந்தவாறிருந்துநீயுமானந்தமடையலாமே.

(இ-ள்) அந்தவாறிருந்துகொண்டு-அவ்வாறுபூரணமாகவிருந்துகொண்டே-ஆனந்தமனுபவிக்க-பூரணானந்தத்தையநுபவிக்க-எந்தவாறிருந்துகொண்டால்-எவ்வண்ணமிருந்தால்-எனக்கிதுதெரியுமென்னில் எனக்கிவ்வனுபவந்தரிசனமாமென்பாயாயின், இந்தமூன்றவத்தைதம்முள்-இம்மூன்றவத்தைக்குள், எழுந்திடும்விருத்திநீக்கில்-உதிக்கின்றவிருத்தியைத்தள்ளில், அந்தவாறிருந்து- அவ்வாறுபரிபூரணஞானமாயிருந்து-நீயுமானந்தமடையலாம்-நீநிரதிசயானந்தத்தையடையலாம்—எ-று.

(இ-ம்) வெளிப்படை. (௨௪௮)

(அ-கை) விருத்திநீக்குதற்குமூவகையுபாயங் கூறுவான்றொடங்கியிச்செய்யுளிலனுபவ வுபாயங்கூறுகின்றார்.

வாதனாவசத்தினாலே வருகிறவிருத்தியெல்லா
மேதினாலடக்கலாகு மென்றுதான்விசாரஞ்செய்யின்
போதமாமிராசன்றானுப்புந்தியைப்புலன்களெல்லாந்
தாதராயிருக்கப்பெற்றாற்சகலமுமடங்குந்தானே.

(இ-ள்) வாதனாவசத்தினாலே - வாசனாவசத்தால், வருகிறவிருத்தியெல்லாம்-வருகின்றவிருத்திகளனைத்தையும், ஏதினாலடக்கலாகுமென்று-யாதினாலொடுக்கலாமென்று, விசாரஞ்செய்யின்-விசாரிக்கின், போதமாமிராசன்றானும்-தான்ஞானவரசனாய், புந்தியைப்புலன்களெல்லாம்-புத்திமுதலியவிடயங்களனைத்தும், தாதராயிருக்கப்பெற்றால்-தாசரா

கவிருக்கப்பெறின், சகலமுமடங்கும்- அனைத்துமொடுங்கும்—எ-று.

(இ-ம்) தானாகிய நித்தியானந்தபோதமே ஸ்புரணமுதலியயாவிலு ம்விளங்கின் விருத்திகணீங்குமென்பதாம்.

(அ-கை) எனையவப்பியாசவுபாயங்களிரண்டையுங்கூறல். (௱௬௬)

விருத்திகளடக்கவின்னம் விநோதமாம்போகத்தாலே
அருத்திபோலூதுமூச்சைச் சுகமுடனடக்கினிற்கும்
கருத்ததற்கில்லையென்றகாரணசரீரமாகிப்
பெருத்திடோரவித்தைதன்னைப்பிடிக்கிலடங்குந்தானே.

(இ-ள்) விருத்திகளடக்க - விருத்திகளானவையடக்க, இன்னம்-மே லும், விநோதமாம்-விநோதமான, யோகத்தால்-யோகத்தினால்; அருத் திபோலூதுமூச்சை - அருத்தியைப்போலவூதாநின்ற சுவாசத்தை, சு கமுடனடக்கின்-இன்பத்தோடு மொடுக்கின், நிற்கும்-அடங்கும்-கருத் ததற்கில்லையென்னில்-அதற்குமனமின்றாயின், காரணசரீரமாகிப்பெ ருத்த- காரணதேகமாகத்தடித்த, ஓரவித்தைதன்னை - ஒப்பற்றவவித் தையை, பிடிக்கில்-பெயர்க்கின், அடங்கும்-ஒடுங்கும்—எ-று.

(இ-ம்) பிராணபந்தனவுபாயத்தைக்கௌணமாகக்கூறியவித்தைநீ க்கவுபாயத்தைமுக்கியமாகக்கூறிறென்பதாம்,

(அ-கை) அவித்தையைக் களையுமுபாயமியாதென விருதலுக்குத் தரங்கூறல், (௱எ௰)

காரணசரீரந்தன்னைக்களைவதெவ்வாறென்றேதி
லாரணம்பொய்சொல்லாதே யதன்பொருளகத்திலுன்னிப்
பூரணமாகுமென்மேற் புவனங்கடோற்றமென்று
காரணைவந்ததாகிற் றரித்திடுவித்தையெங்கே.

(இ-ள்) காரணசரீரந்தன்னை-காரணதேகத்தை, களைவது-கெடுப்ப து, எவ்வாறென்றேதில்-எவ்விதமென்றுகேட்கில், ஆரணம்- வேதமா னது, பொய்சொல்லாதே-நிச்சயத்தைச்சொல்லுமாதலால், அதன்பொ ருள்-அதனருத்தத்தை, அகத்திலுன்னி உளத்திற்சிந்தித்து, பூரணமா குமென்மேல்-பரிபூரணமாகியவென்னிடத்தில்,புவனங்கடோற்றமெ ன்று,ஆரோபமாகச் சகங்கடோற்றுமென்று, தாரணைவந்ததாகில் - உ றுதிவந்ததானால், அவித்தை-அவித்தையானது,எங்கேதரித்திடும்- எ வ்விடத்திலிருக்கும்—எ-று

(இ-ம்) வேதநிச்சயப்படி குருவாக்கியத்தாற் சர்வம்பிரமமயமெ ன்னுமனுபமுண்டாயின் வித்தைநசிக்குமென்பதாம்

(அ-கை) சர்வம்பிரமமயமென்னுஞானமுதித்தற்கனுபவங்கூறல், (௱எக)

அப்படியிருக்கச்சித்தமலைதலால்விவகாரத்தி
லெப்படிகூடுமென்னிலென்னைவிட்டொன்றுமில்லை
யிப்படிகண்டவெல்லாமென்மயமென்கனுப்போற்
கற்பிதமென்றுதானேகாண்கின்றசித்துநானே,



(இ-ள்) விவகாரத்தில்-விவகாரங்களில், சித்தம்-மனமானது, அலைத லால்-சுழல்வதனால், அப்படியிருக்க, அங்ஙனநிற்க, எப்படிகூடுமெ ன்னில்-எங்ஙனங்கூடுமென்றால்,என்னைவிட்டொன்றுமில்லை-என்னைத்த விரவேறொருவஸ்துமில்லை, இப்படிகண்டவெல்லாம்- இவ்விதமாகக் கண்ட திரிசியங்களனைத்தும், என்கனுப்போல் - எனதுசொர்ப்பனத் தைப்போல, கற்பிதமென்று-பொய்யென்று, காண்கின்ற- பார்க்கின் ற,என்மயம்-எனதுருவமான,சித்துநானே-சைதன்னியமேநான்-எ-று.

(இ-ம்) கற்பிதமாகக் காணப்பட்ட திரிசியங்களனைத்துந் தனது சி ற்பிரகாசமாக விளங்குகின்றதென்னு மனுபவதிஷ்டியால்யாவுந் தன் மயமாகவிளங்குமெனல். (௱எ௨)

(அ-கை) இச்சித்தேயானந்தவடிவமாமென்பதாம்.

சித்துநானிறைந்தோனென்றதிடமறவாதிருந்தா
லெத்தனையெண்ணிலுமேதுசெய்தாலுமென்ன
நித்திரையுணர்ந்தபின்புநிற்கின்றசனவைப்போல
வத்தனையும்பொய்தானேயானந்தவடிவநானே.

(இ-ள்) நான்-யான்-சித்து-சைதன்னியமாக-நிறைந்தோனென்ற-பூ ரணமானவனென்னும் திடமறவாதிருந்தால்-திடப்பிரஞ்ஞையோடுகூ டியிருந்தால், எத்தனையெண்ணிலும்-எவ்வளவு சங்கற்பித்தாலும்,எ துசெய்தாலும்-எக்கிரியைசெய்தாலும், என்ன- அதனாற்குற்றமென் ன, நித்திரையுணர்ந்தபின்பு-நித்திரைதெளிந்தபின்பு, நிற்கின்ற சன வைப்போல, நிற்குஞ்சொர்ப்பனம்போல், அத்தனையும் பொய்தான்- அவ்வளவுமித்தையாம், நானே-யானே,ஆனந்தவடிவு- ஆனந்தஸ்வரூ பமாம்—எ-று,

(இ-ம்) தானேசித்தென்னு மனுபவமுதிக்கில் யாவுமித்தையாய்த் தானானந்தவடிவனெனென்பதாம், (௱எ௩)

(அ-கை) இவ்வனுபவமுதிப்பதற் கேதுவானவுறுதிகூறல்,

நானெனவுடலைத்தானே நம்பினேனநேகசென்ம
மீனராய்ப்பெரியோராகி யிருந்தவையெலாமிப்போது
கானலில்வெள்ளம்போலக் கண்டுசற்குருவினாலே
நானெனவென்னைத்தானே நம்பியுமேடேறினனே.

(இ-ள்) அநேகசென்மம்- அநந்தசநநங்களில், உடலைத்தான்-தேகத் தை, நானென நம்பினேன்-யானென்றுநம்பினேன், ஈனராய்- இழிந்த வராகவும்-பெரியோராகி உயர்ந்தவராகவும்-இருந்தவையெலாம்- இரு ந்தவைகளனைத்தையும், இப்போது-இச்சமயத்தில்-கானலில்வெள்ளம் போல-கானற்சலத்தைப்போல, சற்குருவினால்-ஆசிரியருபதேசத்தினா ல், கண்டு-பார்த்து, என்னைத்தானே- எனதுபிரமவடிவத்தையே, நா னெனநம்பி-யானென்றுநம்பி, ஈடேறினேன்- ஈடேறினேன்—எ-று.

(இ-ம்) குருகிருபையினாற்றேகநானென்னுநம்பிக்கையைவிடுத்து ச்சித்தேநானென்னு நம்பிக்கையுண்டானாற் சின்மாத்திரமான முத்

தியைப்பெறுவனென்பதாம் (௱௭௪)

(அ-கை) குருகிருபையைவியந்துமகிழ்தல்.

என்னபுண்ணியமோசெய்தே னெதுபாக்கியமோகாணே
னன்னிலந்தனிலெழுந்த நாரணன்கிருபையாலே
தன்னியனானேனுத் தரீயத்தைவீசுகின்றேன்
றன்னியனின்னுநானே தாண்டவமாடுகின்றேன்

(இ-ள்) என்னபுண்ணியமோசெய்தேன் - என்னதருமஞ்செய்தேனோ, எதுபாக்கியமோ- யாதுபாக்கியப்பெற்றேனோ, காணேன்,தெரிகிலேன், நன்னிலந்தனில் - நன்னிலமென்னு நகரத்தில், எழுந்த-மானிடாகவவரித்த, நாரணன்-நாராயணனென்னுமெனதாசிரியரது,கிருபைபால்-கருணையினால். தன்னியனானேன் - கிருதார்த்தனானேன்,நான்-யான், உத்தரீயத்தைவீசுகின்றேன்-அங்கவஸ்திரத்தை யாகாயத்திலெறிந்து விளையாடுகின்றேன், தன்னியனானேன் கிருதார்த்தனானயானே, இன்னும்-மேலும்,தாண்டவமாடுகின்றேன்- நடனஞ்செய்கின்றேன்-எ-று. (௱௭௫)

(அ-கை) தன்னனுபூதி விளக்கத்துக்குத்தக்கநாமந் தனக்குத்தரித்தமாதாபிதாவைப்புகழ்தல்

தத்துவஞானம்வந்த சந்தோஷவதிசயத்தா
னித்தமாடுவன்காணென்ற நிலைமுன்னமேயறிந்த
சத்தியமதனாலன்றோ தாண்டவாவென்றழைத்தா
ரத்தனைமகிமையுள்ளோ ரன்னையும்பிதாவுந்தாமே

(இ-ள்) தத்துவஞானம்வந்த-அத்துவிதஞானமுதித்த- சந்தோஷவதிசயத்தால்-பேருவகையானவற்புதத்தினால்- நித்தமாடுவன்காணென்ற-எப்போதுமானந்த நடனஞ்செய்வனென்னும்- நிலை-நிலையை-முன்னமேயறிந்த சத்தியமதனால்- முன்பேதெரிந்த வுண்மையினால்-அன்றோ-அல்லவா-தாண்டவாவென்றழைத்தார் - தாண்டவாராயனென்னு நாமந்தரித்துக் கூப்பிட்டார் - அன்னையும்பிதாவும் - மாதாபிதாக்கள் - அத்தனைமகிமையுள்ளோர் - அவ்வளவுமகிமையையுள்ளவர்கள்—எ-று. (௱௭௬)

(அ-கை) திரதிசயானந்த வனுபூதியினாலமைகூறல்

வந்ததோரிவ்வானந்த மகிழ்ந்ததாரோடேசொல்வேன்
சிந்தையிலெழுந்துபொங்கிச் சகமெலாநிறைந்துதேக்கி
யந்தமில்லாததாயிற் றப்படிகுருவேதாந்த
மந்திரமருளுமீசன் மலரடிவணங்கினேனே.

(இ-ம்) வந்த-அறிவிலுதித்த-ஓர்-ஒப்பற்ற-இவ்வானந்தம்- இந்ததிரதிசயானந்தத்திலும்- மகிழ்ந்தது-மகிழ்ச்சியடைந்ததை - ஆரோடே சொல்வேன்-ஆரோடுரைப்பேன்-சிந்தையிலெழுந்து- உளத்திலுதித்து-பொங்கி-மேலிட்டு- சகமெலாநிறைந்துதேக்கி - உலகங்களனைத்திலும்



பூரணமாய்-அந்தமில்லாததாயிற்று-முடிவில்லாததாயினது- அப்படி-அவ்வணம்-வேதாந்தமந்திரம்- வேதமுடிவானமகாவாக்கியார்த்தாசசியத்தை-அருளீசன்-அருளாநின்றவிறைவனாகிய - குரு - தேசிகாதமலரடிவணங்கினேன் - கமலமலர்போன்ற திருவடிகளைத்தொழுதேன்-எ-று.

(இ-கு-க-ம்) சிந்தெனத்துதித்த வானந்தமதனைக் கணக்கச் சகசிவபாமானவனைத்தும் கானுகியசிதானந்த வடிவமாகவே வியங்குகின்றதெனவித்தியானந்தத்தைமுடித்ததாம். (௱௭௭)

(அகை.) இந்நூல்விளையும்பயன்கூறல்.

வித்தியானந்தமிந்த விதமெனவிளம்பினேமே
பத்தியாயிந்தநூலைப் பார்த்தனுபவித்தபேர்க
ணித்தியதருமநிட்டைநிலைதனையறிந்துசீவன்
முத்தியையடைந்திருந்து முனீஸ்வரராகுவாரே.

(இ-ள்) வித்தியானந்தம் ஞானானந்தமானது, இந்தவிதமென-இவ்வகையாமென்று, விளம்பினேம்-சொல்லினேம்,பத்தியாய்- அன்பாக, இந்தநூலைப்பார்த்து - இஞ்ஞானசாஸ்திரார்த்தத்தை யுணர்ந்து,அனுபவித்தபேர்கள்-அப்பொருளையறிந்தபடி யனுபவமானபேர்கள், நித்தியதருமநிஷ்டை நிலைதனையறிந்து-நித்தியமானஞானநிஷ்டையின் நிலைமையைத்தெரிந்து, சீவன்முக்தியடைந்திருந்து - சீவன்முத்திப்பதத்தைப்பெற்றிருந்து, முனீஸ்வரராகுவர் - முனிசிரேஷ்டராவர்கள்—எ-று. (௱௭௮)

(இ-ம்) வெளிப்படை.

(அ-கை.)குருவாக்கியப்படி இந்நூற்சம் பூரணமாயிற்றெனல்.

ஆரணப்பொருளாம்வித்தை யானந்தம்விளங்கவேதுங்
காரணக்குறைவில்லாமற் கைவல்யநவநீதத்தைப்
பூரணமாக்கவேண்டிப் பூர்வமாநன்னிலத்தி
னாரணகுருநமக்கு நவின்றனர்கனவில்வந்தே

(இ-ள்.) ஆரணப்பொருளாய்-வேதமுடிவினுள்ள மகாவாக்கியார்த்தமான, வித்தையானந்தம்விளங்க-ஞானானந்தம்விளங்கும் பொருட்டு, கைவல்யநவநீதத்தை - கைவல்யநவநீதமென்னு ஞானசாஸ்திரத்தை,எதும்எவ்வளவும்,காரணம்-எடுத்துக்காட்டுங்காரணங்களில், குறைவில்லாமல்-குறைவுபடாமல், பூரணமாக்கவேண்டி- நிறைவாகச்செய்ய விரும்பி, பூர்வமாநன்னிலத்தில்-பழமையாகிற நன்னிலமென்னுந் தலத்தின் மானிடவடிவமாகவெழுந்தருளிய, நாரணகுரு-நாராயணதேசிகரானவர், நமக்கு-எமக்கு, கனவில்வந்து- சொற்பனத்திற்றோன்றி, நவின்றனர்-அருளிச்செய்தார்—எ-று.

(இ-ம்) வெளிப்படை. (௱௭௯)

(அ-சை.) இந்நூலாசிரியர் சிறப்புகூறல்.

அண்ணறன்னருளினு லகம்புறமின்றியொன்ரு
யெண்ணமிலிலக்கியார்த்தத் தின்பொருளதுநானென்ன
நண்ணினசரீரமாதி நாதத்திறுபாதியென்றே
கண்ணதாயனைத்துக்காணக் காட்டினன்ருண்டவேசன்

(இ-ள்.) அண்ணறன்னருளினுல்- தேசிகாதுகிருபையினுல், அகம்புறமின்றி- உள்வெளியென்பதின்றி ஒன்ருய்-ஏகமாய், எண்ணமில்- எண்ணுதற்கரிய, இலக்கியார்த்தத்தின்பொருள்- இலக்கியார்த்தத்தின் பொருட்படி, அதுநானென்ன-பிரமமாகியவதுவேகூடஸ்தனுகிய நானென்னும்படி, நண்ணினசரீரமாதி - பொருந்தியதேகமுதலியவற்றை, நாததிறுபாதியென்று-மாயாஉபாதியென்றுகளைந்து, அனைத்தும்-சகலத்தையும், கண்ணதாய்-ஞானகாரமாய், காண-தரிசிக்கும்படி, தாண்டவேசன்- தாண்டவேசனென்னுமிந்நூலாசிரியர்காட்டினன்-தரிசிப்பித்தான்—எ-று.

(இ-ம்) வெளிப்படை.

(அ-சை) இம்மாயினை லனுபவமுதிக்கு மவர்களே சுவானுபவிக ளெனல் (௱௰)

ஆன்றபதமாமூன்றற்கு மதுநீயானுயெனும்பொருளிற்
சான்றதுரியாதீதமெனுந் தடையற்றிலங்சொன்னைசதன்னிய
மூன்றியுணர்ந்தோர்விகற்பமயக் கொழித்துத்தடையுமூடறுத்துத்
தோன்றித்தானேதானுவர் துலங்குவர்க்கேசுவானுபவம்

(இ-ள்) ஆன்ற-மாட்சிமையான, பதமாமூன்றற்கும்- மகாவாக்கியத்தின் றத்தொமசியென்னு மூன்றுபதத்திற்கும், அது - அதுவென்னும்பிரமமும், நீ-நீயெனுங்கூடஸ்தனும், ஆனுய்- இவ்விரண்டினையுமுர், எனும்பொருளின்-என்கிறவர்த்தத்தில், சான்ற- நிறைந்த, துரியாதீதமெனும், துரியாதீதமென்கின்ற, தடையற்றிலங்கும் - மறைபின்றியபரோக்ஷமாக விளங்குகின்றதென்னைசதன்னியம் - சுயந்தேசசுள்ளமெய்யுணர்வை, ஊன்றியுணர்ந்தோர்-ஸ்திரமாகத்தெரிந்தவர்கள், விகற்பமயக்கொழித்து-பேதமானபிரமையைநீக்கி-தடையுமூடறுத்து-அறிவின்மலையுங்கெடுத்து - தோன்றி- சதோதயமாய், தானேதானுவர்-தன்மயமாவர்-அவர்க்கே-அவ்வறிஞர்க்கே- சுவானுபவம்-சுவானுபவமானது-துலங்கும்-பிரகாசிக்கும்—எ-று.

(இ-ம்) வெளிப்படை,

(அ-சை.) இந்நூலாசிரியர் தன்னுசிரியனைப்புகழ்தல். (௱௧௧)

என்னுமாவாக்கியநான்குமிசைக்கும்வித்யானந்தமிது
சொன்னநாராயணன்பாதந்தொழுதுதித்தோர்களற்ருே
ரின்னமாணுக்கன்குருவாசற்சந்தேகந்தீர்ந்திடுபதத்தே
துன்னிநிறைந்துநின்ருேர்கயேமுத்தராகுவரோ



(இ-ள்) என்னும்-சுபாவமென்கின்ற-மாவாக்கியநான்கும்- நான்கு வேதத்தின்முடிவான நான்குமாவாக்கியங்களும் - இசைக்கும்-சொல்லும்-வித்யானந்தமிது ஞானனந்தமிதுவாம்-சொன்ன-இதனையருளிய-நாராயணன்பாதம்-நாராயணனென்னுமாசிரியருபயபாதங்களை- தொழுது-வணங்கி—துதித்தோர்- துதிசெய்தவர்கள்—அகளற்றோர் களங்கமற்றவராவர்—இன்ன-இத்தன்மையான,மாணுக்கன் - சிஷினுனவன், குருவால்-ஆசிரியரால், சந்தேகந்தீர்ந்திட்டு- ஐயநீங்கிய, பதத்தே துன்னி-இப்பதத்தையடைந்து, நிறைந்துநின்றோர்கள்-பூரணமாகியிருந்தவர்கள், ஆட்முத்தராகுவர் - பரிசுத்தமானசிவன்முத்தராவார்கள்—எ-று.

(இ-ம்) நான்குவேதங்களின் முடிவிலுள்ள நான்குமகாவாக்கியார்த்தமு மொன்ருன விதஇயானந்தமே யனுபவமெனவு மஃதையடைந்தவர்களேசிவன்முத்தரொனவுங்கூறினதாம். (௱௧௨)

(அ-சை) இந்நூல்செய்தவிதங்கூறல்.

தத்துவவிள்க்கத்தாலுஞ் சந்தேகந்தெளிதலாலு
மொத்திருள்விடாதமாயா வுள்ளிருளிரியவோங்குஞ்
சித்ததாமொளிவிளங்கச் செய்துபின்விருத்திப்பேதப்
புத்தியால்வருமையத்தைப் புரையறத்தெளிவித்தாண்டான்

(இ-ள்) தத்துவவிளக்கத்தாலும்-தத்துவவிளக்கமென்றம் படலத்திலும், சந்தேகந்தெளிதலாலும்- சந்தேகந்தெளிதலென்னும் படலத்திலும், ஒத்து-பொருந்தச்செய்து, இருள்விடாத- அந்தகாரநீங்காத,மாயா-மாயையென்னும்,உள்ளிருளிரிய-அசத்திருள்கெட, ஓங்குஞ்சித்ததாமொளி- உயர்நின்றஞானப்பிரகாசத்தை, விளங்கச்செய்து-விசும்படிசெய்து,பின்-பின்பு,விருத்திபேதப் புத்தியால்- விருத்திவிகற்பமானவறிவினுல், வருமையத்தை- வாராநின்றசந்தேகத்தை, புரையறத்தெளிவித்து-குற்றமறத்தெளிவித்து, ஆண்டான்-இரட்சித்தாரிந்நூலாசிரியர்—எ-று. (௱௧௩)

(அ-சை) இந்நூலாசிரியனைத்துதித்தல்.

ஆண்டதேசிகனுமைய நாரணனந்தன்பாதம்
பூண்டுமூவாரோபத்தாற் பொய்ம்மயக்காய்வந்தத்தை
மாண்டநல்லபவாதத்தான் மாய்த்தருளுக்கத்தென்றும்
காண்டிடவைத்தளித்த காரணுபோற்றிபோற்றி

(இ-ள்) ஆண்ட-தடுத்தாண்ட, தேசிகனுமையன் - குருசாமியாகிய நாரணன்-நாராயணனென்னும், அனந்தன்-முடிவற்றவனது, பாதம்பூண்டு, திருவடியைச்சிரசிற்றரித்து - மூவாரோபத்தால், திரிவஸ்வாசகத்தென்னு மூன்றுவிதகற்பனையால், பொய்ம்மயக்காய்வந்தத்தை இல்லாதமயக்கமாயுண்டானதை, மாண்ட-மாட்சிமையான, நல்லபவாதத்தால் - நன்மையானவபவாதயுத்தியினுல், மாய்த்து - கெடுத்து, அருளுக்கத்து-கிருபாநோக்கத்தினுல், என்றுங்காண்டிட- எப்போ

து மபரோக்ஷஞானமாகத்தரிசிக்க - வைத்து - திருவடிசூட்டி - அளித்த - இரக்ஷித்த - காரணா போற்றிபோற்றி - காரணனே சரணஞ் சரணம் — எ-று. (௱அ௪)

(அ-கை) இந்நூலைப்புகழ்தல்.

குலவுசற்குருவின்பாதக் குளிர்புனற்றலைமேற்கொண்டா
ருலகினிற் தீர்த்தமெல்லா முற்றபேறடைவார்போல
நலமெய்யாகியகைவல்ய நவநீத நூலைக்கற்றூர்
பலகலைஞான நூல்கள் படித்தஞானிகளாய்வாழ்வார்

(இ-ள்) குலவு-விளங்காநின்ற - சற்குருவின் - தேசிகரின் - பாதக் குளிர்புனல்-அகத்தையும்புறத்தையும் குளிரச்செய்கின்ற பாததீர்த்தத்தை-தலைமேற்கொண்டால் - சிரத்தின்மேற்றரிக்கின் - உலகினில்-சகத்திலுள்ள-தீர்த்தமெல்லாம்-புண்ணியதீர்த்தங்களனைத்தும்-உற்றபேர்-ஸ்நானஞ்செய்தபயனை - அடைவர்போல - பெறுவார்களைப்போல்-நலமெய்யாகிய- நன்மையுமுண்மையுமாகிய - கைவல்யநவநீத நூலை-கைவல்யநவநீதமென்னு ஞானசாஸ்திரத்தை - கற்றூல் - அப்பியாசித்தால்-பலகலை-அனந்தங்கல்விநூல்களின் சாரமான-ஞான நூல்கள்-ஆத்மஞானசாஸ்திரங்களை-படித்தஞானிகளாய்- அப்பியாசித்தஞானவான்களாக-வாழ்வார்-வாழ்வார்கள் — எ-று. (௱அ௫)

(இ-ரு-கம்) சுருதிகுருசுவானுபவங்களை நவநவமாகத்துதித்தாம்

சந்தேகந்தெளித்தபடலம்-முற்றிற்று.

ஆ படலம்-உ - இ - செய்யுள் (உ௱௩)

கைவல்லியநவநீத - மூலமுமுரையும்
முற்றுப்பெற்றது.